

# அம்ருதா

Amrudha Tamil Monthly

Volume 19 Issue 09 April 2025 Rs.30

ஆண்டு 19 இதழ் 09 ஏப்ரல் 2025 ரூ.30

**நோபல் உரை**
ஸால் பெல்லோ



**ட்ராகன்**
திரைப்படமாகும்
‘ரீல்ஸ்’ கலாசாரம்

**இளையராஜா சிம்பொனி**

# பண்ணைபுரம் முதல் லண்டன் வரை

பிரபு திலக்

ஆண்டு 19 இதழ் 09



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

ஏப்ரல் - 2025 விலை ரூ. 30

கௌரவ ஆசிரியர்
**திலகவதி**

ஆசிரியர்
**பிரபு திலக்**



**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

## இந்த இதழில்...



# கருணாகரன் கவிதைகள்

ஓவியம்: **சௌம்யா ராமலிங்கம்**

## 1. இரண்டு காட்சிகள்

**காட்சி 1**

எல்லாத் தெருக்களிலும் ஒருத்தி திரிகிறாள்...

யாரந்த ஒருத்தி?
எதற்காக திரிகிறாள்?

எப்போதிருந்து திரிகிறாள்?
எங்கிருந்து வந்தாள்
எங்கே செல்வாள்?

யாருண்டு அவளுக்கு?

இரவிலா பகலிலா
இரவிலும் பகலிலும்
வெயிற் பொழுதிலும் மழையிலுமா?

யாருடைய ஆட்சியின்போது
யாருடைய ஆட்சிக்குப் பின்
யாருடைய ஆட்சிக்கு முன்?

மெல்ல மெல்ல
தெருக்களெல்லாம் அவளுடைய மனதிலே
ஏறிக் கொண்டன

மெல்ல மெல்ல
தெருக்கள் அவளுடைய நினைவைச்
சூடிக் கொண்டன

அதற்கு முன்
கண்காணிப்புக் கமெராக்கள்
நூறு நூறு கோணங்களில்
பதிந்தன

கண்காணிப்புக் கமெராக்களிலிருந்துதான்
தொடங்கியது புலனாய்வு

புலனாய்வு அறிக்கையில்
கலங்கியது அரசு

அரசையே கலங்க வைத்தாள்
தெருக்களில் திரியும் ஒருத்தி
அதற்குப் பிறகு
எந்தத் தெருக்களிலும்
அவளைக் காணவேயில்லை

தெருக்களெல்லாம் அவளுடைய மனதிலே
தெருக்களிலே அவளுடைய நினைவுகள்...

**காட்சி 2**

எந்தத் தெருவிலும் ஒருத்தன் இல்லை
என்று பதட்டமடைந்தது புலனாய்வுத்துறை

இல்லாத ஒருத்தனைக் குறித்து
எந்தப் பதிவுமில்லை

கண்காணிப்புக் கமெராக்கள்
அவனைப் பதிய முடியாமற் தோற்றன

எந்தத் தெருவிலும் இல்லாத ஒருத்தன் யார்?
எங்கே இருக்கிறான்?
எப்படியிருக்கிறான்?
ஏனவன் தெருவுக்கு வருவதில்லை?

கண்டறியுமாறு
காவற்துறைக்குக் கட்டளையிட்டது அரசு

எந்தத் தெருவிலும் இல்லாத ஒருவன்
கலங்கடித்தான் அரசை

எந்தத் தெருக்களிலும் இல்லாத ஒருத்தனைத்
தேடிக் கொண்டேயிருக்கிறது அரசு.



## 2. சொல்

நீண்டதொரு அறிக்கையை
சமர்ப்பிக்க வேண்டிய நிபுணர்
ஒரேயொரு சொல்லில்
எல்லாவற்றையும் முடித்துக்கொண்டார்

அந்தச் சொல் என்னவென்று
அறிய முற்பட்டது
கல்வித்துறை
காவல்துறை
புலனாய்வுத்துறை
ஆராய்ச்சித்துறை
மொழித்துறை
வரலாற்றுத்துறை

ஒவ்வொரு துறையிலும்
அந்தச் சொல்லைக் குறித்து
ஏராளம் வியாக்கியானங்கள்
எல்லா வியாக்கியானங்களுக்கும்
துணைக்குறிப்புகள், அடிக்குறிப்புகள்,
மேலதிக விளக்கக் குறிப்புகள்...

இறுதியில் அறிக்கைத்துறைக்கு
ஆயிரமாயிரம் சொற்களாலான
அறிக்கைகள் வந்து சேர்ந்தன.

அரசுக்கு எதுவுமே புரியவில்லை
அதைப் புரிய வைப்பதற்கு
எழுதிக் கொண்டிருக்கிறார்கள்
ஆயிரமாயிரம் சொற்களாலான
விவரக் குறிப்புகளை

## 3. இடைவெட்டு

அது இரவும் பகலுமில்லாத ஒரு நாள்
அந்த நாளில் நீங்களும் நானும்
சந்தித்துக் கொண்டோம்
உங்களுடைய
நினைவை மீட்டுக் கொள்ளுங்கள்
இரவும் பகலுமில்லாத ஒருநாள்
என்பதைக் குறித்து
நாங்கள் பேசிக் கொண்டோமல்லவா!
அன்று நாம் அருந்திய கோப்பிக்கு
குயிலின் ருசியிருந்தது

நினைவைச் சரிபார்த்துக் கொள்ளுங்கள்
கோப்பியை நாம்
அருந்திக் கொண்டிருந்த வேளை
குயில் பாடியது
என்பதால்
'இந்தக் கோப்பி குயிலின் ருசி'
என்றீர்கள்...

அன்று நாங்கள் சென்ற இடங்களில்
நிழலே இருக்கவில்லை
ஒளியுமில்லை இருளுமில்லை

'அற்புதங்களின் மீது நடந்து செல்கிறோம்'
என்றேன்

ஆயிரமாயிரம் பூக்களாகியது
உங்கள் முகம்

'அது மனதிற் பூத்த மலர்' என்றீர்கள்

இரவும் பகலுமில்லாத நாளில்
முடிவுமில்லை தொடக்கமுமில்லை

வானமாக விரிந்திருந்த நாளில்
காற்றைப்போல நாங்களிருந்தோம்

காற்றைப்போலிருந்த நாம்
கல்லாகியது எப்போது?
வானமாக விரிந்திருந்த நாள்
இரவாகவும் பகலாகவும் பிளவுண்டது எப்போது?

*mail to:* **poompoom2007@gmail.com**

# வியர்வை அடையாளம்

படிக்கட்டுகள் என்னுடையவையல்ல. இந்த நடைக் கூடம், தலைக்கு மேலிருக்கிற விட்டங்கள், இந்தக் கட்டிடம், முற்றம், வழி, விளையாட்டு மைதானம், கொன்றை மரம், புத்தகங்கள், ஆசிரியர்கள்... இவையெவையும் அவர்களுடையவளாக என்னை நினைக்கப் போவதில்லை. சந்திரிகா அக்கா சொன்னது நிஜம்தான்.

● சாரா ஜோசப்　　தமிழில்: தி.இரா. மீனா

ஓவியம்: உஷா சாந்தாராம்

வருத்தப்பட்டுக் கொண்டே, ஒவ்வொரு படிக்கட்டிலும் தங்கி, நான் படியிறங்கினேன். என் காலணிகளைத் தூசி சூழ்ந்திருந்தது. உள்ளங் கால்கள் வியர்த்திருந்தன. குதிகால்கள் பிளந்தும் ரணப்பட்டும் இருந்தன. ஒரு லட்சம் ஹவுசிங் காலனி*க்கும் இந்தக் கல்லூரிக்கும் இடையிலுள்ள தூரம் உண்மையில் மிக அதிகமானது. நான் எப்படியோ அந்த தூரத்தைக் கடந்து மூச்சுத் திணறலோடு இந்தப் படிகளை அடைந்திருக்கிறேன். பழமையான, மகத்தான இந்தப் படிகளில் ஒரு புழுவைப் போல நின்றேன். எனக்கு முன்னால் என் தந்தை, தாய், அல்லது சகோதரர்கள் என்று யாரும் இந்தப் படிகளைப் பார்த்ததில்லை. என் திகைப்பு அவர்களுக்குமானது.



தேர்வுக் குழுவின் முன்னால் ஒரு புகாரைக் கொடுப்பதற்காக நான் நின்றிருந்தேன். பிறை வடிவ அமைப்பில் பதினொரு உறுப்பினர்களைக் கொண்ட குழுவினர் உட்கார்ந்திருந்தனர். சாதாரணமாக நான் எதைப் பற்றியும் புகார் கொடுப்பவளில்லை. அவர்கள் என்னிடம் நியாயமற்ற முறையில் நடந்துகொண்டதால் நான் புகார் செய்தேயாக வேண்டும் என்று செய்தித்தாள் முகவராக இருக்கிற சந்திரிகா அக்கா சொன்னாள்.

தினமும் விடியற்காலையில் முற்றத்தை நான் பெருக்கிக் கொண்டிருக்கும் போது, சந்திரிகா அக்கா சைக்கிளில் செய்தித்தாள் கட்டுக்களோடு வேகமாகப் போவதைப் பார்ப்பேன். சைக்கிளை விட்டு இறங்காமல், தரையில் ஒரு காலை வைத்துக்கொண்டு என்னிடம் அது இது என்று எல்லாமும் பேசுவாள். குனிந்த நிலையிலிருந்து நிமிர்ந்து, தென்னை விளக்குமாற்றின் முனையைப் பிடித்து, தரையில் தட்டிச் சமப்படுத்திக்கொண்டே நானும் அக்காவிடம் சில விஷயங்கள் பேசுவேன். பத்தாம் வகுப்புத் தேர்வில் நான் டிஸ்டிங்ஷனில் தேறியிருப்பதை சந்திரிகா அக்காதான் எனக்கு முன்கூட்டியே சொன்னவள். அவள்தான் கல்லூரியிலிருந்து விண்ணப்பம் வாங்கி வந்து, நிரப்பி, என்னைக் கையெழுத்திடச் செய்து, கல்லூரியில் கொடுத்து, தரவரிசைப் பட்டியலைப் பார்த்து எனக்கு முடிவைச் சொன்னவள். என் பெயர் தகுதிப் பட்டியலில் இல்லையென்றும் இட ஒதுக்கீடு பட்டியலில்தான் சேர்க்கப்பட்டிருக்கிறது என்றும் சொல்லி அவள் குழப்பினாள். தகுதிப் பட்டியல், தரவரிசைப் பட்டியல் என்பதெல்லாம் என்ன என்று எனக்குத் தெரியவில்லை. எனக்கு ஒரே ஒரு சிந்தனைதான்: எதுவாக இருந்தாலும் நான் கல்லூரியில் சேர வேண்டும். வயிற்றுப் பிழைப்பிற்காக நான் வேலை செய்து கொண்டிருந்த வீட்டின் முற்றத்தில்

---

** ஒரு லட்சம் ஹவுசிங் காலனி: கேரளத்தில் எழுபதுகளில் ஏழைகளுக்காக உருவான இலவச வீட்டுத் திட்டம்*

*சிறுகதை, கட்டுரை மற்றும் நாவல் இலக்கிய உலகில் தனக்கென தனி முத்திரை பதித்திருக்கும் சாரா ஜோசப், சாகித்ய அகாதெமி, வயலார் விருது உள்ளிட்ட பல விருதுகள் பெற்றவர். 'மனுஷி ' என்னும் பெண்ணிய அமைப்பின் நிறுவனர்.*



விளக்குமாற்றைத் தூக்கியெறிந்து விட்டு, நேராகக் கல்லூரியின் படிக்கட்டுகளுக்குப் போய்விட வேண்டும்.

"முட்டாள்." அக்கா வெறியில் கத்தினாள். "உன்னை மாதிரி இருப்பவர்கள் ஒரு நாளும் முன்னேறப் போவதில்லை." அதற்கு மேல் என்னிடம் ஒரு வார்த்தை கூடப் பேசாமல் சைக்கிள் மணியை அடித்துக்கொண்டே வேகமாகப் பெடலை அழுத்திக்கொண்டே போய்விட்டாள். செய்தித் தாள்களை கொடுத்துவிட்டுத் திரும்பும் போதுதான் என்னிடம் பேசுவாள். அதனால், முற்றத்தைப் பெருக்கித் துடைத்து, பாத்திரங்களைக் கழுவி வைத்துவிட்டு, கைகளைப் பாவாடையில் துடைத்துக்கொண்டு அக்காவிற்காகக் காத்திருந்தேன்.

"இதை இப்படியே நீ விட்டுவிடக் கூடாது. உனக்கென்று பெருமை எதுவும் இல்லையா? நீ ஒரு புகார் அளிக்க வேண்டும்" என்றாள் அக்கா.

"புகார் கொடுக்க வேண்டுமா? நானா? அது எனக்குப் பிரச்சனையாகி விடாதா?" அக்கா விதிகளை விளக்கினாள். "சேர்க்கைக் கமிட்டி விதிகளை மீறியிருக்கிறது. உனக்கு நியாயம் கிடைக்க வேண்டாமா?"

யார் தான் நியாயத்தை விரும்பாமலிருப்பார்கள்? ஆனால், மற்றவர்களைப் போல நானும் புகார் அளிப்பதில் மெத்தனமாக இருந்தேன். அக்கா என்னிடம் சண்டை போட்டுவிட்டு வெறியோடு வெளியேறினாள். கமிட்டி என் விஷயத்தில் நியாயமாக நடந்து கொள்ளவில்லை என்பது எனக்குப் புரியும் வரை திரும்பத் திரும்பப் பேசினாள். நியாயம் எனக்கு மறுக்கப்பட்டிருப்பதை உணர்ந்தபோது நொந்து போனேன். அவர்கள் ஏன் என்னை அந்த அமைப்பிலிருந்து புறக்கணிக்கின்றனர்? பொதுத் தர வரிசைப் பட்டியலென்பது உயர்வான மதிப்பெண்களைப் பெற்ற மாணவர் சேர்வமைப்பு. அவர்களில் நான் முதன்மையானவளாக இருந்திருக்க வேண்டும். இட ஒதுக்கீடு பட்டியலிலும் மதிப்பெண்களின் அடிப்படையில் நான் அங்கு வரிசைப்படுத்தப்படவில்லை என்றும் வேறு சில சலுகைகளின் கீழ் அவர்கள் என்னைத் தேர்வு செய்துள்ளதாகவும் அக்கா சொன்னாள். வேறு பல சலுகைகள்? அவை என்ன ? மரபு வழி, நிறம், சாதி, மதம், உடை, மொழி... எவ்வளவு பயமெனக்கிருந்தாலும் புகாரளிக்க

வேண்டுமென்று நானும் நினைத்தேன். ஆனால், எனக்கு ஒரு சிறிதும் கௌரவ உணர்ச்சி இல்லையென்று ஓராயிரம் தடவை சந்திரிகா அக்கா குறை சொன்னதால் மட்டும்தான், ஒரு லட்சம் ஹவுசிங் காலனிக்கும் கல்லூரிக்கும் இடையேயான பகுதியைக் கடக்க வேண்டுமென்ற வெறி பிறக்கக் கிளம்பினேன். புகார் எழுத அக்கா எனக்குதவி செய்யவில்லை. "செய்தித்தாள்கள் முகவர் மூலமாகக் கல்லூரி மாணவர்கள் புகாரளிக்க மாட்டார்கள். போராடு... நீயே எழுது... போய்க் கொடு" என்றாள் அக்கா.

அதனால் நானே புகாரை எழுதினேன். என்னுடைய புகாரைப் படித்தவுடன், 'இப்படி ஒரு புகாரை நீ கொடுத்திருப்பது வியப்புத்தான்!' என்று சொல்வது போல கமிட்டி உறுப்பினர்கள் என்னை உற்றுப் பார்த்தனர். "அவர்களைப் பார்க்கும் போது ஒரு படி பின் வாங்குவாய்" என்று அக்கா எச்சரித்து இருந்தாள். அது சரிதான், நான் லேசாகப் பின் வாங்கினேன். "எவ்வளவு தைரியம் உனக்கு? இப்படி ஒன்றைச் செய்த பிறகு உன்னால் எப்படி இந்தக் கல்லூரியில் படிக்க முடியும்? நாங்கள்தான் உனக்கு கற்பிக்கப் போகிறோம். நீ எப்படி எங்கள் முகத்தைப் பார்ப்பாய்? இப்படிச் செய்ய யார் சொல்லித் தந்தார்கள்? இந்த மாதிரிப் புகாரை நீ எழுதியிருக்கக் கூடாது" என்று உறுப்பினர்களில் ஒருவர் சொன்னார்.

'என் முயற்சியால் நல்ல மதிப்பெண்கள் எடுத்திருந்த நான் அப்பாவித்தனத்தால் இப்படிச் செய்துவிட்டேன்; போனால் போகட்டு'மென்று சொல்லி அவர்களே சமாதானம் செய்துகொண்டார்கள். ஆனால், அவர்கள் உண்மையில் சமாதானமாகவில்லை என்று எனக்குத் தோன்றியது. "தகுதிப் பட்டியல் அல்லது இட ஒதுக்கீட்டுப் பட்டியல் என்று நீ எதில் இருந்தாலென்ன? முக்கியமான விஷயம் உனக்கு இங்கு இடம் கிடைப்பதுதான். அது பெரிய விஷயமில்லையா உனக்கு?"

அது எனக்குப் பெரிய விஷயமில்லை என்று தோன்றியது. அதனால் நான் பேச்சற்றும் உணர்வற்றும் நின்றேன். கமிட்டியின் முன்னாலான என் நிலைப்பாடு பத்தாம் வகுப்பில் உயர்ந்த மதிப்பெண்களைப் பெற்ற ஒருத்திக்குப் பொருத்தமானதாக இல்லை. எப்படி என்னால் பெருமையாக நிமிர்ந்து நிற்க முடியும்? மரபு வழி, நிறம், சாதி, மதம், உடை, மொழி... நான் கருப்பு நிறம், சிறியவள். குறுகிய முகம்; மெலிந்த கை, கால்கள்; யாரைப் பார்த்தாலும் பீதியடையும் கண்கள். தலையில் எப்போதும் எண்ணெய். நீண்ட கூந்தல், பிளவுபட்ட முடிகளோடு. என் இரண்டு கைகள் எப்போதும் ஒரு புத்தகத்துடன் நெஞ்சை மறைத்தபடி இருக்கும். என் கைகளை நெஞ்சிலிருந்து எடுக்க வேண்டுமென்றால் பயத்தில் நடுங்குவேன். என் உதடுகளும் கைகளும் எப்போதும் வியர்த்துச் சில்லென்றிருக்கும். சிம்மாசனம் போன்ற இருக்கைகளில் அவர்கள் பிறை வடிவ அமைப்பில் என் முன்னால் உட்கார்ந்திருந்தாலும் அறையின் மையத்தில் நான் உட்கார்ந்திருப்பது போல உணர்ந்து நடுங்கினேன்.



"தர வரிசைப் பட்டியலில் நீ இரண்டாவது இடத்திலிருக்கிறாய். இட ஒதுக்கீடுப் பட்டியலில் முதலிடத்திலிருக்கிறாய். இதில் எது உயர்வு?"

இளம் பெண்ணான என்னை அவர்களுடைய இனிமையான பேச்சால் ஏமாற்றும் தந்திரமான பார்வை அவர்கள் கண்களிலில் தெரிந்தது. புகாரை என் கைகளில் திருப்பிக் கொடுத்தார்கள். நான் அவர்களுக்கு பதில் சொல்வதற்கு முன்னால் தங்களுக்குள்ளாகவே அவர்கள் பேசிக் கொண்டுவிட்டு, என்னையும் அவர்கள் கலந்துரையாடலில் பங்கேற்க வைத்தது போலப் பேச்சை முடித்தனர். "இந்த மாணவி இட ஒதுக்கீடு பட்டியலுக்குப் போய்விட்டால், நம்முடைய மாணவிகளில் ஒருவர் தர வரிசைப் பட்டியலுக்குள் வரலாம். இங்குமங்குமாக இவர்களை மாற்றி..."

'இப்போது எல்லாம் சரியாகி விட்டதல்லவா?' என்று சொல்வது போல என்னைப் பார்த்து லேசாகச் சிரித்தனர். என் புகார்க் கடிதத்தை மேஜை ஓரத்தில் ஒதுக்கி வைத்தனர். அவர்களுக்கு நிறைய வேலையிருந்தது. என்னைப் பற்றி முழுவதுமாக மறந்துவிட்டுத் தங்கள் வேலையில் ஆழ்ந்தனர். நின்ற இடத்திலிருந்து நகர்ந்தால் வியர்வையும் தூசியும் கலந்த கால் சுவடுகள் தரையில் படிவதைப் பார்த்து விடுவார்களோ என்று எனக்குப் பயமாக இருந்தது. என் கையை நீட்டி புகார்க் கடிதத்தை எடுக்க முயன்ற போது யாரும் என்னைக் கவனித்து விடக்கூடாது என்பதில் கவனமாக இருந்தேன். எப்போதும் என்னைச் சந்திரிகா அக்கா திட்டுவது மனதுள் ஓடிக்கொண்டே இருந்தது. "என் முன்னால் நிற்காதே! உன் அழுகையைப் பார்க்க எனக்கு விருப்பமில்லை! நீ சொல்ல வேண்டியது என்னவோ அதை அவர்கள் முகத்தைப் பார்த்துச் சொல்லிவிட வேண்டும். இல்லையென்றால், நம்மைப் போன்றவர்கள் இங்கே வாழ முடியாது." ஆனால், நானோ என் சகோதரர்களோ என் தாய் தந்தையரோ அவர்கள் பெற்றோர்களோ அப்படியான ஒரு செயலைச் செய்ய தைரியமற்றவர்கள்.

மேல் மாடியிலிருந்து, பேராசிரியர் த்தேவனின் கண்கள் அவளைத் தொடர்ந்து கொண்டிருந்தன. ஒவ்வொரு படியிலும் வியர்வையிலும் தூசியிலும் பதிந்திருந்த சுவடுகள் சரித்திரச் சான்றுகள். தலையைக் குனிந்தபடி சென்ற அந்தப் பெண் சரித்திரத்தின் தொடர்ச்சி. இவையெல்லாம் சரித்திரத்தில் பதிவு செய்யப்படாமல் போகிறவை. ஒரு வரலாற்றுப் பேராசிரியராக இதில் தலையிட்டுச் சரித்திரத்தில் பதிவு செய்ய வேண்டியது தன் கடமை என நினைத்தார். அவருடைய சிந்தனைகள் இந்தத் திக்கில் போன போது அவருடைய வலது உள்ளங்கை நடுங்கத் தொடங்கியது. அது வழக்கமான ஒன்றுதான். அந்த மாதிரியான நடுக்கத்தாலான சில கணங்கள் சரித்திரமாகக் கருதப்படுபவை. உடலுக்கும் மனத்திற்கும் இடையேயான மோதல் வெளிப்பாடு அத்தகைய உணர்வாக வெளிவராவிட்டால் அவரால் வாழ இயலாமல் போய்விடும். மெதுவாகப் படிகளில் இறங்கிக் கொண்டிருக்கும் பெண்ணிடம் திரும்ப வரும்படி சொல்ல விரும்பி, தனது நடுங்கும் கைகளை நீட்டி, சைகை காட்ட பெரும் பாடுபட்டார். அவள் ஒவ்வொரு படியாக இறங்கிக் கொண்டிருந்தாள். ‘‘நான் வேகமாகக் கீழே இறங்கிப் போய் அவளுடன் பேச வேண்டும். என்னால் என்ன செய்ய முடியுமோ அதைச் செய்கிறேன்’ என்று சொல்லி சமாதானப்படுத்துவேன்’ என்று நினைத்தார்.

அவள் கீழே இறங்கிக் கொண்டிருந்தாள். மேலே வந்து கொண்டிருக்கும் வாட்ச்மேன் பாலன் நாயரிடம், ‘அவளைத் திருப்பி அழைத்து வரச் சொல்லலாம்’ என்று நினைத்தார். ஆனால், அவள் இரண்டு, மூன்று வராந்தாக்களைக் கடந்து கீழே இறங்கி கண்ணிலிருந்து மறைந்துவிட்டாள்.

வராந்தா தரையில் ஈரமான அவள் காலடிகள் மட்டும் மிஞ்சியிருந்தன. எதையும் பதிவு செய்ய முடியாமல் அவரது வலது கை நடுங்கியது. கழுத்து சுளுக்கிக் கொண்டாற் போல அவரது தலை சரித்திரப் புத்தகத்திற்குள் தொங்கியது. காலணிகளை அவிழ்த்தார். கண்ணாடியைக் கழற்றிக் கண்களைத் தேய்த்துக்கொண்டார். நா வரள, சுக்குத் தண்ணீர் குடிக்க வேண்டுமென்ற ஆசை வந்தது.

அந்த நேரத்தில் அவருக்கு மகள் நமிதாவின் வார்த்தைகள் ஞாபகத்திற்கு வந்தன. ‘உங்கள் பயம் உங்களுக்கு எந்த மீட்சியையும் தரப் போவதில்லை.’ பயம், சில சமயங்களில் நியாயமானது; ஆனால், பெரும்பான்மை நேரங்களில் அநியாயமானது. என் அணுக்களிலும் இந்த பயமிருக்கிறது என்பதுதான் கொடுமை. பஸ்ஸில், கடைகளில், திருமண வரவேற்பில், அலுவலகத்தில், ஆஸ்பத்திரியில், கோயிலில் என்று பயத்திலும் குழப்பத்திலும் அவர் தன் வார்த்தைகளை இழந்துவிடுவதை நமிதா கண்டுபிடித்து விட்டாள். அவளுடைய – சின்ன, பெரிய பயங்கள் — இருட்டு, திருடர்கள், போலீஸ்காரர்கள், பாம்புகள், துர்தேவதைகள், அம்மா, கடவுள் என்று எல்லா பயங்களுக்கும் அப்பா தான் காரணமென்று நினைக்கிறாள். நீ யாரிடம், எதற்காக பயப்பட வேண்டும்? என்று நமிதா எப்போதும் கேட்பாள். தன் அப்பா, தாத்தா, முன்னோர்கள் என்று எல்லோரும் தொடர்ச்சியாகக் கை கட்டி பயந்து நின்ற வரலாறுதான், அவர்களிடமிருந்து தான் அந்த பயம் தனக்கு வந்ததாக அப்பா நம்பினார். அந்த வியர்வைச் சுவடுகள் தன்னிடம் என்ன எதிர்பார்க்கிறதென்று அவருக்குத் தெரியும். அவர் தேர்வுக் கமிட்டியை நேரடியாகச் சென்று எதிர்கொள்ள வேண்டும் என்பதுதான் அந்த கோரிக்கை. அவர் நடுக்கத்துடன் மேஜையில் தலையைக் கவிழ்த்துக்கொண்டார்.

கொஞ்ச நேரப் படபடப்பிற்குப் பிறகு, எழுந்து, முகம் கழுவி, கண்ணாடியை அணிந்துகொண்டார். தேர்வுக் கமிட்டி கூடியிருக்கும் இடத்தைக் கடந்து, கடிதப் பெட்டி பக்கம் போனார். சரித்திரத் துறைப் பெட்டியில் கடிதங்களைக் குடைந்த போது அவர் மனதிற்குள் ஒரு கேள்வி எழுந்தது. ‘ஏன் அந்தப் பெண்ணின் பெயர் - அவள் என் நமிதா — தரப் பட்டியலில் இடம் பெறவில்லை? ஏன் இடம் பெறவில்லை என்று கேட்பதா அல்லது ஏன் கொடுக்கவில்லை என்று கேட்பதா? எப்படி நான் கேட்க வேண்டும்?’ இல்லாத கடிதங்களை பேராசிரியர் அந்தப் பெட்டியில் தேடினார். தனது திருமணப் புகைப்படத்தைப் பார்த்த போது தான் அன்பவித்த சக்தியற்ற நிலை இப்போதும் தனக்குள் எழுவதை அவர் உணர்ந்தார். உயரமாய், சிவப்பாய் ரேணுகா அவருடைய கருப்பான கைகளைப் பிடித்துக்கொண்டு அவருடைய சகோதரர்களோடும் கருப்பு சந்ததியோடும் நின்றிருந்தாள். அந்தப் புகைப்படம் எல்லாவற்றையும் சொல்லியது. தலைமுறைகளைக் கடந்த அந்த பயம் அவர்களின் பார்வையில் தெரிந்தது. மரபு வழி தந்த பிறப்பால் ரேணுகா நம்பிக்கையோடு கேமராவைப் பார்த்து நின்றாள். தன்னை ஆழத்திற்குள் இழுத்துத் தள்ளி விடுமென்ற பயத்திலிருந்து தப்பிக்க அவர் புகைப்படத்தை ஒளித்து வைத்துவிட்டார். எனினும் அவருடைய வாழ்க்கை வரலாற்றின் முக்கியமான சூழல்களில், அவருடைய திருமணப் புகைப்படம் மனத்தில் பரவி, வெற்றுப் புள்ளிகளை துடைத்துவிடும்.

இவையெல்லாம் மிக அற்பமானவை என்று தனக்குள் சொல்லிச் சிரித்துக்கொண்டே தேர்வுக் கமிட்டியைக் கடக்கிறார். ஒரு புகாரோடு அங்கே வந்து நின்ற பெண் உண்மையில் வரலாற்றுச் சூழலில் திருத்தம் என்ற தன்மையை உருவாக்கியவள் என்று சமாதானம் செய்துகொள்கிறார். ஆனால், அவர் கதவைத் திறக்கும் போது வராந்தாத் தரையில் அவள் விட்டுச் சென்ற பாதச் சுவடுகள் அவரைக் கடுமையாக அச்சுறுத்துகின்றன. ‘நாளை, ஆமாம், நாளை சில

விஷயங்கள் பற்றி நான் கண்டிப்பாகக் கேள்வி கேட்க வேண்டும். எந்தத் திருமணப் புகைப்படமும் நான் அதைச் செய்வதைத் தடுக்க முடியாது.'

"த்தேவம்மாஸ், இன்றைய வேலை முடிந்து கிளம்பிவிட்டீர்களா?" வாட்ச்மென் பாலன் நாயர் நேர்மையாகக் கேட்டான். ரேணுகா அவன் நேர்மையை நம்புவதில்லை. 'த்தேவம்மாஸ், த்தேவம்மாஸ்! அவன் வேண்டும் என்றே உங்களை அப்படிக் கூப்பிடுகிறான். நேற்றுச் சேர்ந்த இளைஞர்களைக் கூட "புரொபசர்" என்று கூப்பிடுகிறான். உங்கள் பெயரில் எழுத்துத் திருத்தம் செய்யும்படி எத்தனை முறை சொல்லியிருக்கிறேன்? அது ஒரே ஒரு எழுத்து மாற்றம்தான். உங்கள் பெயரிலுள்ள ட்டி (T) என்பதை டீ (D) ஆக மாற்ற வேண்டும். எல்லா அவமானமும் ஒழிந்து போகும்!"

பேராசிரியர் த்தேவன் தன் வியர்வையிலேயே குளித்தவரானார்.

வியர்வையின் மணம் மரபணுக்களில் தொடர்ந்து கொண்டிருக்கும். வயல் சேற்றின் முடை நாற்றம் நமிதாவிடம் தொடரும். பாரீஸ் நகரத்தின் அனைத்து வாசனைத் திரவியங்களும் கிடைத்தாலும் கூட அந்த முடை நாற்றத்தை விடப் போவதில்லை என்பதில் நமிதா உறுதியாக இருக்கிறாள். ●

*mail to:* **meenmix@yahoo.com**

*மலையாளத்தில் இருந்து ஆங்கிலத்தில்: ஏ. ஜே. தாமஸ்;*
*நன்றி:* The Greatest Malayalam Stories Ever Told A.J. Thomas, Aleph Company, India, *2023*

# எனது பயணம்

நான் நான்காம் வகுப்பு தேறும் வரை என் தந்தை மும்பையில் பணிபுரிந்தார். நானும் என் அண்ணனும் அங்கு தமிழ்வழிப் பள்ளிக்கூடத்தில் படித்தோம். வசித்தது மும்பையின் தமிழர் தீவான மாதுங்காவில். வீட்டில் குடும்பத்தினருடனும் மாலையில் தோழியருடன் பூங்காவில் விளையாடும் போதும் பேசியது தமிழ்.

● **ஆர். வத்ஸலா**

நானும் அண்ணனும் வாசித்தது 'கல்கண்டு', 'கண்ணன்'. பிறகு தந்தைக்கு குஜராத் மாநிலத்திலுள்ள ராஜ்கோட்டிற்கு மாற்றலாகியது. அங்கு அனைத்து பள்ளிகளிலும் குஜாராத்தி வழி கல்வி மட்டுமே இருந்தது. ஆண்பிள்ளை என்பதால் என் பெற்றோர் என் அண்ணனை சென்னைக்கு அனுப்பி, பாட்டி வீட்டில் தங்க வைத்துப் படிக்க வைத்தனர். என்னை குஜராத்தி பள்ளிக்கூடத்தில் சேர்த்தனர்.

வீட்டிலிருந்து பள்ளிக்கூடம் வெகு தூரம். தினம் நிறைய நடந்ததனாலோ அல்லது பள்ளிக்கூடத்தில் பாட புத்தகங்களிலும் கரும்பலகையிலும் எழுதப்பட்டிருந்த எழுத்துக்கள் மட்டுமல்லாது ஆசிரியர்களும் சக மாணவிகளும் என்ன பேசுகிறார்கள் என்பதுகூட புரியாததனாலோ, எனக்கு அடிக்கடி சுரம் வந்தது. பிறகு அது சரியாகி மருத்துவர் பள்ளிக்குப் போகலாம் என அனுமதித்தும், என் தாயார், "பெண் குழந்தை படித்து என்ன செய்யப் போகிறாள்? உடல் நலம்தான் முக்கியம்" எனக் கூறி என் படிப்பை நிறுத்தினார். பள்ளிக்கூடத்திற்கு அனுப்பாவிட்டாலும், ஒரு கிறிஸ்துவ பெண்மணியிடம் அனுப்பி ஆங்கிலம் மட்டும் தனியே கற்றுக்கொடுக்க ஏற்பாடு செய்தார் என் தந்தை. அதனால், திருமணச் சந்தையில் எனது மதிப்பு ஏறும் என்று அவர் எண்ணியிருக்கலாம். நல்ல வேளையாக, அங்கு வசிக்கிற சில தமிழ் குடும்பங்களைப் போல, வீட்டில் கூட குஜராத்தி அல்லது இந்தியில் பேசிக்கொள்ளாமல், நாங்கள் வீட்டில் தமிழில் பேசிக்கொள்வது தொடர்ந்தது.



அடுத்த மூன்று வருடங்கள் நான் பள்ளிக்கூடமே போகவில்லை. நாள் முழுவதும் வீட்டிற்கு வரும் 'ஆனந்த விகடன்', 'கல்கி', 'அமுதசுரபி', 'கலைமகள்', 'தினமணிக் கதிர்', 'மஞ்சரி' ஆகிய தமிழ் இதழ்களை வாசிப்பதிலும் வீட்டை சுற்றியுள்ள தோட்டத்தில் 'குண்டு சட்டியில் குதிரை ஓட்டுவதிலும் கழித்தேன். எனக்கு மிகவும் பிடித்த புதினம் கல்கியின் 'பார்த்திபன் கனவு.' அதன் கதாநாயகன் விக்ரமனாக என்னை கற்பனை செய்துகொண்டு, வீர அல்லது காதல் வசனம் பேசிக்கொண்டு, கற்பனைக் குதிரை ஓட்டியிருக்கிறேன், பல சமயம்! எந்த பொறுப்பும் கவலையும் இல்லாமல் முழுக்க முழுக்க கதைகளிலும் கற்பனையிலும் வாழ்ந்த அந்த நாட்கள் என் இலக்கிய வாழ்விற்கு வித்திட்டிருக்கக் கூடும்.

என்னுடைய பெற்றோருக்கு திரைப்படங்கள் பார்க்கப் பிடிக்கும். அங்கு இருந்த திரையரங்குகளில் பெரும்பாலும் இந்தி படங்களும் எப்போதாவது ஆங்கிலப் படங்களும் திரையிடப்படும். ஆங்கில இதழ்கள் பரிந்துரைக்கும் படங்களுக்கு எனது தந்தை எங்களை அழைத்துப் போவார். இந்தி மொழி நன்றாகப் புரியத் தொடங்கியது. படங்களோடு அற்புத இசையுடன் கூடிய பாடல் வரிகளையும் ரசித்தேன். நான் கவிஞரானதில் இவற்றிற்கும் இருக்கிறது ஒரு பங்கு.

மூன்றாண்டுகளுக்குப் பிறகு அப்பா மனம் மாறி என்னை மறுபடியும் பள்ளியில் நேரடியாக எட்டாம் வகுப்பில் சேர்க்க, என் குஜராத்தி வழி கல்வி பள்ளியிறுதி வரை தொடர்ந்தது. ஒன்பதாம் வகுப்பிலிருந்து பதினோராவது வகுப்பு (அங்கு அப்போதெல்லாம் அதுதான் பள்ளியிறுதி வகுப்பு) வரை எனக்கு குஜராத்தி மொழி வகுப்பெடுத்த திரு இந்துபாய் ஜோஷி ஒரு அற்புதமான ஆசிரியர்; இலக்கிய ஆர்வலர். அதிக பரிச்சயமில்லாத அந்த மொழியை கற்க நான் மிகவும் சிரமப்பட்டுக் கொண்டிருந்த நேரமது. ஆனாலும் அவர் சொல்லிக் கொடுத்த விதம் காரணமாக நான் அந்த மொழியில் பாட புத்தகங்களில் இருந்த கவிதைகளையும் சிறுகதைகளையும் ஆழ்ந்து ரசித்தேன். பிற்காலத்தில் முப்பது வயதில்



மூன்று வயதில்



எட்டு வயதில் (தம்பியுடன்)

சென்னை வந்த பிறகு நான் தேடி வாங்கிய பாரதியாரின் புத்தகத்தில் 'பாஞ்சாலி சபதம்' வாசிக்கையில் எனக்கு எப்படி புல்லரித்ததோ அதே மாதிரி எனது பதினான்காம் வயதில் மகாபாரதத்தின் பாஞ்சாலி சபதமெடுத்தத் தருணத்தைப் பற்றி பண்டைய குஜராத்தியில் புகழ் பெற்ற கவிஞர் கவி நானாலால் எழுதிய, 'பரத கோத்ரனா லஜ்ஜா சீர்' (பரத கோத்ரத்தினரின் மானம் காத்த சேலை) எனும் குறுங்காவியத்தை ஜோஷி சார் விளக்குகையில் எனக்கு புல்லரித்தது. எனது இலக்கிய பயணத்தில் அந்த வகுப்பும் ஒரு மைல் கல்.

பிறகு இளநிலை, முதுநிலை பட்டப் படிப்பில் ஆங்கில வழிக் கல்வி பெற்றாலும், நாற்பத்தியெட்டாவது வயதில் நான் முதன்முதலாக எழுதத் தொடங்கும் போது, இயல்பாக தமிழில் எழுதியதற்கு முக்கிய காரணம் வீட்டில் தமிழ் பேசியதால் நான் சிந்தித்ததும் தோட்டத்தில் சுற்றும்போது கற்பனையில் பேசியதும் தமிழில் என்பது தான் என கருதுகிறேன்.

நான் தமிழில் பிழையில்லாமல் எழுதுவதாக மறைந்த தமிழ்ப் பதிப்பாளர் திரு. க்ரியா ராமகிருஷ்ணன் ஒரு முறை கூறினார். (என்னை ஊக்குவிப்பதற்காக 'அதிக பிழைகளில்லாமல்' என்பதை அப்படி கூறியிருக்கலாம்!) அதற்கு காரணமாக இருந்தவர்கள் பத்தொன்பது வயது வரை நான் வாசித்த தமிழ்வாணன், லட்சுமி, கல்கி, தேவன், அகிலன், அநுத்தமா, ஆர். சூடாமணி, ராஜம் கிருஷ்ணன் ஆகியோரைப் போன்ற எழுத்தாளர்களே.

முதுநிலைப் பட்டம் பெற்றவுடன் திருமணம். ஓராண்டில் குழந்தை. மூன்றாண்டில் புகுந்த வீட்டிலிருந்து பிறந்த வீடு புகல்; நீதிமன்றம், மணமுறிவு, பணி தேடல், மென்பொருள் ஆக்கம் கற்றல் என இயங்கிய வாழ்க்கை என்னுடைய முப்பதாவது வயதில் திருப்தி தரும் பணியில் நான் அமர்ந்ததும் திரைப்படங்களில் வருவது போல் ஒரு 'சுபம்' எழுத முடிந்திருந்தால் நான் வேறு எதையும் எழுதியிருக்க மாட்டேன்.

குழந்தையை வளர்த்து ஆளாக்கவும் நல்ல கல்வி தரவும் போதுமான வருமானமும் (மிகச் சிறியதென்றாலும்), வளாகத்துக்குள் இருந்ததால் பாதுகாப்பான குடியிருப்பும் கிடைத்த நிம்மதியில் மிகுந்த ஆர்வத்துடன் பணிபுரியத் தொடங்கினேன் நான். பணியிலிருந்துக் கொண்டே மென்பொருள் துறையில் பகுதி நேர பட்டப்படிப்பில் சேர்ந்து எம். எஸ். என்னும் ஆராய்ச்சி முதுநிலை பட்டமும் பெற விண்ணப்பித்தேன்.

ஆனால், ஓரிரு மேலதிகாரிகளின், பெரும்பான்மையிலிருந்த ஆண் சக ஊழியர்களின், நெருங்கிய உறவுகளில் சிலரின் சொற்களும் செயல்களும்



*20 வயதில் (கல்லூரி படிப்பு முடித்த பின்னர்)*

என்னை கடுமையாக வருத்தின. இவ்வாறு பல ஆண்டுகள் நான் தொடர்ந்து துன்புற்று கையறு நிலையில் நின்ற சமயம் கைகொடுத்தன சில நட்புறவுகள். இதில் முக்கியமானவர்கள் திருமதி ஹேமா[1], செல்வி வ. கீதா[2] ஆவார்கள்.

என்னுடைய தலைமுறை பெண்களில் பெரும்பான்மையோரைப் போல சிறு வயதிலிருந்து எனக்கு நடந்த மூளைசலவை காரணமாக இயற்பியலில் முதுநிலை பட்டம் பெற்றிருந்தாலும் சென்னை இந்திய தொழில்நுட்ப கழகத்தில் மென்பொருள் துறையில் எம்.எஸ். எனும் முதுநிலை ஆராய்ச்சி பட்டம் வாங்கியிருந்தாலும் நான் ஒரு 'மக்கு' என்று முழுவதுமாக நம்பிக் கொண்டிருந்தேன்! அப்படியல்ல என்று சளைக்காமல் என்னுடன் ஆதாரபூர்வமாக விவாதம் செய்து எனக்கு உணர்த்தியது என்னை விட பதினைந்து வயது இளையவளான என் ஆருயிர் தோழி ஹேமா. எனக்கு முதன்முதலாக பெண்ணிய சிந்தனைகளை அறிமுகப்படுத்தியதும், வ. கீதாவின் 'சிநேகிதி' எனும் பெண்ணிய அமைப்பில் தான் இணையும் போது என்னையும் இணைத்ததும் தோழி ஹேமா தான். வ. கீதா மூலம் பெண்ணியம் பற்றி மட்டுமல்லாது சாதி, மதம், இனம், வர்க்கம் போன்ற அனைத்து படிநிலைகளும் நீக்கப்படாவிட்டால் ஆண் - பெண் சமத்துவ கனவு நனவாகாது என்பதும் எனக்கு புரிய வந்தது.

அந்த சமயம் கோழிக்கோடில் அனைத்திந்திய மகளிர் மாநாடு[3] ஒன்று நடைபெற்றது. அதை நடத்துவதற்கு பொறுப்பேற்றக் குழுக்களில் நானும் ஹேமாவும் உறுப்பினாராக இருந்த 'சிநேகிதி'யும் ஒன்று. அந்த மாநாட்டிற்கு பார்வையாளராக போகத் தீர்மானித்த ஹேமா என்னையும் அழைத்தாள்.

பெண்ணிய கோட்பாடுகளில் எனக்கு அதிக அளவில் பரிச்சயம் இல்லையென்பதால் நான் தயங்கினேன். ஆனால், ஹேமா, கீதாவின் வற்புறுத்தல் காரணமாக அவர்களுடன் கோழிக்கோடில் நடந்த அந்த மாநாட்டிற்கு பார்வையாளராகச் சென்றேன். பல்வேறு அமர்வுகள், பல பேச்சாளர்கள். சில உரைகள் புரிந்தன. ஆனால், என்னுள் மிகப் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தியது இவையல்ல. அங்கு இரண்டாயிரம் பெண்கள் – வேவ்வேறு மாநிலம், மதம், மொழி, சாதி,

---

1. *முனைவர் ஹேமா மூர்த்தி இந்திய தொழில் நுட்பக் கழகத்தில் கணினி துறை பேராசிரியையாக பணி புரிகிறார். இவர் ஸ்பீச் ரெகெக்னிஷன் (speech recognition) உபதுறையில் செய்துள்ள ஆராய்ச்சிக்காக பல்வேறு தேசீய, சர்வதேச விருதுகளை பெற்றுள்ளார். மாற்றுத் திறனாளிகளுக்கும் ஆங்கிலம் அறியா மாணவர்களுக்கும் பயனளிக்கும் வகையில் பேச்சிலிருந்து எழுத்துருவாக்குதல், அறிவியல் பேராசிரியர்களின் உரைகளை ஆங்கிலத்திலிருந்து பல்வேறு இந்திய மொழிகளில் உடனுக்குடன் மொழிபெயர்த்தல் போன்றவற்றை இவருடைய ஆராய்ச்சி சாத்தியமாக்கியுள்ளது*
2. *பெண்ணியவாதியும் களப் பணியாளரும் எழுத்தாளரும் மொழிபெயர்ப்பாளரும் சமூக வரலாற்று ஆசிரியருமான வ. கீதா, 1988 முதல் இந்திய பெண்கள் இயக்கத்தில் பணியாற்றி வருகிறார். இவர் பெண்ணியம், சாதீயம் பற்றி பல புத்தகங்கள் எழுதியுள்ளார்.*
3. *எண்பதுகளில் இந்தியாவின் வெவ்வேறு பகுதிகளில் செயல்பட்டுக் கொண்டிருந்த மகளிர் குழுக்கள் ஒருங்கிணைந்து அனைத்திந்திய மகளிர் இயக்கங்களின் மாநாடுகள் நடத்த முடிவெடுத்தன. மும்பையிலும் பாட்னாவிலும் மூன்று மாநாடுகள்(1981, 1982, 1988) நடத்தப்பட்ட பின்பு, நான்காவது மாநாடு 28/12/1990 முதல் 31/12/1990 வரை கோழிக்கோடில் நடைபெற்றது.*

வர்க்கத்தை சேர்ந்தவர்கள் - கூடியிருந்தனர். படிப்பறிவற்றவர்கள், உயர்கல்வி பெற்றவர்கள். எல்லோருக்கும் பொதுவானதாக இருந்த ஒரே ஒரு விஷயம் – அவர்கள் பெண்கள் என்பதும் பெண்களாக இருந்த ஒரே காரணத்தால் அவர்கள் துன்புற்றிருந்தனர் என்பதும்தான். பெண்ணியத்தை பற்றி எந்த ஒரு புத்தகத்தாலும் உணர்த்த முடியாததை அந்த உண்மை எனக்கு உணர்த்தியது.

மாநாட்டின் ஓர் அங்கமாகத் தனியாக இருக்கும் பெண்களுக்கானக் கூட்டம் ஒன்று நடைபெற்றது. இரவு எட்டு மணிக்குத் தொடங்கிய கூட்டம் முடிய நள்ளிரவு இரண்டு மணி ஆனது. எந்த அறிவுரைகளும் அங்கே பகிரப்படவில்லை. பெண்ணிய கோட்பாடுகள் எதுவும் அங்கு அலசப்படவில்லை. அங்கு வந்திருந்த நாங்கள் அனைவரும் எங்கள் அனுபவங்களை பகிர்ந்துகொண்டோம் - அவ்வளவு தான். அன்று நான் புதிதாய் பிறந்தேன். அதன் பின் என்னுடைய முதல் கவிதை தொகுப்பான 'சுயம்' முன்னுரையில் நான் எழுதியது போல்:

> என் சோகங்கள் என்னுடையவை என எண்ணியிருந்த வரை பெரும்பான்மையோரைப் போல நானும் ஒரு புன்சிரிப்புப் போர்வையின் கீழ் தவணை முறை தற்கொலையில் என்னை இழந்து கொண்டுதானிருந்தேன். அச்சோகங்கள் பெண்ணினத்தின் மிகப் பெருஞ்சோகத்தின் ஓர் அங்கமென புரிந்தபொழுது எழுந்த தார்மீகக் கோபம் கவிதை வடிவம் பெற்றது.

கோழிக்கோடிலிருந்து திரும்பிய பின் தமிழில் கவிதைகளும் சிறுகதைகளும் எழுதத் தொடங்கினேன். ஒரு புதினத்தின் முதல் ஆறு அத்தியாயங்களும் எழுதினேன். அப்பொழுது எனக்கு வயது நாற்பத்தியெட்டு.

அதன் பிறகு என் வாழ்க்கையில் அன்று வரை நான் சந்தித்திருந்த இன்னல்களின் பல பரிமாணங்களை திரும்பத் திரும்ப அலசி நான் புரிந்துகொண்டது :

1) ஆண் - பெண் சமத்துவம் பெற ஆணாதிக்க சிந்தனையால் மூளை சலவை செய்யப்பட்ட ஆண்-பெண் இருவருக்கும் விழிப்புணர்வு தேவை.
2) இனம், சாதி, வர்க்க ரீதியான சமத்துவமும் மத நல்லிணக்கமும் இல்லாமல் ஆண் - பெண் சமத்துவம் சாத்தியமல்ல.
3) ஒரு பெண்ணின் வலி அவளுடைய (ஒரு தனிப் பட்ட நபரின்) பிரத்தியேக வலி அல்ல, அது இவ்வுலகின் ஒட்டுமொத்த (universal) பெண்களின் வலியின் ஒரு அங்கம். இந்த universalisation சாதி, இன, வர்க்கம் என ஒடுக்கப்படும் அனைத்து பிரிவுகளுக்கும் பொருந்தும்.
4) இந்த புரிதல் மட்டுமே ஒடுக்கப்பட்ட அனைத்து பிரிவு மக்களுக்கும் நெஞ்சுரமூட்டும்.


26 வயதில் (குழந்தையுடன்)

இந்த புரிதல்தான் எனது நெஞ்சுக்கும் உரமூட்டியது. என் வாழ்க்கையின் பல ஆண்டுகளைத் தொலைத்த பின் நான் அடைந்த இப்புரிதலையும் அதனால் எனக்கு கிடைத்த மனவலுவையும் மற்ற பெண்கள் அப்படித் தொலைக்காமலேயே அடைய வேண்டும் என்பதற்காகவே நான் எழுதத் தொடங்கினேன். பணியில் இருந்தவரை பெரும்பாலும் கவிதைகளும் சில சிறுகதைகளும் எழுதினேன்.

1999ஆம் ஆண்டு பணியிலிருந்து விருப்ப ஓய்வு பெற்ற பிறகு என்னுடைய முதல் கவிதை தொகுப்பு 'சுயம்' (2000) வெளியாகியது. அடுத்த பல ஆண்டுகள் 'வட்டத்துள்' (2006), 'கண்ணுக்குள் சற்று பயணித்து' (2016) ஆகிய இரண்டு புதினங்கள் எழுதுவதிலும் 'வட்டத்துள்' இன் ஆங்கில மொழிபெயர்ப்பிலும் (2012), கலைஞர் பதிப்பகம் வெளியிட்ட 'வத்ஸலாவின் படைப்புலகம்' (2017) புத்தகம் தொடர்பான நேர்காணலுக்கான பதில்களை தயாரிப்பதிலும் கழிந்தன. அந்த காலகட்டத்தில் நான் கவிதைகள் அதிகமாக எழுதவில்லை. என்னுடைய இரண்டாவது கவிதை தொகுப்பு 'நான் ஏன் கவிஞராகவில்லை?' 2018ஆம் ஆண்டு வெளியாகியது.[4]

2020ஆம் ஆண்டு உலகத்தை சூறையாடிய கொரோனா நம்மை வீட்டுக்குள் முடக்கியது. அந்த சமயம் அதிர்ஷ்டவசமாக, 'நவீன விருட்சம்'



*56 வயதில் முதல் கவிதை நூல் 'சுயம்' வெளியீடு. சுஜாதா வெளியிட விக்ரமாதித்யன் பெற்றுக்கொள்கிறார்.*

இதழாசிரியர் திரு அழகியசிங்கர் அவர்களும் 'குவிகம்' இரட்டையரென அறியப்படும் திரு கிருபானந்தன் – சுந்தரராஜன் அவர்களும் நடத்தி வந்த இலக்கிய புலனக் குழுக்களைப் பற்றி கேள்விப்பட்டு அவற்றில் இணைந்தேன். சிறந்த புதிய நட்புறவுகளும் மறுபடியும் கவிதை எழுதுவதற்கான தூண்டுதலும் கிடைத்தது. சற்றும் எதிர்பாராத விதமாக எனக்குள் பெய்தது கவிதை மழை! முன் போலில்லாமல் அறித்திறன் பேசி, கலர்நோட் செயலி போன்றவற்றின் கருணையால் நினைத்தவுடன் மிக எளிதாக கைபேசியில் தட்டச்சு செய்து, உடனுக்குடன் பிழை நீக்கம் செய்து, செதுக்கி, மடிகணினி கோப்புக்களில் சேமித்து, புலனத்தில் பகிர்ந்து, விமர்சனமும் பெற முடிந்தது.

கோழிக்கோடில் நடந்த அனைத்திந்திய மகளிர் இயக்கங்களின் மாநாட்டில் எழுந்த புரிதல் காரணமாக எழுதத் தொடங்கிய நான், ஆண் - பெண் அசமத்துவத்தால் பெண்ணுக்கு இழைக்கப்படும் அநீதிகளை பற்றி பல கவிதைகள் எழுதியுள்ளேன். சமுதாயத்தின் படிநிலை இனம், மொழி, மதம், சாதி, வர்க்கம், வசிப்பிடம், பாலினம், என்று பல பரிமாணங்களை சார்ந்திருக்கிறது என்றாலும் பாலினம் சார்ந்த படிநிலை மற்ற எல்லாவித படிநிலைகளுடன் எப்பொழுதும் கைகோர்த்து நடக்கிறது. அத்துடன் ஒரு பெண்ணாக நான் பெற்ற, பெறும் அனுபவங்கள் காரணமாய், என் கவிதைகள் பெண்ணின் வலியை பற்றி அதிக வலுவுடன் பேசுகின்றன.

படிநிலையை போலவே உணர்வு ரீதியாக நம்மை மிக அதிகமாக பாதிப்பது மனித உறவுகளின் உன்னதங்களும் பலஹீனங்களும் அந்த பலஹீனங்கள் உருவாக்கும் வலிகளும் ஆகும். ஆகவே, அவையும் இயல்பாக கவிதையாகின்றன என்னுள். ஆனால், ஒரு குறிப்பட்ட பாடுபொருளைத்தான் கையிலெடுக்க வேண்டுமென கட்சி கட்டுவது என்றுமே எனது நோக்கமாக இருந்ததில்லை. எனது வலிகளை பற்றி மட்டுமல்லாது எனக்குத் தெரிந்த மற்றவரின் வலிகளை பற்றியும் சமுதாயத்தின் படிநிலை காரணமாய் நடக்கும் அநீதிகளுக்கான உளவியல் காரணங்களை என்னால் இயன்ற வரை புரிந்துகொள்ள முயலுகிறேன். புரிந்தவற்றை கவிதைகளின் மூலம் பகிர்கிறேன்.

**வத்ஸலாவின் தேர்ந்தெடுத்த கவிதைகள் நூலுக்கு எழுதப்பட்ட முன்னுரை. வத்ஸலா தேர்ந்தெடுத்த கவிதைகள்**
**வெளியீடு: Red River, New Delhi; பக்கங்கள் 532; விலை ரூ. 400**

உண்மை நிலையை சித்தரிக்க ஒரு கவிஞர் எல்லாருடைய வலிகளையும் அவர்களுக்கு இழைக்கப்படும் அநீதிகளையும் அனுபவிக்கத் தேவையில்லை. நடப்புகளை அறிதலும் பிறரின் வலியை கற்பனை செய்து பார்த்து உணரக் கூடிய புரிந்துணர்வும் அவருக்கிருந்தால் போதும்.

துன்பங்களையும் கோபங்களையும் தான் கவிதையாக வடிப்பேன் என்று நான் எந்த சபதமும் எடுக்கவில்லை. என்னுடைய புரிதல்களை, நான் கற்ற பாடங்களை மட்டுமல்லாது, எனது மகிழ்ச்சிகளையும் மற்றவர்களுடன் பகிர்ந்துக்கொள்வதற்காகவும் எழுதுகிறேன். "உன் உணர்வை எனக்கு கடத்துவது புத்தகம்" என்கிறார் கவிஞர் மதுவந்தி. அதன் தாக்கத்தில் நான் கூறுவது, "எனது உணர்வை எனது உணர்வை உனக்கு கடத்துகிறேன் கவிதையாக." ●

*mail to:* **vatsala06@gmail.com**

## தருமமிகு சென்னை - 15

# பன்னீர்செல்வம் நகரில் ஒரு வண்டிக்காரன் தெரு

'சென்னையில் வண்டிக்காரர்களுக்கு ஒரு தெருவா?' என்று உங்கள் கண்கள் விரிவடையலாம். சென்னை வயலும் ஏரியும் சூழ்ந்த கிராமங்களாகத்தான் இருந்தது.

● சந்தியா நடராஜன்

எல்லா விரிவாக்கங்களும் ஒரு நூற்றாண்டுக் காலத்தில் நிகழ்ந்தவையே. 'அப்போது' பொருட்களை ஏற்றிச் செல்ல மீன்பாடி வண்டி இல்லை; குட்டியானை என்கிற மினி லாரி இல்லை; போர்ட்டர் ஆப், டென்சோ, ஸ்விகி என்று எந்த வசதியும் இல்லை. குதிரை வண்டிகளில் மனிதர்கள் சவாரி செய்தனர். பார வண்டிகளில் பொருட்கள் கொண்டு செல்லப்பட்டன. மனிதனைக் கை ரிக்சாக்களில் வைத்து மனிதனே இழுத்துச் செல்லும் பரிதாப நிலையும் இருந்த அந்தக் காலத்தில்தான் வண்டிக்காரர்களுக்கு என்று அங்கங்கு வாழ்விடங்கள் அமைந்தன. அப்படி வண்டிக்காரர்களுக்கான தெருக்கள் 'வண்டிக்காரன் தெரு' என்று பெயர் பெற்றன.

அசோக் நகர் எல்லை மாம்பலத்தின் எல்லையைத் தழுவிக் கொள்கிற இடத்தில் ஒரு வண்டிக்காரன் தெரு இருக்கிறது. அதன் ஒரு முனை சைதையுடன் கைகுலுக்கிக் கொள்ளும். அரங்கநாதன் சுரங்கப் பாதையில் சிஐடி நகரிலிருந்து வந்து இறங்கி மேலே ஏறினால் எதிரே நிற்கும் சாலைதான் வண்டிக்காரன் தெரு. வலதுபுறம் வளைந்து செல்லும் சாலையில் திரும்பினால் கோவிந்தன் சாலை தொடங்கும். வண்டிக்காரன் தெரு முனையில்தான் திரு.வி.க நகரின் தி.மு.க சட்டமன்ற உறுப்பினர் தாயகம் கவியின் பழைய வசிப்பிடம் தென்படும். அந்த வீட்டின் முன்புறம் அவரது பெயர்ப்பலகை உங்களை வரவேற்கும். இந்த வண்டிக்காரன் தெரு நீண்டு சென்று அதன் மறுமுனை கோவிந்தன் சாலையைத் தொடும். அதற்கு இணையான தெரு 'தலையாரி தெரு'. வயல் சார்ந்த வாழ்வில் தலையாரி இல்லாமலா?



சிஐடி நகரிலிருந்து வந்து வண்டிக்காரன் தெருவில் நுழையும்போது இந்தத் தெருவில் இடது புறம் செல்லும் தெருவுக்கு ஒரு குழப்பமான பெயர் சூட்டப்பட்டுள்ளது. அந்தத் தெருவுக்குப் பால்மோர் தெரு என்று பெயர். பால், மோர் விற்றவர்கள் வாழ்ந்த தெருவா அல்லது பால்மோர் (Palmore) என்ற ஏதாவது ஆங்கிலேயர் ஒருவரின் பெயரா தெரியவில்லை. பால்மோர் தெருவின் நடுவில் வலதுபுறம் திரும்பினால் படவேட்டம்மன் தெரு. படவேட்டம்மன் பாதியில் திரும்பிப் பச்சையம்மனாக மாறும். படவேட்டம்மனும் பச்சையம்மனும் காவல் தெய்வங்களாக நின்று தலையாரியின் மேற்பார்வையில் வண்டிக்காரர்கள் நிறைந்த இந்தப் பகுதிக்குப் பன்னீர்செல்வம் நகர் என்று பெயர்.

யார் இந்தப் பன்னீர்செல்வம்?

நிச்சயமாகத் தமிழகத்தின் முன்னாள் முதல்வர் ஓட்டக்கார தேவர் பன்னீர்செல்வம் பெயரில் இல்லை இந்த நகர். ஒருவேளை திராவிட இயக்க முன்னோடிகளில் ஒருவரான பார் அட் லா பட்டம் பெற்ற, ஆங்கில அரசின் போர்க்கால அமைச்சரவைக்கு ஆலோசகராகப் பணியாற்றி விமான விபத்தில் உயிரிழந்த, சென்னை மாநிலத்தின் முன்னாள் உள்துறை அமைச்சர் ஏ.டி. பன்னீர்செல்வத்தின் பெயர் இந்த நகருக்குச் சூட்டப்பட்டிருக்கலாம். அல்லது ஒரு தலித் தலைவரின் பெயராக இருப்பதற்குக் கூட வாய்ப்பு உண்டு. இந்த இடப் பெயர் யூகத்திற்கு இரு காரணங்கள். ஒன்று பன்னீர்செல்வம் நகர் இன்றுவரை திராவிட முன்னேறக் கழகத்தின் கோட்டையாக இருந்து வருகிறது. இன்னொன்று, இப்பகுதி பெருவாரியான தலித் சமூகத்தினரின் வாழ்விடம் என்றும் சொல்லலாம். வயல்வெளி




*ஸ்ரீநிவாசா தியேட்டர்*

வேலை பார்த்தவர்கள், வண்டிக்காரர்கள் போன்ற அடித்தட்டு மக்கள் வாழ்ந்த இப்பகுதியின் அக்காலக் குடிசை வீடுகள் தொலைந்துபோய் கான்கிரீட் வீடுகளும் சிறு அடுக்ககங்களும் உருவாகிவிட்டன. சென்னை நகரின் வளர்ச்சி முகம் பன்னீர்செல்வம் நகர்.

1970-80கள் வரை இந்தப் பகுதியில் அடிதடி இல்லாத நாள் ஒன்று இருந்ததில்லை. நீயா நானா சவால்களுடன் வலம் வரும் கும்பல்களுக்கும் குறைவில்லை. ரயில்வே லைனுக்கு மறுபுறம் உள்ள கண்ணம்மா பேட்டை ஆட்கள் இந்த ஆடுகளத்தின் இன்னொரு அணியாக இருக்கும். அறிவிக்கப்படாத பதற்றம் நிறைந்த பகுதியான பன்னீர்செல்வம் நகரின் கைகலப்பு, அடிதடி, ஆவேசமான ஆர்ப்பரிப்பு, கொடூரத் தாக்குதல்கள் எல்லாம் கடந்தகாலக் காட்சிகள். இன்று தனியார் நிறுவனங்களுக்கும் கம்ப்யூட்டர் கம்பெனிகளுக்கும் நிறுவன அடையாள அட்டைகளுடன் செல்லும் இளைஞர்களைக் காண முடிகிறது. இந்தப் பகுதியில் ஒரு சர்ச்சும் அழகான பள்ளிவாசலும் எழுந்துவிட்டன. அநேகம் பேர் பெந்தகோஸ்ட் கிறித்துவர்களாக மாறியிருக்கிறார்கள். ஏனைய கிறித்துவ பிரிவினரும் தென்படுகிறார்கள். ஆனால், இஸ்லாமியர்கள் அதிகமில்லை.

வண்டிக்காரன் தெருவில் எனது நண்பர் சிதம்பரத்தின் வகுப்புத் தோழர் சிவக்குமார் வீடு இருந்தது. தற்போது அவரது குடும்பம் கோவிந்தன் சாலையின் மறுபுறம் உள்ள எல்லையம்மன் கோயில் தெருவுக்கு இடம் பெயர்ந்துவிட்டது. இடம்பெயர்ந்த இந்த வீட்டுக்கு எதிரே ஒரு பெரிய வாழைத்தோப்பு இருந்தது. அந்த இடத்தில்தான் தமிழ்நாடு வீட்டு வசதி வாரியத்தின் அடுக்கு மாடிகள் விண்முட்டி நிற்கின்றன. வாழைத்தோப்பை ஒட்டிச் செல்லும் வடிவேல்புரத்தின் அழகுக்கும் அமைதிக்கும் அளவில்லை. இதைப் போலவே சலசலக்கும் வண்டிக்காரன் தெருவின் தன்மைக்கு நேர் எதிராக, அதன் அருகிலேயே, தற்போது தரைமட்டமாக்கப்பட்டுவிட்ட ஸ்ரீநிவாசா தியேட்டரின் பின்புறம் உள்ள, தேவநாதன் காலனி வீடுகள், முன்புறம் நந்தியாவட்டைச் செடிகளுடன் எந்த ஓசையும் ஓலமும் இன்றி இருபுறமும் வரிசைகட்டி நிற்கின்றன. பெரும்பாலும் பிராமணர்கள் வாழ்கின்ற காலனி இது.

‘பன்னீர்செல்வம் நகர்க்காரர்கள் இந்தக் காலனியைப் பொறுத்த வரையில் அழையா விருந்தினர்களாக நடத்தப்பட்ட காலத்தில் வளர்ந்தவன் நான்’ என்கிறார் சிவக்குமார். தேவநாதன் காலனியை உருவாக்கியவர் ஸ்ரீநிவாசா தியேட்டரின் உரிமையாளர் தேவநாதன். இவர் என்.டி.ஆருக்கு ஆலோசகராக இருந்திருக்கிறார். எம்ஜிஆரிடமும் நெருக்கம் பெற்றிருக்கிறார். இவர் எழுப்பிய ஸ்ரீநிவாசா தியேட்டர் 55 ஆண்டுகளாக மாம்பலம், சைதை பகுதியை மகிழ்வித்து வந்தது. குறைந்த கட்டணம் வசூலித்து வந்த இந்தத் திரையரங்கின் முதல் படம் 1963இல் வெளிவந்த ‘பரிசு’. 2019இல் வெளியிடப்பட்ட ‘சர்க்கார்’ திரைப்படம் இந்தத் திரையரங்கில் ஓடிய கடைசிப் படம். ரியல் எஸ்டேட் துறையில் இறங்கி இந்த ஏரியாவில் பிரபலமாக இருந்தவர் தேவநாதன்.

சிவக்குமார் வாழ்ந்த வண்டிக்காரன் தெரு வீட்டுக்குப் பக்கத்து வீட்டுக்காரர்தான் குரோம்பேட்டை ‘வெற்றி-ராகேஷ்’ திரையரங்குகளின் உரிமையாளர் கிருஷ்ணன். கிருஷ்ணனின் தந்தை ராகவன் சென்னை எம்ஜிஆர் நகரில் செங்கல் சூளை போட்டு செங்கல் வியாபாரம் செய்து வந்தார். எம்ஜிஆர் நகரின் விளிம்பு முழுவதும் ஒரு காலத்தில் செங்கல் சூளைகள் இருந்தன. இந்த இடம் இன்று சூளைப்பள்ளம் என்றே அறியப்படுகிறது.

சூளைப்பள்ளம் ஆட்களிடம் வம்பு தும்புக்குப் போகக்கூடாது என்பார்கள் எம்ஜிஆர் நகர் மக்கள். வண்டிக்காரன் தெருவில் மாளிகை போலக் காட்சியளிக்கும் வீடு ராகவன் இல்லம் என்றழைக்கப்படுகிற கிருஷ்ணன் வீடு. தனது வீட்டுக்கு எதிரே அவர் எழுப்பியிருக்கிற அடுக்ககத்திற்குத் தனது பெற்றோர்களின் நினைவாக 'ராகவன் – நாகம்மாள்' என்று பெயர் வைத்திருக்கிறார். ஆரம்பத்தில் ஸ்ரீநிவாசா தியேட்டருக்குப் பக்கத்தில் கிருஷ்ணன் நடத்திவந்த உணவகம் போய் வெற்றி திருமண மஹால் உருவாகியிருக்கிறது.

கிருஷ்ணன் இந்தப் பகுதியின் திமுககாரர். மாநகராட்சி உறுப்பினராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டவர். இவரது வெற்றி திரையரங்கத்தை அந்நாளைய தமிழக அமைச்சர் சத்தியவாணி முத்து திறந்து வைத்திருக்கிறார். கிருஷ்ணனுக்கு ஆறு பெண்கள். அவரது பேரன் ராகேஷ் வெற்றி திரையரங்கத்தை நிர்வகித்து வருகிறார். 'ராகவன் நாகம்மாள்' அடுக்ககத்தில் சில ஆண்டுகள் திரைப்படப் பாடலாசிரியர் பா. விஜய் வசித்திருக்கிறார். திமுக கோட்டையாக இருந்து வரும் பன்னீர்செல்வம் நகரில் சூளை வியாபாரக் குடும்பத்திலிருந்து வந்த கிருஷ்ணன் ஒரு கோட்டை கட்டி வாழ்ந்திருக்கிறார். இதே பகுதியில்தான் திரு.வி.க நகர் சட்டமன்றத் தொகுதியின் திமு.க உறுப்பினர் தாயகம் கவி மக்கள் செல்வாக்குடன் அரசியலில் இயங்கி வருகிறார். திராவிட முன்னேற்றக் கழகத்தின் இளைஞர் அணி துணைச் செயலாளராகவும் பணியாற்றி வருகிறார்.

பன்னீர்செல்வம் நகருடன் தொடர்புடைய இன்னொரு அரசியல் பிரமுகர் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் தலைவரான செல்வப் பெருந்தகை என்கிறார் எனது நண்பர் சிவக்குமார். மணிமங்கலம் கிராமத்தைப் பூர்வீகமாகக் கொண்ட இவரது உறவினர் சொக்கலிங்கம் வீடு இங்குதான் உள்ளது. பெருந்தகை ரிசர்வ் வங்கியில் பணியாற்றிய காலத்தில் இங்கு இருந்திருக்கிறார்.

சிவக்குமார் கொஞ்ச காலத்திற்கு அம்பேத்கர் பிரியன் என்பவர் நடத்தி வந்த அம்பேத்கர் பேரவையின் பொருளாளராக இருந்தவர். டிவிஎஸ் நிறுவனத்தில் வேலை பார்த்து வந்த சாம்ராஜ் மற்றும் தலைமைச் செயலகத்தில் பணியாற்றிய அருளானந்தம் ஆகியோர் இப்பகுதியில் பேரவையின் பொறுப்புகளில் இருந்து செயல்பட்டிருக்கிறார்கள். ஆனால், திமுகவின் செல்வாக்கைப் பிற இயக்கங்களால் குறைக்க முடியவில்லை.

வண்டிக்காரன் தெரு சிவக்குமாரின் வளர்ச்சியைத் தலித் எழுச்சியின் ஓர் அடையாளமாகக் கண்டுகொள்ள முடியும். சிவக்குமாரின் தந்தை ஆந்திர மகிளா சபாவில் நேர்முக உதவியாளராகப் பணி செய்தவர். சிவக்குமார் ஒரு டைப்ரைட்டிங் பயிற்சிப் பள்ளியில் தட்டச்சு மற்றும் சுருக்கெழுத்துப் பயிற்சியில் தேர்ச்சி பெற்று



எம்ஜிஆர்., வித்வான் வெ.லட்சுமணன்

அண்ணா பல்கலைக் கழகத்தில் ஒரு சாதாரண எழுத்தர் பணியில் சேர்ந்தார். தொலைதூரக் கல்வி மூலம் எம்.காம் வரை படித்துப் பட்டம் பெற்றார். அவர் ஓய்வு பெறும்போது அண்ணா பல்கலையின் துணைப் பதிவாளராகப் பதவி உயர்வு பெற்றார். அவருக்குக் கீழ் ஐம்பது பேர் பணிபுரிந்தனர்.

அரங்கநாதன் சுரங்கப் பாதையிலிருந்து கோவிந்தன் சாலைக்குச் செல்லும் சாலைக்குப் பெயர் ரெட்டி குப்பம் சாலை. இங்குள்ள அடுக்ககத்தில் எழுத்தாளர் வண்ணநிலவன் 2000 வாக்கில் வசித்து வந்தார். துக்ளக்கில் விடுதலைப் புலிகளுக்கு எதிரான கட்டுரைகள் எழுதிவந்த காலம் அது. பெரும் மன அழுத்தத்துடன் அவர் வசித்த வீடு அது. பிறகு கோடம்பாக்கம் யுனைடெட் இந்தியா காலனியில் ஓர் அழகான அடுக்ககத்திற்கு வந்தபின் அவர் அமைதியும் ஆனந்தமும் எய்தினார். 2000ஆம் ஆண்டில்தான் வண்ணநிலவனின் மொத்தக் கதைகளையும் ஒரு பெருந்தொகுப்பாகச் சந்தியா பதிப்பகம் வெளியிட்டது.

எம்ஜிஆரின் மனம் கவர்ந்த பாடலாசிரியரும் வசனகர்த்தாவுமான வித்வான் வெ.லட்சுமணன் இங்குதான் வாழ்ந்தார். அவர் ஒரு சிறந்த ஜோதிடராகவும் அறியப் பெற்றவர். 'நீயும் பொம்மை நானும் பொம்மை' இவர் எழுதிப் பிரபலமான பாடல். எம்ஜிஆர் பிக்சர்ஸ் கதை இலாகாவில் பணியாற்றிய வெ.லட்சுமணன் 1925இல் பிறந்து 2005இல் மறைந்தார்.

தருமமிகு சென்னையின் கருணைக்கு அளவே இல்லை! கோவிந்தன் சாலையின் ஒரு புறம் ஐயர்கள் அதிகம் என்றால் மறுபுறம் ஆதி திராவிடர்கள் வசம் இருந்த பன்னீர்செல்வம் நகர் உள்ளது. இந்நகரின் இன்னொரு எல்லையில் முதலியார்களும் மற்றொரு திசையில் வன்னியர்களும் வளத்துடன் வாழ்ந்தனர்.

தருமமிகு சென்னையின் இலக்கணம் இதுதான், பல்குடியும் கலந்து இனிது உறையும் மாநகர் சென்னை.

பன்னீர்செல்வம் நகர், எம்ஜிஆர் நகர் மற்றும் சில புறநகர்ப் பகுதிகளில் இருந்து, கட்டிட வேலை செய்யும் தொழிலாளிகள் அடுக்ககக் கட்டுமானப் பணி நடக்கும் இடங்களுக்கு வருவார்கள். கொத்தனார் வேலையைச் சென்னையில் கொளத்து வேலை என்கிறார்கள். பெரிய கொத்தனாருக்கு மேஸ்திரி என்ற மரியாதைக்குரிய பெயர் வழங்கப்படும். இப்படித் தன்னிடம் வேலை செய்த பலரைத் தனியே கட்டுமானத் தொழில் செய்யும் முதலாளிகளாக மாற்றிய பெருமைக்குரியவர் சோழா பவுண்டேஷன் நிறுவனரான எம்கே சுந்தரம் என்கிற மாயவரத்துக்காரர் மாந்தோப்பு காலனி அருகே வசித்து வருகிறார். வீட்டை ஒட்டியே அலுவலகம். இவர் கட்டிய அடுக்ககங்களுக்குச் சோழர் காலத்தை நினைவூட்டும் வகையில் குந்தவை, ராஜராஜன் போன்ற பெயர்களைச் சூட்டியிருக்கிறார். பல்லவ பூமியில் சோழ மன்னர்களையும் சோழ ராணிகளையும் உலவவிட்டவர் சுந்தரம். கருமமிகு காவிரிக்கரைக்காரரை வளர்த்தெடுத்தது தருமமிகு சென்னை.

1968ஆம் ஆண்டு மே மாதம் ஒரு சிறு பையில் இரண்டு செட் ஆடைகளுடன் சென்னை தேனாம்பேட்டையில் வந்திறங்கினார் சுந்தரம். தி. நகர் ரங்கநாதன் தெருவில் மாதம் 17 ரூபாய் வாடகைக்கு ஷண்முக விலாஸ் என்ற லாட்ஜில் தங்கியிருக்கிறார். கொஞ்சம் கொஞ்சமாகக் கட்டுமானத் தொழிலில் காலடி எடுத்துவைத்த சுந்தரம் அசோக் நகரில் உதயம் தியேட்டர் உருவானபோது அந்தக் கட்டிடத்தின் கட்டுமான ஆலோசகராக இருந்திருக்கிறார். உதயம் தியேட்டரின் உரிமையாளர்களான நமச்சிவாயம், சிவப்பிரகாசம், சுந்தரம் உள்ளிட்ட ஐந்து சகோதரர்களும் இவரது பணியைப் பாராட்டி ஒருவருக்கொருவர் போட்டி போட்டுக்கொண்டு ஊதியத்திற்கு மேலும் உபகாரம் செய்திருக்கிறார்கள்.

இவருக்குச் சென்னையில் கிடைத்த இன்னொரு முக்கியமான நட்பு, ஜி.ஆர் தங்க மாளிகையின் உரிமையாளர் ஜி.ராஜேந்திரனுடன் ஏற்பட்ட தொடர்பால் உருவானது. தங்க மாளிகை ராஜேந்திரனுக்கும் சுந்தரத்திற்கும் ஒரே ஆடிட்டர். அவர் பெயர் கோபாலன். இதே ஆடிட்டர்தான் இந்த இருவருக்குமான நட்புக்கு அடிகோலியவர்.

ராஜேந்திரனுக்குச் சொந்த ஊர் கும்பகோணம். இளவயதிலேயே தந்தையை இழந்த ராஜேந்திரனை வளர்த்து வந்தவர் அவரது தாய்மாமன். சென்னை பச்சையப்பன் கல்லூரியில் படிக்கும்போது மணலி ராமகிருஷ்ண முதலியார் பாரிஸ் கார்னரில் நடத்திவந்த இலவச ஹாஸ்டலில் தங்கி, படித்து வந்தார். பிறகு அவரது மாமா, தான் நடத்தி வந்த நகைக் கடையிலேயே அவரைச் சேர்த்துக் கொண்டார். 1964இல் ராஜேந்திரன் தி.நகர் ரங்கன் தெருவில் 500 சதுர அடியில் ஒரு நகைக் கடையைத் தொடங்கினார். அந்தக் கடையை மாற்றியமைக்கும் பணியை மேற்கொண்ட சுந்தரம் என்கிற மாயவரத்துக்காரர் ராஜேந்திரன் என்கிற கும்பகோணத்துக்காரரின் உலகில் பிரவேசித்தார். அன்று தொட்டு இன்று வரை இருவர் குடும்பமும் ஒன்றுக்குள் ஒன்றானது.

உஸ்மான் ரோடு தங்க மாளிகை கட்டிடத்தையும் சுந்தரம்தான் கட்டிக்கொடுத்தார். கட்டிய புதிதில் மாளிகையின் இரண்டாவது தளத்தில் ராஜேந்திரன் குடும்பத்தினர் வாழ்ந்து வந்தனர். முதல் தளத்தில் தங்க நகைகள் வைக்கும் அளவுக்கு அவரிடம் முதலீடு கைவசம் இல்லை. கோவை, சேலம் போன்ற நகரங்களின் நகைக்கடை அமைப்பையும் செயல்பாட்டையும் போய்ப் பார்த்துவிட்டு வந்து தனது கடையையும் நவீனமாக்கிய ராஜேந்திரன் பொருளைவிடத் தனது உழைப்பையும் எளிமையையும் முதலீடாகக் கொண்டு முன்னேறி வந்தார். 1980களில் நகைக்கடை வியாபாரம் என்பது அவ்வளவு எளிதானது அல்ல. தங்கக் கட்டுப்பாட்டு சட்டம் கடுமையாக அமல்படுத்தப்பட்டு வந்தது. ஜி.ஆர்.தங்க மாளிகை மாம்பலம்வாசிகளின் அன்புக்கும் நேசத்திற்கும் நம்பிக்கைக்கும் உரிய இடமாக மாறிவிட்டது. அப்போது மதியம் 1.30க்குக் கடையை மூடிவிட்டுப் பிற்பகல் 3 மணிக்குத் திறப்பார்கள். திறப்பதற்கு முன்பே சில மாமிகள் வந்து கடை வாசலில் அமர்ந்திருப்பார்கள்.

வாடிக்கையாளர்களுக்கும் ராஜேந்திரனுக்குமான உறவு எத்தகையது என்பதற்குச் சுந்தரம் ஒரு நிகழ்ச்சியை நினைவு கூர்ந்தார். ஒரு நாள் மூன்று மணிக்குக் கடையைத் திறப்பதற்குப் பதிலாக 10 நிமிடம் தாமதித்துத் திறந்திருக்கிறார் ராஜேந்திரன். கடைக்குள் முதலில் வந்த மாமி, "என்ன ராஜேந்திரா வசதி ஜாஸ்தியாயிடுத்தோ... சாப்பிட்டு நல்லா தூங்கிட்டியா.. காத்துக்கிடக்க வேண்டியதாயிடுத்து எங்கள் நிலைமை" என்று உரிமையோடு பேசியிருக்கிறார். இத்தகைய உறவே ராஜேந்திரனின் உயர்வுக்குக் காரணம் என்கிறார் உடனிருந்து மாமியின் வார்த்தைகளைக் கேட்ட சுந்தரம்.

தற்போது ராஜேந்திரனுக்கு வயது 83. ஜி.ஆர் தங்க மாளிகை கிளைகளின் எண்ணிக்கை 63. தென்னிந்தியாவில் கேரளாவைத் தவிர அனைத்து மாநிலங்களிலும் தங்க மாளிகை தடம் பதித்துவிட்டது. இன்னும் ராஜேந்திரனின் எளிமையும் தயாள குணமும் தொலைந்து போகவில்லை. ஊர் அறியாமல் ஆண்டுக்கு 50 ஏழை எளிய மாணவர்களுக்குக் கல்விக்கு ஆகும் செலவினைத் தனது அறக்கட்டளை மூலம் வழங்கி வருகிறார். அடையாறு புற்று நோய் மருத்துவமனைக்கு ஒரு கோடி ரூபாய் அளித்திருக்கிறார். விளம்பரம் விரும்பாத நகைக் கடைக்காரர் ராஜேந்திரன்.

அசோக் நகரில் சுந்தரம் போலவே இன்னொரு பில்டர் இருக்கிறார். அவர்தான் நியூடெக் நிறுவனத்தின் உரிமையாளரான நாகிரெட்டி என்கிற தெலுங்குக்காரர்.

கிரசென்ட் இன்ஜினியரிங் கல்லூரியில் பணிபுரிந்த என் நண்பன் ராஜசேகரனின் மாணவர். சரவணபவன் அண்ணாச்சிக்கு ஆலோசகராக இருந்த ராஜசேகர் மூலம் நாகிரெட்டி எனக்கு அறிமுகமானார். ரெட்டி, தான் கட்டப்போகும் அடுக்ககங்களுக்குப் பத்திரிகைகளில் விளம்பரம் கொடுத்து நான் பார்த்ததில்லை. அவரது வாடிக்கையாளர்களே அவரவர் நண்பர்களுக்கு ரெட்டியைப் பரிந்துரை செய்வார்கள். வாய்மொழி விளம்பரத்தால் வளர்ந்தவர் நாகிரெட்டி. ரியல் எஸ்டேட் துறை என்பது வன்முறை, வன்சொல், அடிதடி, போலீஸ் வழக்கு, நீதிமன்றம் அனைத்துக்கும் வழிவகுக்கும் தொழில் அல்லவா! ஆனால், நாகி ரெட்டி அதிர்ந்து பேசாதவர்; அடக்கமானவர்; சிரித்துக்கொண்டே, 'விலையை குறைக்க முடியாது' என்று நாசூக்காகச் சொல்லக் கூடியவர். எண்ணற்ற அரசு அதிகாரிகள் இவரது வாடிக்கையாளர்கள்; நண்பர்கள்.


இயக்குநர் விஜய்

நாகி ரெட்டியின் தந்தை விஜயா ரெட்டி ஆந்திராவில் மேற்கு கோதாவரி மாவட்டத்தில் உள்ள பெண்டபாடு என்ற ஊரைச் சேர்ந்தவர். 1950களில் தனது மனைவி தமயந்தியுடன் சென்னை கே கே நகரில் குடியேறியவர். ஆடம்பரமில்லாத வீடு அது. விஜயா ரெட்டி தெலுங்கிலும் குறிப்பாகக் கன்னடத்திலும் புகழ் பெற்ற திரைப்பட இயக்குநர். 1966இல் இவரது முதல் தெலுங்குத் திரைப்படம் 'ஸ்ரீமதி' வெளிவந்தது. ஏறக்குறையப் பத்துத் தெலுங்குத் திரைப்படங்களின் இயக்குநரான இவரைக் கன்னட நடிகர் ராஜ்குமார் கைப்பிடித்து அழைத்துச் சென்று தனது திரைப்படமான 'கந்ததகுடி'க்கு இயக்குநராக்கினார். திரைப்படங்களில் இவர் 'இயக்குநர் விஜய்' என்றானார். இவரது முதல் கன்னடப் படமான 'கந்ததகுடி'யைத் தொடர்ந்து 'மயூரா', 'சன்னாதி அப்பன்னா', 'பக்த பிரகலாதா', 'தேவி', 'நான் நின்ன மரியாலாறே', 'நான் நின்ன விடறாலே', 'தவறுமனே' போன்ற வெற்றிப்படங்களை இயக்கினார். இவர் இயக்குநராகப் பணியாற்றிய கன்னடப் படங்களின் எண்ணிக்கை சுமார் ஐம்பது. பத்துத் தெலுங்குப் படங்களையும் பதினாறு இந்திப் படங்களையும் இவர் இயக்கியுள்ளார். விஜய் இயக்கிய இந்திப் படங்களில் 'ஸ்ரீமான் ஸ்ரீமதி', 'ஜீனா மர்னா தேரி சங்', 'தேரி மெஹர்பானியான்' போன்ற திரைப்படங்கள் குறிப்பிடத்தக்கவை. அவரது கே கே நகர் இல்லத்திற்கு ராஜ்குமார், ஜாக்கி ஷெராஃப், ஸ்ரீதேவி, ஜெயப்ரதா உள்ளிட்ட அனைத்துத் திரை நட்சத்திரங்களும் வந்திருக்கிறார்கள். விஜய் தமிழ்ப்படங்கள் எதுவும் இயக்கவில்லை. சென்னையில் இருந்துகொண்டுதான் மற்ற மொழிப்படங்களை இயக்கினார். கன்னடத் திரையுலகம் இவருக்கு வாழ்நாள் சாதனையாளர் விருது வழங்கிச் சிறப்பித்திருக்கிறது. அவரைப் பற்றிய ஆவணப் படமும் தயாரித்திருக்கிறார்கள். தனது மகனைத் திரைப்படத்துறையில் நடிகனாக ஆக்க ஆசைப்பட்டார் விஜய். ஆனால், அதற்குள் நாகி ரெட்டிக்குத் திருமணம் ஆகிவிட்டது. தாடே பள்ளிக்கூடத்தில் இருந்து வந்து நாகி ரெட்டியின் கரம் பிடித்த நாகரத்தினம், தனது கணவர் நடிகனாவதை விரும்பவில்லை. மாமனார் மெச்சிய மருமகள் நாகரத்தினம். ஆனால், இந்த விஷயத்தில் மாமனாரின் கனவைத் தவிடு பொடியாக்கி விட்டார். நாகி ரெட்டி கடந்த முப்பத்தேழு ஆண்டுகளாக அடுத்தடுத்து அடுக்ககங்களைக் கட்டி வருகிறார். வெகுகாலம் கே.கே.நகரில் பெற்றோருடன் வாழ்ந்து வந்தார். இரண்டு வருடங்களுக்கு முன்பு அண்ணா நகரில் உண்மையிலேயே பிரமிக்கத்தக்க அழகு மாளிகை ஒன்றை உருவாக்கிக் குடி புகுந்திருக்கிறார். அந்த மாளிகையின் வடிவமைப்பாளர் பாராட்டுக்குரியவர்.

இந்தக் காலகட்டத்தில் சென்னையில் இயங்கிய அலாக்ரிடி (Alacrity) என்ற கட்டுமான நிறுவனத்தைப் பற்றிக் குறிப்பிட விழைகிறது மனம். அமோல் கர்நாடு என்ற மங்களூர்க்காரரும் மன்னார்குடி ஆதிச்சபுரத்தைச் சேர்ந்த ராமகிருஷ்ணனும் இணைந்து உருவாக்கிய நிறுவனம்தான் அலாக்ரிடி. இருவரும் மும்பையில் ஒரு நிறுவனத்தில் ஒன்றாகப் பணிபுரிந்தவர்கள். அமோல் ஆடிட்டர், ராமகிருஷ்ணா எம்பிஏ படித்தவர். இருவரும் சென்னைக்கு வந்து ஒரு கன்சல்டன்சி நிறுவனத்தைத் தொடங்கிய பின்னர் கட்டுமானத் துறைக்கு வந்தார்கள். அலாக்ரிடியின் முதல் அடுக்ககம் தியாகராய நகரில் கமலாம்பாள் தெருவில் 'பிரபாத் அபார்ட்மென்ட்ஸ்' என்ற பெயரில் 1981ஆம் ஆண்டு உருவானது. சென்னையில் இருபது ஆண்டுகளில் ஆயிரத்திற்கும் மேற்பட்ட குடியிருப்புகளை உருவாக்கிய அலாக்ரிடி 2000க்குப் பிறகு செயல்படவில்லை. 'யாருக்கும் லஞ்சம் கொடுப்பதில்லை. மாநகராட்சி விதிகளை இம்மியளவும் மீற மாட்டோம்' என்ற கொள்கையுடன் செயல்பட்ட நிறுவனம் அலாக்ரிடி என்பதே வரலாற்றில் பதிவாக வேண்டிய விஷயம். அலாக்ரிடியின் பரிவர்த்தனைகள் நூறு சதம் காசோலைகள் மூலம் மட்டுமே. 'Liquid Cash'க்கு அங்கு இடமில்லை. ராமகிருஷ்ணாவை அவரது திருமலைப்பிள்ளை தெரு அலுவலகத்தில் ஒரே ஒரு முறை சந்தித்திருக்கிறேன். எனக்கு அவரை அறிமுகம் செய்தவர் வருமான வரித்துறையில் பணியாற்றிய எனது நண்பர் கண்ணன். ராமகிருஷ்ணாவின் மனைவியும் அதே துறையில் பணியாற்றியவர்.
STRANGERS ARE MY LOVERS.

தொடரும்

*mail to:* **sandhyapathippagam@gmail.com**

# கட்டுரைத் தேரின் பெருந்தச்சன்

'மொரமொரென புளித்த மோர்', அ. முத்துலிங்கம் எழுதிய கட்டுரைகளுள் குறிப்பிடத்தக்கது. 'காலச்சுவடு' வெளியிட்ட ஓர் உணவுச் சிறப்பிதழுக்காக எழுதப்பட்ட கட்டுரை அது.

● மு. இராமனாதன்

பன்னாட்டு உணவு வகைகளைப் பேசும் அதன் முதல் வரியே, 'என் அம்மாவைப் பெண் பார்க்க வந்தபோது அவர் மரத்திலே ஏறி ஒளிந்து கொண்டுவிட்டார்' என்று தொடங்கும். யாழ்ப்பாணத்து உணவும் அம்மாவின் சமையல் திறனும் கட்டுரையின் ஆதார சுருதியாக ஓடும். கட்டுரையைப் படித்து வியந்து போன சுந்தர ராமசாமி, அப்போது அ. முத்துலிங்கத்தைத் தொலைபேசியில் அழைக்கிறார். 'முதல் வரியில் இருந்தே அம்மா காரெக்டர் சரியாக அமைந்துவிட்டது' என்று பாராட்டுகிறார். இதை வாசித்ததும் எனக்கு எங்கேயோ விளக்கு எரிந்தது. 'காரெக்டர்' என்றால் கதாபாத்திரம். கதாபாத்திரங்கள் கதைகளில்தான் வருவார்கள். அவர்களை ஆசிரியர் கற்பனையில் உருவாக்குவார். ஆனால், முத்துலிங்கம் எழுதியிருப்பதோ கட்டுரை. அசலான மனிதர்கள்தான் கட்டுரையில் வருவார்கள். இவ்விடம் கற்பனைப் பாத்திரங்களுக்கு அனுமதி இல்லை. அப்படியானால் சுந்தர ராமசாமி தெரியாமல் சொல்லிவிட்டரா? இல்லை. கட்டுரையில் வரும் அம்மா நிஜ அம்மாதான்; ஆனால், முத்துலிங்கத்தின் விவரிப்பில் அவர் ஒரு கதாபாத்திரம் ஆகிவிடுகிறார். அதாவது அ. முத்துலிங்கம் எனும் கதாசிரியர் படைப்பிலக்கியத்தின் மொழியையும் வடிவத்தையும் எடுத்துக்கொண்டு கட்டுரை எழுதுகிறார். இந்தக் கட்டுரைகளில் கதைகளின் சுவாரஸ்யம் இருக்கிறது. கூடவே கட்டுரைகளின் நம்பகத்தன்மையும் இருக்கிறது. அதே வேளையில் பொதுவாகக் கட்டுரைகளில் இருக்கும் தகவல்களின் இறுக்கம் இல்லை. தகவல்களைப் புனைவின் மொழியில் நெய்து தரும் அவரது லாவகத்தால் வாசகனுக்கு இலக்கியத்தரமான கட்டுரைகள் வரவாகின்றன.



அ.முத்துலிங்கம் அறுபதுகளில் தன் இலக்கிய பயணத்தை தொடங்கியவர். அப்பயணத்தில் சிலகாதம் பயணித்து சிறுகதைகளில் வெகுகாலம் தங்கிய பின்புதான், அதாவது புத்தாயிரமாண்டிற்குப் பிறகுதான் அவர் கட்டுரையெனும் புத்தூருக்கு வந்து சேர்கிறார். அந்த ஊரில் அவரைக் கண்டதும் வாசகர்கள் அவரைக் கொண்டாடுகிறார்கள். அ. முத்துலிங்கத்திற்கும் இந்த புதிய ஊர் பிடித்துப் போகிறது.

அவரது கட்டுரைகளின் வசீகரத்திற்கு என்னவெல்லாம் காரணமாக இருக்குமென அந்த கட்டுரைகளில் தோய்ந்து மூழ்கி அதன் விதவித நயங்களை இந்த நூலில் கைபாகத்தோடு சேர்த்து பரிமாறுகிறார் சிற்பி பாலசுப்பிரமணியம். இந்த நூலுக்காக இரண்டு பென்னம் பெரிய 'அ.முத்துலிங்கம் கட்டுரைகள்' (நற்றிணைப் பதிப்பகம் - 2018) எனும் தொகை நூல்களைப் பயன்கொண்டிருக்கிறார் சிற்பி. இந்தத் தொகை நூல்களில் இடம்பெறும் கட்டுரைகள் இதற்கு முன்பு வெளியான முத்துலிங்கத்தின் கட்டுரை நூல்களில் இடம்பெறும் அதே வரிசைக்கிரமத்தில் இடம் பெறுகின்றன.

இந்தக் கட்டுரைகள் பொருண்மை வாரியாக அடுக்கப்பட்டவையல்ல. ஒரு பயணக் கட்டுரைக்கு அடுத்து ஓர் அனுபவக் குறிப்பும் அதற்குப் பிறகு ஒரு புத்தக மதிப்புரையும் இருக்கும். பிரான்ஸ் காஃப்காவும் பத்மினியும் அடுத்தடுத்த பக்கங்களில் சந்தித்துக்கொள்வார்கள். ஒரு செவ்விலக்கியத்தின் சிறப்பும் ஓர் ஆளுமையின் தகைமையும் ஒன்றன் பின் ஒன்றாக இடம்பெறும். எனில், இவை வாசிப்பனுபவத்திற்குத் தடையாக இருப்பதில்லை. ஏனெனில் ஒவ்வொன்றும் தம்மளவில் முழுமையான கட்டுரைகள்.

ஆனால், முத்துலிங்கத்தின் கட்டுரைகள் அனைத்தையும் ஒரு சேர மதிப்பிட்டு 'அயல் மகரந்தம்' எனும் இந்த நூலில் சிற்பி குறுகத் தரித்து தரும்போது



அவற்றைப் பொருண்மை வாரியாக தொகுத்துக்கொள்கிறார். அ. முத்துலிங்கத்தின் கட்டுரைகளின் உள்ளடக்கத்தை உலகம், நூல் நயம், ஆளுமைகள், மொழி, மனிதம், தகவல், விளையாட்டு, இலக்கியம், சூழலியல், அங்கதம், ஈழம் ஆகிய பொருண்மைகளில் அவர் வகைப்படுத்திக் கொள்கிறார்.

அ. முத்துலிங்கத்தின் பல கட்டுரைகள் இந்தத் தலைப்புகளில் ஏதேனும் ஒரே பொருண்மையின் கீழ் வருகின்றன. சில கட்டுரைகளில் ஒன்றுக்கும் மேற்பட்ட பொருண்மைகளில் உரையாடல் நிகழ்கிறது. சிற்பியின் கவனம் குறிப்பிட்ட பொருண்மையின் கீழ் முத்துலிங்கம் என்னவெல்லாம் சொல்லியிருக்கிறார் என நுட்பமாய் நோக்குதலே. இதற்காக ஒவ்வொரு தலைப்பின் கீழும் பல்வேறு கட்டுரைகளிலிருந்து சாறைப் பிழிந்து தருகையில் ஒவ்வொரு பொருண்மையைக் குறித்தும் அ. முத்துலிங்கத்தின் சித்தாந்தமும் நமக்கு துலக்கமாகிறது.

அ. முத்துலிங்கத்தின் பழந்தமிழ்க் கல்வியை விரித்துரைக்கும் போது, சில கட்டுரைகளுக்கு அ. முத்துலிங்கம் வைத்திருக்கும் தலைப்புகளை எடுத்துக் காட்டுகிறார் சிற்பி. 'குறிப்பறியமாட்டாதவன்', 'நாணாத கோடாரி', 'எல்லார்க்கும் பெய்யும் மழை', 'மீதூண் விரும்பேல்' என்பன அவற்றுள் சில. சிற்பியும் இந்த நூலில் இடம் பெறும் சில கட்டுரைகளின் தலைப்பை முன்னத்தி ஏர்களிலிருந்தே பெறுகிறார். திருஞானசம்பந்தரின் 'உள்ளம் கவர் கள்வன்' எனும்

தேவார வரியிலிருந்துதான், ஆளுமைகள் குறித்த கட்டுரைக்கு 'உள்ளம் கவர்ந்த புள்ளிகள்' என்று சிற்பி தலைப்பிட்டிருக்க வேண்டும். பாரதிதாசன் பாரதியை விதந்தோதும் 'செந்தமிழ்த் தேனீ' என்கிற பட்டப் பெயரை அ. முத்துலிங்கத்துக்குச் சூட்டுகிறார் சிற்பி. அந்தத் தலைப்பிலான கட்டுரையில் அ. முத்துலிங்கம் ஒரு பைந்தமிழ்த் தேர்ப்பாகனாய் விளங்கும் பாங்கை விவரிக்கிறார். 'தீராத விளையாட்டு ஆர்வம்', 'மனிதம் மறக்காத நெஞ்சம்' ஆகிய கட்டுரைத் தலைப்புகளை பாரதியிடமிருந்துதான் சிற்பி பெற்றிருக்க வேண்டும். குறுந்தொகையின் அணிலாடும் முன்றில் சிற்பியிடம் 'நகையாடும் முற்றம்' ஆகிறது.

ட்ரூமென் கப்போட், நார்மென் மெயிலர் போன்ற எழுத்தாளர்களைக் குறித்து அ. முத்துலிங்கம் இப்படிச் சொல்கிறார்: 'கட்டுரை என்றும் இல்லாமல் முழுப்புனைவு என்றும் இல்லாமல் இவர்கள் இரண்டுக்கும் உள்ள இடைவெளியில் படைத்தார்கள்.' சிற்பி இதை நூலின் நுழைவாயிலிலேயே எடுத்தாள்கிறார். அ. முத்துலிங்கத்தின் கட்டுரைகளையும் இந்த வகைமைக்குள் கொண்டு வரலாம் என்பதுதான் சிற்பி வாசகனுக்கு வழங்கும் செய்தி. அது போலவே, தொ.பரமசிவனைப் பற்றிய கட்டுரையில் தொ.ப.வின் மேனரிசம் ஒன்றை அ. முத்துலிங்கம் கட்டுரையின் இடையிடையே சொல்லிச் செல்கிறார். அதாவது, அந்தக் கட்டுரையில் தொ.ப ஒரு கதாபாத்திரமாக உருவாகிறார். சிற்பி இதைக் கவனப்படுத்துகிறார்.

அ. முத்துலிங்கத்தின் படைப்பு வெளி சூடான், சியாரா லியோன், கென்யா, சோமாலியா, ஆப்கானிஸ்தான், பாகிஸ்தான், கனடா, அமெரிக்கா என்று பரந்து விரிகிறது. இதை அ. முத்துலிங்கத்தின் பல கட்டுரைகளின் வாயிலாக எடுத்துக் காட்டுகிறார் சிற்பி ('உலகம் உங்கள் கையில்'). கூடவே, 'தமிழர்கள் உலகின் மூலை முடுக்கெல்லாம் சென்று பணியாற்றுகிறார்கள். ஆனாலும் என்ன, உலக நாடுகளில் பெற்ற அனுபவங்களை மனப்பதிவுகளாக அவர்கள் தரவே இல்லை' என்கிற தனது ஆதங்கத்தையும் வெளிப்படுத்துகிறார்.

எனக்கு ஒரு சம்பவம் நினைவுக்கு வருகிறது. 1981இல் 'சாவி' பத்திரிகையின் இதழ் ஒன்றை சுஜாதா தயாரித்தார். அந்த இதழில் இடம் பெறுவதற்காகப் பல வாசகர்கள் தங்கள் கதைகளை அனுப்பியிருந்தனர். சுஜாதா அவற்றிலிருந்து ஒரேயொரு கதையைத் தெரிவு செய்து வெளியிட்டார். இப்போது எனக்கு அந்தக் கதையோ, அதன் தலைப்போ நினைவில் இல்லை. அதன் ஒரு வரியேனும் நினைவில் இல்லை. ஆனால், தெரிவுக்கு வந்த கதைகளைப் பற்றி அவர் எழுதிய கட்டுரையொன்று நினைவிருக்கிறது. அதில் ஒரு பத்தி: 'சவுதி அரேபியாவிலிருந்து கதை எழுதும் ஏ.எஸ். மார்க்கண்டு, 'அண்ணா சமாதி பஸ் நிலையத்தின் முன் அவள் நின்றிருந்தாள்' என்று ஆரம்பிக்கிறார்.' சுஜாதா இவ்விதம் எழுதி




**அயல் மகரந்தம்**
**(அ.முத்துலிங்கம் கட்டுரைகள்: ஒரு பார்வை)**
**– சிற்பி பாலசுப்ரமணியம்**

**வெளியீடு:** விஜயா பதிப்பகம், 20 ராஜ வீதி, கோவை – 641001;

**அலைபேசி:** +91–7947151828

நாற்பதாண்டுகளுக்கு மேலாகிவிட்டது. ஆனால், நிலைமையில் பெரிய முன்னேற்றமில்லை. இந்தச் சூழலில்தான், 'உலகத்தைப் பார்க்கும் சாளரமாகத் தம் கட்டுரைகளையும் கதைகளையும் படைத்துத் தரும்' அ. முத்துலிங்கத்தை வியந்து போற்றுகிறார் சிற்பி.

சமீபத்தில் நடந்த சென்னை புத்தகக் காட்சியின்போது ஓர் எழுத்தாளர் தனது முகநூல் பக்கத்தில், 'வாசிப்பதற்கு ஓர் ஆயுளும் எழுதுவதற்கு ஓர் ஆயுளும் தேவைப்படுகிறது' என்று பதிவிட்டிருந்தார். அதாவது நூல்கள் கொட்டிக் கிடக்கின்றன, அவசியமானவற்றைக்கூட வாசிக்க ஏலவில்லை. இந்த ஏக்கத்தில்தான் எழுத்தாளர் அவ்விதம் சொல்லியிருந்தார். ஆனால், எல்லோரையும் போல அ. முத்துலிங்கத்திற்கும் ஓர் ஆயுள்தான் இருக்கிறது.



சிற்பி

அதில் அவர் ஏராளமாக வாசிக்கிறார்; கணிசமாக எழுதவும் செய்கிறார். 'வாசிப்பு என்பதை வாழ்தலின் அடையாளமாகவும் படைப்பு என்பதை உயிரின் மொழியாகவும் கொண்டவர் அ. முத்துலிங்கம்' என்று புகழ்கிறார் சிற்பி ('புத்தகப் பிரபஞ்சம்').

'அ. முத்துலிங்கத்துக்கு நிகராகப் பண்டைத் தமிழிலக்கியப் பயிற்சியும் நவீன இலக்கியத் தேர்ச்சியும் உலக இலக்கிய நுகர்ச்சியும் கொண்டவர்கள் எவரும் இல்லை' என்று துணிகிறார் சிற்பி. இதற்கு நூல் நெடுக பல சான்றுகளையும் வழங்குகிறார்.

போர்களாலும் வறுமையாலும் குடும்பச் சுரண்டலாலும் ஆணாதிக்கத்தாலும் சூறையாடப்பட்ட எளிய பெண்களைத் தேடிப் போய்ச் சந்திக்கிறார் அ. முத்துலிங்கம். இப்படியான பெண்களின் கதைகளை, 'மனிதம் மறக்காத நெஞ்சம்' என்கிற தலைப்பின் கீழ் தொகுக்கிறார் சிற்பி. அதில் ஒரு பொதுத்தன்மையையும் கண்டடைகிறார். பாதிக்கப்பட்ட பெண்களின் பால் அனுதாபத்தைக் கோருவதல்ல, அவர்கள் எவ்விதம் தன்னம்பிக்கையோடு வாழ்க்கையை நேரிட்டார்கள் என்று சொல்வதுதான் அ. முத்துலிங்கத்தின் நோக்கம் என்கிறார் சிற்பி.

அ. முத்துலிங்கம் விளையாட்டுகளைக் குறித்து எழுதியிருக்கும் கட்டுரைகளின் ரசகரமான பகுதிகளை ஒரு தலைப்பின் கீழ் தொகுக்கிறார் சிற்பி. குதிரைப் பந்தயம், குத்துச் சண்டை போன்ற போட்டிகளின் நுட்பங்கள் நமக்குத் தெரியாமல் இருக்கலாம். ஆனால், கலைத்தன்மையுடன் கூடிய அ. முத்துலிங்கத்தின் கட்டுரைகள் அந்த நுட்பங்களை வாசகர்களுக்கு நெருக்கமாக்குகின்றன. முத்துலிங்கத்தின் சூழலியல் அக்கறையை அவரது வாசகர்கள் நன்கு அறிவார்கள். நம்மில் பலரின் கவனத்திற்கு வராத இயற்கைப் பேரதிசயங்கள் அவரது கட்டுரைகளில் இலக்கியமாகின்றன. அடுத்து, அவரது படைப்புகளில் இழையோடும் அமர்த்தலான நகைச்சுவை குறித்து ஒரு தலைப்பின் கீழ் பேசுகிறார் சிற்பி. ஈழ மண்ணைக் குறித்த கட்டுரைகளைப் பற்றி இறுதியாய்ப் பேசுகிறார். சொந்த மண்ணிற்கான தாகமும் அதன் வரலாறு தரும் பெருமிதமும் அதன் வீழ்ச்சியில் இழையும் சோகமும் ஈழத்திலிருந்து புலம்பெயர்ந்தோர் புரிந்து வரும் சாதனைகளில் நம்பிக்கையும் இவை எல்லாம் கலந்து அ. முத்துலிங்கத்தின் ஈழக் கட்டுரைகளில் பரிமளிக்கின்றன என்று முடிக்கிறார்.

'அ. முத்துலிங்கம் எனும் கட்டுரைக்காரர் ஒரே நேரத்தில் விமர்சகராகவும் வரலாற்றாசிரியராகவும் தத்துவ ஞானியாகவும் கவிஞராகவும் கதாசிரியராகவும் விளங்குகிறார். ஆகவே அ. முத்துலிங்கத்தின் கட்டுரைகள் தனிப் பேரிலக்கியம்' என்று முடிக்கிறார் சிற்பி.

அ. முத்துலிங்கத்தின் வாசகனான என்னை இப்புத்தகத்துக்கு முன்னுரை எழுதப் பணித்தவர் அண்ணன் 'விஜயா' வேலாயுதம். நம் காலத்தின் ஆகச் சிறந்த படைப்பாளிகளில் ஒருவரான அ. முத்துலிங்கத்தின் படைப்புகளை பரவலாய்க் கொண்டு சேர்க்க ஏற்கனவே அவர் குறித்த இரு நூல்களை வெளியிட்டவர் அண்ணன். எழுத்தாளுமைகளை அவர்கள் வாழும் காலத்திலேயே கொண்டாடும் அபூர்வ மனிதர். அரை நூற்றாண்டு காலமாக கோவை மாநகரில் புத்தக வாசிப்பை ஒரு இயக்கமாக மாற்றியவர். அவரும் மருத்துவர் சசித்ரா தாமோதரனும் இணைந்து மொழிபெயர்ப்புக்காக ஆண்டுதோறும் 'அ. அ. முத்துலிங்கம் விருது' வழங்கி வருகிறார்கள். இவ்விருவரையும் நன்றியோடு நினைத்துக்கொள்கிறேன்.

அண்ணனின் கோரிக்கைக்கு செவி சாய்த்து சிற்பி செய்த இந்த அயல் மகரந்த அரும்பணி அ. முத்துலிங்கத்தின் தொடக்க நிலை வாசகர்களுக்கு அவரது கட்டுரைகளின் விரிவையும் ஆழத்தையும் அறிமுகப்படுத்தும். அ. முத்துலிங்கத்தின் தொடர் வாசகர்களுக்கு இந்த நூல், அறிதோறும் அறியாமையைக் கண்டுணரும் வாய்ப்புகளை உருவாக்கும். புதிய வாயில்களைத் திறக்கும். வாசிக்காத கட்டுரைகளை வாசிக்கத் தூண்டும்; வாசித்த கட்டுரைகளில் புதுப் பொருள்கள் ஊறி வரும், மணற்கேணியாயும் விளங்கும்.

*mail to:* **mu.ramanathan@gmail.com**

# ட்ராகன்
# திரைப்படமாகும் ‘ரில்ஸ்’ கலாச்சாரம்

● விதுரன் & பூமா ஈஸ்வரமூர்த்தி

## விதுரன்

தமிழ்த் திரையுலகில் சில திரைப்படங்கள் வெளிவருவதற்கு முன்பே, இது நிச்சயமாக வெற்றிபெறும் என கணித்திட முடியும். அத்தகைய வெற்றிக் கணிப்பில் வெளியாகிய ‘ட்ராகன்’ இன்று நூறு கோடிகளை கடந்து வசூல் வேட்டையில் இன்னும் நிற்காத குதிரையாக ஓடிக் கொண்டிருக்கிறது. வணிகரீதியாக நம்பிக்கைக்குரிய கதாநாயகராக பிரதீப் ரங்கநாதனும் இயக்குனராக அஷ்வத் மாரிமுத்துவும் அடையாளபடுத்தப்பட்டுள்ளனர்.

இதையெல்லாம் வணிக திரையுலகிலிருந்து நிச்சயமாக நல்ல விஷயங்களாகவே பார்க்கிறேன். ஏனெனில், வணிகரீதியான வெற்றியே, ஒரு தொழிற்துறையை தொடர்ந்து இயங்க வைக்கும். ஆனால், இதனூடே இன்னொரு விஷயம் மெல்ல மெல்ல மறைந்துகொண்டே இருக்கிறது. பத்திரிகை துறையினைப் பற்றி பேசும்பொழுது அது எப்படி ஒரு வியாபாரமோ, அதேபோல அது ஒரு சேவையும்தான். இதனை மையமாகக் கொண்டே பத்திரிகைத் துறை இயங்க வேண்டும் என்பது எப்போதும் எழுதப்படாத அடிப்படை விதியாக இருந்துள்ளது. என்னைப் பொறுத்தளவில் இதுவே திரைப்படங்களின் அடிப்படை விதியும். ‘ட்ராகன்’ வியாபர ரீதியாக வெற்றி பெற்றதைத் தாண்டி, இது ஒரு நல்ல திரைப்படம் என்பதும் பலரின் ஆழமான நம்பிக்கை. இது உண்மையா என்பதே எனது மிகப்பெரும் கேள்வி.

நடிகர் சிவகார்த்திகேயனின் ஆரம்ப காலக்கட்டத்தில் அவருக்கு மிகப்பெரும் வெற்றியை கொடுத்த திரைப்படம், ‘கேடி பில்லா கில்லாடி ரங்கா’. படம் முழுக்க கோர்த்து வைக்கப்பட்ட நகைச்சுவை காட்சிகளே நிறைந்திருக்கும். சட்டென்று அதன் இறுதிக் காட்சியில் நாயகனின் தந்தை தன்னுடைய உயிரினைக் கொடுத்து, மகனின் வாழ்க்கையில் ஒரு வேலையினை உருவாக்கிக் கொடுப்பார். தந்தை தனக்காத்தான் தற்கொலை செய்துகொண்டார் என்பதை உணரும் மகன் அந்த குற்ற உணர்வில்



திருந்துகிறான் என்பதாக படம் முடியும். படம் மிகப்பெரும் வெற்றி. இன்றளவும் ரசிகர்களில் பலருக்கும் பிடித்தமான திரைப்படம். ஆனால், முழுக்க மேலோட்டமான, நகைச்சுவை காட்சிகளை வைத்து எடுத்துவிட்டு இறுதிக் காட்சியில் அந்த மரணத்தை வைத்து பார்வையாளர்களை ஏமாற்றியிருப்பார்கள். படம் முழுக்கவே நகைச்சுவையாகவே வைத்திருந்தால், ஒருவேளை பார்வையாளர்களுக்கு பெரிய தாக்கத்தினை ஏற்படுத்தாதோ என்ற பயம் கூட அப்படி ஒரு காட்சியினை உருவாக்க காரணமாக இருந்திருக்கலாம். ‘ட்ராகன்’ கிட்டத்தட்ட இதோடு ஒப்பிடக் கூடிய ஒரு திரைப்படமே.

ட்ராகனில் கதாநாயகன் தவறு மேல் தவறு செய்துகொண்டே இருக்கிறான். அதற்கான பின் விளைவுகள் அவனைத் துறத்துகிறது. அதிலிருந்தும் தப்பிக்க முயல்கிறான். இறுதியில் தன் தவறுகளை



முன் வைக்கிறான். மனிதனாக மாறுகிறான். பார்வையாளர்கள் அவனை மன்னிக்கிறார்கள்; கொண்டாடுகிறார்கள். ஆனால், எனக்கு மட்டும் கடும் அதிர்ச்சியாக இருந்தது. அடிப்படை அறமே இல்லாத ஒரு திரைப்படம், அறத்தின் வெற்றியாக கொண்டாடப்படுவதை காணும்பொழுது ஏற்படும் அதிர்ச்சி.

இப்படத்தில் எனக்கு மூன்றுவிதமான பிரச்சனைகள் பூதாகரமாகத் தெரிந்தன. முதலாவது, இதன் இறுதிக்காட்சி. கதாநாயகன், தான் செய்த ஒட்டுமொத்த தவறுகளையும் அனைவர் முன்பாக ஒப்புக்கொள்கிறான். தன்னால் இன்னொருவன் பாதிக்கப்படுகிறான், அவனது கனவுகள் உடைந்து போகின்றன என எண்ணும்போது தன்னுடைய அனைத்து கனவுகளையும் உடைத்திட முன் வருகிறான். இதனை பார்க்கும்போது உண்மையாகவே உணர்ச்சி மேலிடும். ஆனால், எனக்கு தோன்றியதெல்லாம் அதே காட்சியில் மூலையில் நின்று கொண்டிருந்த ட்ராகனின் தந்தைக் கதாபாத்திரம். படம் முழுக்க ட்ராகனை எந்த சூழலிலும் கைவிடாத கதாபாத்திரம் இது. ஆனால், படம் முழுக்க அவரை ஏமாற்றிக் கொண்டிருப்பதை தவிர்த்து 'ட்ராகன்' வேறு எதையும் செய்வதே இல்லை. ஆனால், இறுதிக் காட்சியில் யாரென்றே தெரியாத ஒருவருக்காக தன்னுடைய மொத்த வாழ்க்கையையும் இழக்கத் தயாராகிறான். இதுபோல ஒரு முரணை நான் வேறு எந்த திரைப்படத்திலும் கண்டதே இல்லை. இதில் இன்னும் சுவாரசியமான முரண் என்னவெனில், அதே அப்பா கதாபாத்திரம் ட்ராகனை மன்னிக்கும் காட்சி. அதற்கு அவர்கள் கூறும் காரணமும் மிக மிக நகைச்சுவையாகவும் அதிர்ச்சியாகவும் இருந்தது. வாழ்நாள் முழுவதும் தன்னை ஏமாற்றிக்கொண்டே இருந்த ஒருவன், இன்னொருவனை ஏமாற்றாமல் இருந்ததற்காக உன்னை மன்னிக்கிறேன் என்பதெல்லாம் என்ன மாதிரியான புரிதல்? இறுதிக்காட்சியில் எப்படியேனும் 'ட்ராகன்' மீது கருணை தோன்றிவிட வேண்டுமென்பதற்காகவே வெறுமனே வலிந்து திணிக்கப்பட்ட காட்சியாகவே தோன்றியது.

இரண்டாவது, பலரும் இதனை மிக மிக விறுவிறுப்பான, அழுத்தமான திரைக்கதை என்று எழுதுகின்றனர். இதற்கு இவர்கள் முன் வைக்கும் காரணம், முதல் பகுதியில் நாயகன் செய்த தவறுகள் எல்லாம், இரண்டாம் பகுதியில் திரும்பி அவனை எப்படி அடிக்கிறது என்பதை காட்சிபடுத்திய விதம் என்கின்றனர். ஆனால், திரைப்படத்தில் தங்களுடைய வசதிக்கேற்ப பல இடங்களில் திரைக்கதை வளைக்கப்பட்டுக் கொண்டே இருக்கிறது. நாயகனின் கதாபாத்திரமே மிக மிக குழப்பமாக இருக்கிறது. தன்னுடைய எதிர்காலத்தை குறித்து, திருமணம் வரை, இளம் வயதிலேயே தெளிவாக முடிவெடுக்கும் ஒருவன், பள்ளியில் ஒரு சிறுமி ரவுடி பசங்களைத்தான்

பிடிக்கும் என கூறியதால் உடனே மனம் மாறுகிறான். அவனது அத்தனை முக்கியமான இலக்குகளும் இல்லாமல் வெறுமனே ஒரு காலேஜ் ரவுடியாக மாறுகிறான். ட்ராகனை பெயிலியர் என்று கீர்த்தி கூறியதும், அங்கிருந்து உடனே பெரிய வேலைக்கு போக வேண்டும், அதற்காக தந்தையின் தலையில் மிளகாய் அரைத்து, பணம் தயார் செய்து, அந்த வேலையையும் பெற்று, அதிலும் நான்கே வருடங்களில் மிக உயரிய இடத்திற்கு வருகிறான். சில காட்சிகளுக்கு முன்புதான் ட்ராகனின் நண்பன் ஒரே பாட்டுல மேலே வருவதைக் குறித்து கேலி செய்திருப்பான். ஆனால், படத்திலேயே அதே காட்சிகள் வருவதெல்லாம் மிகப்பெரும் நகைச்சுவையாக மாறிவிடுகிறது.

மிஷ்கினிடம் 'ட்ராகன்' மாட்டிக்கொண்டதும் அவன் செய்த தவறை அனைவரிடம் சுட்டிக் காட்டாமல், அவனை காலேஜில் வந்து தேர்வுகளை எழுதி பாஸ் ஆக சொல்கிறார். அடுத்தடுத்து இப்படி படத்தில் எழுதப்பட்டுள்ள காட்சிகள் எல்லாம் தங்களுடைய இஷ்டத்திற்கு வளைத்துக்கொண்டே செல்கிறார்கள். இதற்கெல்லாம் அழுத்தமான பின்னணிக் காரணங்கள் இருந்திருந்தாலாவது ஏற்றுக்கொள்ளும்படி அமைந்திருக்கலாம். அனைத்தும் 'ரீல்ஸ்' தொகுப்புகள் போல போயிக்கொண்டே இருக்கின்றது.

சமீபத்திய திரைப்படங்களில் இத்தகைய 'ரீல்ஸ்' கலாச்சாரத்தின் தாக்கம் அதிகரித்துக் கொண்டே செல்கிறது. ஒவ்வொரு காட்சியும் ஏதோ ஒரு வகையில் அழுத்தமில்லாமல், சுவாரசியமாக இருந்தாலே போதும் என்னும் தொனியிலையே உருவாக்கப்படுகின்றன. 'ரீல்ஸ்' பார்க்கும்பொழுது எப்படி தங்களையே அறியாமல் மணிக்கணக்கில் போனில் ஒரு தலைமுறை மூழ்குகிறதோ, அப்படி இந்தக் காட்சிகளையும் கடந்துகொண்டே இருக்கிறார்கள் பார்வையாளர்கள். இதில் ஆழ்ந்த அழுத்தமெல்லாம் இல்லை. வெறுமனே ஒரு அதீத ரீல்ஸ் சுவாரசியம் மட்டுமே. இதை திரைக்கதையாக ஒப்புக்கொள்வதே மிக கடினம்.

மூன்றாவது, இந்த திரைப்படம் கல்வியினை ஒரு கட்டிடத்தின் அடித்தளம் என்று குறிப்பிடுகின்றது. ஆம், ஒரு பணிக்கு செல்வதற்கு முன்பு ஆழ்ந்து கற்றுணர்ந்து அதைச் செய்வது என்பது மிக அவசியமான ஒன்று. இதற்கே நாம் அடிப்படை கல்வியை பயின்று அதிலிருந்து தொழில் நோக்கி நகர்கிறோம். இதையே இந்த திரைப்படத்தின் மிக முக்கியமான விஷயமாக உரையாட முன்வருகின்றனர். ஆனால், 'ட்ராகன்' தன்னுடைய கல்லூரி பருவத்தில் 48 அரியர்கள் வைத்துள்ளான். அதை மறைத்து போலிச்சான்றிதழ் வாங்கி வேலைக்கு சேருகிறான். மிஷ்கினிடம் மாட்டிக்கொண்டதும் காலில் விழுகிறான். மிஷ்கின் 48 அரியர்களை ஒரே தேர்வில் எழுதச் சொல்கிறார். இதற்கு காரணமாக கூறுவது உன் வேலைக்கான அடிப்படையே கல்விதான், அதை நீ



முறையாக முடிக்கவில்லையென்றால் வேலைக்கு எப்படி தகுதி பெற்றவனாய் என கேட்கிறார். இது பலருக்கும் ஏற்புடையதாக இருந்தது. ஆனால், நன்கு யோசித்துப் பார்த்தால், ஒரே தேர்வில் 48 பாடங்களை எழுதி தேர்ச்சியடைவதுதான் கல்வியின் அடிப்படையா? கல்வியமைப்பு முறையிலேயே நமக்கு இன்னும் நீண்ட கால அனுபவம் தேவைப்படும் சூழலில், தேர்வில் வென்றாலே போதும் என சொல்வது மிகப்பெரும் கேலிக்கூத்து. கல்வியினைக் குறித்தோ தேர்வுகள் குறித்தோ பணிகள் குறித்தோ எவ்விதமான தெளிவும் இல்லாமல் எழுதப்பட்டுள்ளது. நாயகனின் சாகசமாகவே 48 அரியர்களை கிளியர் செய்வது முன் வைக்கப்பட்டுள்ளது.

கல்வி எத்தனை முக்கியமான அடித்தளம் என்பது உரையாடப்பட வேண்டுமென்றால் இன்னும் கவனமான திரைக்கதை எழுதப்பட்டிருக்க வேண்டும். ஆனால், அதைப் பற்றியெல்லாம் இவர்களுக்கு கவலையே இல்லை. ரீல்ஸ்க்கு திரைக்கதை எழுத இதுவே போதுமே. கீர்த்தி கதாபாத்திரம், ஓரிடத்தில் ட்ராகனிடம் இப்படிச் சொல்லும், "நீ என்ன எல்லாத்தையும் படிக்கனுமா? முக்கியமான கேள்வி மட்டும் படி போதும். ஜஸ்ட் பாஸ் பண்ணு" என்பார். இவ்வுளவுதான் இவர்களின் கல்வி குறித்த உரையாடல். இதனால்தான் இந்த திரைக்கதையை வளைந்து கொடுத்துக்கொண்டே இருக்கும் திரைக்கதை என்கிறேன்.

'ட்ராகன்' மிகப்பெரும் வணிக வெற்றியை பெற்றுள்ளது. தமிழ்ச் சூழலில் வெற்றி பெற்றவையே மிக உயரியவை என்பது எப்போதும் முன்வைக்கப்படும் வாதம். பெரும்பான்மை கருத்தே ஏற்றுக்கொள்ளப்படும். ஆனால், அத்தகைய பெரும்பான்மை கருத்துகள் என்னவாக இருக்கின்றன என்பதே மிகவும் ஆழ்ந்து விவாதிக்கப்பட வேண்டியவை. அதோடு, ''ட்ராகன்' போன்ற திரைப்படங்கள் வணிகரீதியானவை, அவற்றின் தாக்கம் பெரிதாக இருக்காது' என்பது ஏற்புடையதல்லை. வணிகரீதியான திரைப்படங்களே இங்கு பெருவாரியான

தாக்கங்களை உருவாக்கியுள்ளது. அதனாலேயே அவற்றில் ஆழ்ந்து கவனம் செலுத்த வேண்டியது அவசியம்.

நம்மிடம், ஆழ்ந்து உணர்ந்து உருவாக்கப்படும் வணிக திரைப்படங்கள் என்பது மிகவும் குறைவே. அதன் விளைவே 'ட்ராகன்' மாதிரியான திரைப்படங்கள். கலையாகவும் அரசியலாகவும் கவனமாக கூர்ந்து உணரப்பட்டு உருவாக்கப்படும் படங்கள் வர வேண்டுமென்பதே எல்லாருடைய ஆவலும்.

நிறைய நல்ல வணிகத் திரைப்படங்கள் உருவாகும் என்று ஆவலோடு காத்திருப்போம்.

## பூமா ஈஸ்வரமூர்த்தி

'ஹரே ராமா ஹரே கிருஷ்ணா' திரைப்படம் வெளிவந்த போது நடிகர் தேவ் ஆனந்த், ''உங்கள் வயதிற்கு ஏற்றார் போல படம் தயாரிக்கமாட்டீர்களா? இப்படி இளைஞர்களை வைத்து கொட்டமடிக்கிறீர்களே'' என்ற கேள்விக்கு, ''இளைஞர்களின் உணர்வுகளை சித்தரித்தால் மட்டுமே இளைஞர்கள் உள்பட அனைத்து வயதினரும் தியேட்டர்களுக்கு வருவார்கள். மாறாக முதியவர்களை சித்தரித்தால் அதற்கு முதியவர்களே வருவார்களா என்பது சந்தேகமே'' என்றார்.

இந்த அடிப்படையில்தான், இளைஞர்களை ஈர்க்கும் விதமாகவே திரைப்படங்கள் தயாரிக்கப் படுகின்றன. இளமை இளமை... எல்லா விதத்திலும் இளமையை அள்ளி அள்ளித் தெளிக்கும் படங்களையே மக்கள் விரும்புகிறார்கள்; தயாரிப்பார்கள் தயாரிக்கிறார்கள். அந்த விதத்தில் சமீபத்தில் வெளியானது 'ட்ராகன்.'



திரைப்படத்தின் களம் கல்லூரி வாழ்க்கை காலம். காதல் துளிர்விடும் காலம். கதாநாயகன் ப்ரதீப் ரங்கநாதன், கவனம் சிதறாமல் நன்றாகப் படித்து பள்ளி இறுதியாண்டில் கணிணி அறிவியலில் தங்கப் பதக்கம் வாங்குகிறான். அதற்கு அவனுக்கு driving force ஆக இருப்பது தனக்குள்ளேயே வைத்திருக்கும் சக மாணவி அஞ்சனாவின் மீதான காதல்.

தங்கப் பதக்கம் வாங்கின கையோடு தனது காதலை காதலியிடம் தெரிவிக்கிறான். ஆனால், அவள் ஏற்றுக்கொள்ளவில்லை. ''உன்னைப்போல அம்மாஞ்சியெல்லாம் எனக்கு வேண்டாம். Rough & Rogue-ஆக நடந்துகொள்ளும் பையனோடு கல்லூரிக்குள் நடந்து போவதுதான் கெத்து. என்னைப்போல இளம் பெண்கள் அதைதான் விரும்புவார்கள்'' என்று சொல்லிக் கத்தரிக்கிறாள்.

கல்லூரியில் சேர்ந்து Rough & Rogue-ஆக நடந்து கொள்ள முயற்சிக்கிறான். விளைவு 48 அரியர்ஸ். இவனது வெளித் தோற்றத்தில் மயங்கி 'கீர்த்தி' இவனோடு பழக்கத்தில் இருக்கிறாள். இவன் அதை காதல் என்றே நினைத்துக்கொள்கிறான். ஆனால், ஒருநாள் இவனை கழட்டி விடுகிறாள். தனக்கு வீட்டில் பார்த்திருக்கும் மாப்பிள்ளை நல்ல படிப்பு, லட்சத்து இருபதினாயிரம் சம்பளம் என்கிறாள்.

மனம் உடைந்து, நண்பர்களுடன் சேர்ந்து திட்டம் தீட்டி, அப்பா அம்மாவை ஏமாற்றி பணம் பெற்று, ஒரு கன்சல்டன்ஸி மூலமாக போலி சர்டிபிகேட் பெற்று நல்ல வேலையில் சேர்கிறான். இதை தெரிந்துகொண்ட பழைய கல்லூரியின் பிரின்ஸ்பால் 'மிஸ்கின்', படிப்பின் மீதுள்ள மரியாதையால் இவனை கூப்பிட்டு மிரட்டி, 'நான் உனக்கு 48 அரியர்ஸ் மொத்தமாக எழுத வாய்ப்பு வாங்கித் தருகிறேன். ஒரு மூணுமாதத்தில் நமது கல்லூரியில் வந்து சேர்ந்து 48 அரியர்ஸையும் முடித்துவிட்டுப் போ. இல்லையென்றால் இப்போதுள்ள கம்பெனி முதன்மை அதிகாரி கௌதம் மேனனுக்கும் திருமணம் நிச்சயத்திருக்கிற கே.எஸ். ரவிக்குமாருக்கும் சொல்லிவிடுவேன்' என்கிறார்.

இப்படி இப்படி போகிறது கதை.

இரவு பகலாக கண்விழித்து பழைய காதலி 'கீர்த்தி' துணையோடும் ஒரு குட்டி 'ட்ராகன்' துணையோடும் அந்த 48 அரியர்ஸையும் முடிக்க நினைக்கிறான். கடைசி ஒரு பேப்பரால் நிலமை தலைகீழாக மாறி தன்னிலை உணர்கிறான். நிவர்த்தியும் தேடிக்கொள்கிறான்.

மொத்த படமும் குறைந்த, கச்சிதமான வசனத்தில் நிற்கிறது. இளமை விரும்பிகள் ஒன்றுக்கு இரண்டு தடவைகள் பார்ப்பார்கள்.

*mail to:* **seathu1952@gmail.com**

நோபல் கமிட்டியின் செயல்பாடு, அதைச் சார்ந்துள்ள நடுநிலைமை அல்லது இல்லாமை, படைப்பு உயர்ந்ததா அல்லது மட்டமா என்று ஒவ்வொரு முறையும் பரிசு முடிவைத் தெரிவிக்கும் போது எழும் சர்ச்சைகள் எழுந்து, எழுந்தது போல் அடங்கியும் விடுகின்றன. ஆனால், உலக இலக்கியங்களுக்குத் தரப்படும் பரிசுகள் பலவற்றுக்கும் முன்பாக நோபல் பரிசு இன்றும் ஓர் உயர்ந்த பீடத்தைத் தக்கவைத்துக்கொண்டுள்ளது.

நோபல் உரைகள் எப்போதும் இலக்கிய ஆசிரியனின் காலத்திய சமூக, பொருளாதார, அரசியல் மற்றும் கலைச் சூழல்களைப் பிரதிபலிக்கும் விதத்தில்தான் வெளிப்படுகின்றன. இந்த உரைகளில் காணப்படும் ஒரு பொது அம்சம் படைப்பாளிகளின் இளமைக் காலமும் அவர்களின் படைப்புகளில் ஆழமாக அது பதிக்கும் விவரணைகளும்தான். இவ்வுரைகள் வாசகர் மனதில் எழுப்பும் சீரிய சிந்தனைகளும் ஆழமான புரிதல்களும் அவற்றைப் பேருரைகளாக மாற்றி விடுகின்றன. ஆனால், அவற்றை என்றும் மாறாத புனித வாக்குகளென சடுதியில் தீர்மானத்துக்கு வரவேண்டிய அவசியத்தை உண்டாக்காது, படைப்பாளியின் நோக்கம், அவன் எழுத்து பிரதிபலிக்கும் சமூகச் சூழல், இலக்கியப் பரப்புக்குள்ளேயே நிகழும் ஒத்த அல்லது மாறுபட்ட கருத்தாழங்கள் ஆகியவற்றைப் பரிசீலனை செய்கின்றன.

நோபல் உரைகளை அம்ருதா வாசகர்களின் முன் வைக்கிறோம் - மாதம் ஒன்றாக.

13

1976

# பேரண்டத்தைக் காணக் கலை முயலுகிறது

நாற்பது வருடங்களுக்கு முன்பு இளங்கலை மாணவனாக இருந்த போது எதையும் எதிரிடையாகச் செய்பவனாக இருந்தேன். ஒரு படிப்பைத் தேர்ந்தெடுத்து அந்த வகுப்புக்குச் செல்வதற்குப் பதிலாக வேறு பாடங்களில் கவனம் செலுத்துவது எனது வழக்கமாக இருந்தது.

## ஸால் பெல்லோ | SAUL BELLOW

● தமிழில்: ஸிந்துஜா

**‘செ**ல்வமும் வங்கியும்’ என்னும் பாடத்தில் மூழ்கியிருக்க வேண்டிய நேரத்தில் நான் ஜோசப் கான்ராடின் நாவல்களில் ஆழ்ந்திருந்தேன். இதைப் பற்றி நான் என்றும் வருந்தியது கிடையாது. கான்ராட் என்னைக் கவர்ந்ததற்குக் காரணம் ஒரு போலிஷ்காரராக இருந்தாலும் அவர் அமெரிக்கரைப் போல உலகெங்கும் கடற்பயணம் செய்பவராகவும் பிரெஞ்சு மொழியில் பேசுபவராகவும் வலிமையும் அழகும் நிறைந்த ஆங்கிலத்தில் எழுதுபவராகவும் இருந்தார்.



சிகாகோவில் புகலிடம் பெயர்ந்தோர் குடியிருப்புகளில் வளர்ந்த வந்தேறிகளில் ஒருவனான நான், கடல் கேப்டனும் மார்செயில்சில் திரிந்தவரும் கீழைநாட்டு ஆங்கிலத்தில் எழுதியவருமான அவரால் கவரப்பட்டது ஆச்சரியமான ஒன்றல்ல. நேர்மை, ஏவல். கடலின் மரபு, அதன் அதிகார அமைப்பு, தொடர் சூறாவளியின் போது மாலுமிகள் பின்பற்றும் வலுவற்றதெனத் தோற்றம் தந்த விதிமுறைகள் ஆகிய எல்லாவற்றையும் தனது கருப்பொருள்களாக அவரது எழுத்துகொண்டிருந்தது. இத்தகைய, வலுவற்றது போலத் தோன்றிய விதிமுறைகளின் பலத்தை உணர்ந்தவராக, அவற்றைத் தனது கலையில் பதித்தார். கலையைப் பற்றிய தனது கருத்துக்களை அவர் தன்னுடைய The Nigger of the Narcissus என்னும் நாவலின் முன்னுரையில் தெரிவித்திருந்தார்.





# ஸால் பெல்லோ

கனடிய – அமெரிக்க எழுத்தாளர். 1915 ஜூன் 10 அன்று பிறந்தார். தனது இலக்கிய படைப்புகளுக்காக நோபல் பரிசு தவிர புலிட்சர் பரிசு, தேசிய கலைப் பதக்கம் உட்பட பல விருதுகள் பெற்றுள்ளார். பெல்லோ குழந்தைப் பருவத்திலேயே சட்டவிரோதமாக அமெரிக்காவிற்கு குடியேறியவர் என்றாலும் 1941 ஆம் ஆண்டில் அமெரிக்க குடிமகனாக ஆனார். இரண்டாம் உலகப் போரின்போது, அமெரிக்க கடற்படையில் சேர்ந்தார். 1946 – 1948 காலகட்டத்தில் மினசோட்டா பல்கலைக்கழகத்தில் கற்பித்தல் பணிகளை மேற்கொண்டார்.

கலை என்பது காணக் கிடைக்கும் பேரண்டத்தின் விகாசத்தை விளக்குவது: அது வாழ்வின் அடிப்படை நியதிகள், நிலைத்திருத்தல், எப்போதும் இன்றியமையாதிருத்தல் ஆகியவை மூலம் பொருண்மையையும் சத்தியத்தையும் காண முயன்றது. ஒரு சிந்தனையாளனின் அல்லது விஞ்ஞானியின் வழிமுறையிலிருந்து வேறுபட்டு, ஓர் எழுத்தாளன் வாழ்க்கையின் தவிர்க்க முடியாத தன்மையைத் தேடி அடைகிறான். கான்ராட் இவற்றைப் பகுப்பாராய்வதின் மூலம் அறிந்திடலாம் என்றார். இதன் ஆரம்பமாக ஒரு கலைஞன் தன்னுள் இறங்கி உற்று நோக்குகிறான். அவனுக்கான அந்தத் தனிப் பிரதேசத்தில் அவனது ‘கவரும் முறைகளைக்’ கண்டறிகிறான். கிடைத்த ஒன்றாக அல்லாது,கொடையாக நம்முள் படர்ந்திருக்கும் பகுதியை அவன் வியப்புடன், மகிழ்ச்சியுடன், பரிதாபமும் வலியும் சேர்ந்த உணர்வுடன், அனைத்து ஜீவராசிகளுடன் ஒருங்கிணைந்து உறவாடும் தன்மையுடன், எண்ணற்ற இதயங்களில் ஒற்றுமையை விளைவிக்கும் தனித்தவொரு நம்பிக்கையுடன் கண்டு தனது முறையீட்டை முன் வைக்கிறான். அச் செயல் மனித குலத்தை இணைக்க வல்லதாக இருக்கிறது - இறந்தவர் உயிருடனிருப்போருடனும் உயிருடன் இருப்பவர் இன்னும் பிறக்காத ஜீவராசிகளுடனும் இணைக்கப்படுகிறார்கள்.

இத்தகைய கருத்து சுமார் 80 ஆண்டுகளுக்கு முன்பு பிறந்தது. இதை நான் இன்றைய நடைமுறையுடன் ஒப்பிட்டு ஒவ்வாதவற்றைக்

காண வேண்டும். சான்றாண்மை அல்லது சான்றாண்மையை நிகர்த்த சொற்களைக் கண்டறிந்த வாசகர்களை உடைய தலைமுறையைச் சார்ந்தவன் நான். 'தகர்க்க முடியாத ஆழ்ந்த நம்பிக்கை', 'மானிடம்' போன்ற சொற்களை எர்னெஸ்ட் ஹெமிங்வே போன்றவர்கள் நிராகரித்தனர். உட்ரோ வில்சனும் அவரைப் போன்ற மற்ற பெருந் தலைகளும் உதிர்த்த சாகச வார்த்தைகளினால் முதலாம் உலகப் போரில் ஈடுபட்டு உயிர் நீத்த இளைஞர்களுக்காக ஹெமிங்வே பேசினார். ஹெமிங்வேயின் இளம் வாசகர்கள் இருபதாம் நூற்றாண்டின் பயங்கரங்கள் வெறுக்கப்படத் தக்கதாகவும் மனித உரிமைகளை அழித்து ஒடுக்கியதாகவும் நம்பினார்கள். எனவே, நான் ஆழமற்ற கான்ராடின் முழக்கங்களை எதிர்க்க வேண்டும் என்று நினைத்தேன். ஆனால், அவரை நான் எப்போதும் தவறிழைத்தவராகக் கருதவில்லை. அவர் என்னிடம் நேரடியாகப் பேசினார். தனிமனித உணர்வு பலகீனமானதாகக் காணப்பட்டது - அவர் தனது பலகீனத்தைத் தவிர வேறு எதையும் உணரவில்லை. ஆனால், அவர் தனது பலகீனத்தையும் தனிமையையும் உணர்ந்துகொண்டு, அவற்றினுள் மூழ்கி இருந்ததில், மற்ற தனித்து விடப்பட்டவர்களுடன் தான்கொண்ட தோழமையை அவரால் கண்டுபிடிக்க முடிந்தது.

கான்ராடின் வார்த்தைகளின் மீது நாம் சந்தேகம்கொள்ள வேண்டியதில்லை. ஆனால், பல படைப்பாளிகளுக்குக் கான்ராடின் நாவல் - ஏன் எல்லா நாவல்களும் கூட - மறைந்து போய்விட்டதென்ற எண்ணம் இருக்கின்றது. ஒழிந்து போய் விட்டதென்று. உதாரணமாக பொருளே முதன்மையானது என்னும்கொள்கையின் பிதாமகரான பிரபல பிரெஞ்சு எழுத்தாளர் எம். அலெய்ன் ராபி-றில்லேட் கூறுவது என்ன? 'சமகால மேதைகளின் எழுத்தில் - சார்த்தரின் Nausea, காமூவின் The Stranger, காஃப்காவின் The Castle ஆகியவற்றில் - கதாபாத்திரங்களே கிடையாது; இந்தப் புத்தகங்களில் நீங்கள் காண்பது மனிதர்களை அல்ல, பொருள்களைச் சார்ந்த நிறுவனங்களை' என்கிறார். 'கதாபாத்திரங்களை அடக்கிய நாவல்கள்' என்பது 'புராதனமானது. அவை ஒரு காலகட்டத்தை எதிரொலிக்கின்றன. ஒரு தனிமனிதனின் விலகியிருக்கும் தன்மையை விளக்குபவை அவை' என்கிறார் ராபி-றில்லேட். இது ஒன்றும் புதுமையானதில்லை என்றும் அவர் கூறுகிறார். ஆனால், உண்மை என்னவோ தனிநபர்கள் ஒழித்துக் கட்டப்பட்டு விட்டார்கள். 'இன்றைய உலகு எண்ணிக்கைகளினால் ஆனது. சில குடும்பங்களைச் சார்ந்த சில நபர்களின் வாழ்க்கையில் ஏற்பட்ட உச்சகட்டமும் வீழ்ச்சியும் உலகின் ஊழ்விதி முடிந்து போன ஒன்று என்று சுட்டிக் காட்டுகின்றது' என்கிறார். அவர் மேலும் கூறுவது, 'பூர்ஷ்வா நிலைத்திருந்த காலத்தில் வாழ்ந்திருந்த பால்ஸாக்கின் நாள்களில், ஒரு பாத்திரமும் அதற்கான பெயரும் இருந்தாக வேண்டியிருந்தது. உயிர் வாழ்வதற்கும் வெற்றி பெறவும் கதைப்



பாத்திரங்கள் ஆயுதமாக உபயோகப்படுத்தப்பட்டன. அத்தகைய காலத்தில் உலகின் முன் வைக்கப்பட்ட முகம் தேடலின் வழிமுறைகளையும் முடிவுகளையும் தெரிவிக்கும் வல்லமை வாய்ந்ததாக இருந்தது.' 'ஆனால், நமது இன்றைய உலகம் தன்னடக்கத்தில் நெளிகிறது. ஒருவனின் ஆற்றலை வெளிப்படுத்தத் தயங்குகிறது. அதே சமயம் பேராசையும் பிடித்து அலைகிறது' என்றார் அவர். அதன் பார்வை எல்லை கடந்தது. மனிதர் என்னும் தனிப்பட்ட வழிபாட்டு முறையைத் தவிர்த்துவிட்டு சர்வ வல்லமை என்னும் தாத்பரியத்துக்குப் பதிலாக தன்னுணர்வுக்கான வியாபகத்துக்கு வழி விடுகிறது. எனினும் ஒரு புதிய பாதையும் புதிய கண்டுபிடிப்புகளும் கிடைக்கும் சாத்தியம் நம் முன்னே விரிந்து கிடக்கிறது' என்கிறார் அவர்.

இன்றைய விசேஷ தினத்தில் நான் விவாதத்தில் இறங்கப் போவதில்லை. 'பாத்திரங்கள்' ஏற்படுத்தும் களைப்பை அறிந்தவர்கள் நாம். மனித வகைகள் பொய்மையும் சலிப்பும் நிறைந்தவர்களாகி விட்டன. இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில் டி.ஹெச். லாரன்ஸ், 'நமது உணர்ச்சிகள் புனிதம் என்ற போர்வையில் ஒடுக்கப்பட்டபோது, மனிதர்கள் ஒருவரையொருவர் வெறுக்கும் நிலமைக்குத் தள்ளப்பட்டு விட்டனர்; பரிவைக் காண்பிக்கும் இதயம் நொறுக்கப்பட்டது. நாம் நாற்றம் மிக்கவர்களாக ஆகிவிட்டோம்' என்றார். தவிர ஐரோப்பாவில் பல நூற்றாண்டுகளாக இதிகாசங்களின் வலிமை படர்ந்திருக்க ஒவ்வொரு நாடும் அதனதன் ஆளுமைகளை அடையாளம் பிடித்து வைத்திருந்தன - மோலியர், ரேஸின், டிக்கன்ஸ், பால்ஸாக் என்று. இது அச்சந் தரும் ஓர் நிகழ்வு. பிரெஞ்சு மொழியில் வழங்கப்படும், 'மோசமான இழிவான அசிங்கமான தரக்குறைவான...' என்ற ஓர் அருமையான சொற்றொடர் இதற்குப் பொருந்தும். சுயமற்ற ஒரு மனித குலம் அடுத்தவரிடமுள்ள செல்வங்களைக் கடன் வாங்கி எடுத்துக்கொண்டு ஓடுவது போல இது இருக்கிறது. அழிந்த



இடிபாடுகளிலிருந்து புதிய நகரங்கள் பெரும்பாலும் உருவாவது போல.

மனோதத்துவக் கருத்தாக்க வகைமையில் உருவாக்கப்படும் குணச்சித்திரம், விரும்ப முடியாத ஓர் இறுக்கத்தை ஏற்படுத்துகிறது. அதை நாம் விரும்பாதது மாத்திரமில்லை, அதனின்று விலகி நிற்கிறோம். சர்வாதிகார சித்தாந்தங்கள் கூட பூர்ஷ்வாவினரது தனிநிலைக்கொள்கையைச் சாடுகின்றன. சில நேரங்களில் குணம் என்பது சொத்து சார்ந்ததாகி விடுகிறது. ராபி-றில்லேட்டின் வாதத்தில் இதைப் பற்றிக் காணலாம். ஆளுமையை வெறுத்தல், வேஷங்களில் இளைப்பாறுதல், போலி நடமாட்டம் ஆகியவை மோசமான அரசியல் விளைவுகளை ஏற்படுத்துகின்றன.

இங்கு நான் கலைஞனின் முன்னுரிமைகள் யாவை என்று அறிய ஆசைப்படுகிறேன். அவன் பழம் ஆராய்ச்சி முறைகள், கருத்துக்கள், முறைமைகள் ஆகியவற்றிலிருந்து தன் தேடலை ஆரம்பிப்பது நல்லது, முக்கியமான தேவையும் கூட. Time Regained என்னும் தனது புத்தகத்தில் ராபர்ட் ப்ரௌஸ்ட் கூறுகையில், 'இன்றுள்ள புத்திசாலியான இளைஞர்கள் மிகவும் விரும்புவது, நீதி மற்றும் சமூகப் போக்குகளின் மீதான ஆராய்ச்சிகளை' என்கிறார். 'அவர்கள் மற்ற எழுத்தாளர்களை விட Remembrance of Things Pastல் நாவலாசிரியராக வரும் பெர்கோட்டை விரும்புகிறார்கள்.' மேலும் அவர், 'பகுத்தறிவது மூலம் கலைகளை ஒருவர் தீர்மானித்தால், எதையுமே நிரந்தரம் என்றோ தாக்குப்பிடிக்க வல்லது என்றோ கூறி விட முடியாத நிலைமை ஏற்படும். அப்போது ஒருவர் தான் விரும்பும் எதையும் நியாயப்படுத்தி விடலாம்' என்கிறார்.

ராபி-றில்லேட்டின் அறிவுரை புதிய ஒன்றல்ல. அது கூறுவது எல்லாம் நாம் பூர்ஷ்வாக் கோட்பாடான மானிடவியல் மைய வாதத்தைக் கடந்து சென்று இன்றைய கலாச்சார விஸ்தீரணங்களை மேம்படுத்த முயல வேண்டும். குணாதிசயம்? ஐம்பது வருட நோயைப் பல மேதைகள் ஒழிக்க முயற்சித்தும் பத்தொன்பதாம் நூற்றாண்டின் எச்சங்களில் வாழும் அதை அசைக்க முடியவில்லை. இப்போது பதனம் செய்யப்பட உயிரற்ற உடலுக்கு இன்னும் ராஜமரியாதை செய்வது தொடர்ந்துகொண்டிருக்கிறது.

ராபி-றில்லேட்டின் கட்டுரையின் தலைப்பு On Several Obsolete Notions. எனக்குக் காலாவதியான கருத்துக்களும் எல்லாவிதமான பதனம் செய்யப்பட உடல்களும் ஒவ்வாதவை. புகழ்பெற்ற நாவலாசிரியர்களைப் படிக்க நான் அஞ்சுவதில்லை. ஆனால், அந்தக் கதாபாத்திரங்களை வைத்துக்கொண்டு நான் என்ன செய்வது? ஒரு பாத்திரத்தை அலசுவதை நிறுத்திவிட வேண்டுமா? அவற்றினுள் மின்னும் ஒளியை இப்போது அடங்கிவிட்டது என்று கொள்ள முடியுமா? மனிதர்கள் அவர்களின் வாழ்வின் எல்லையை அடைந்துவிட்டதாக எடுத்துக்கொள்ள முடியுமா? தனித்தன்மை என்பது சரித்திரத்தையும் கலாச்சாரத்தையும் சார்ந்து இருக்க வேண்டுமா? அதிகாரத்துடன் நம்மீது சார்த்தப்பட்ட நிபந்தனைகளை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டுமா? மனிதர்களின் மீதான உள்ளார்ந்த அக்கறையால் அல்ல, இந்தக் கருத்துக்களால் ஏற்படும் பிரச்சனை அது. இவற்றின் பழமையும் சாரமின்மையும் நமக்கு அவற்றின் மீது பற்றுதலை ஏற்படுத்தாமல் இருக்கிறது. தொந்திரவுகளின் மூலம் எங்கே என்று நாம் சிந்திக்க வேண்டும்.

பதனம் செய்யப்பட்ட உடல்களைச் சார்ந்து நிற்கும் அறிவுஜீவிகள் அடங்கிய ஒரு குழு படைப்பின் மீது விதியை நிர்ணயிக்கிறது. இத்தகைய தீவிரக் கட்டுரையாளர்கள் இலக்கிய வகைகளை பற்றித் தீர்மானிப்பது எனக்கு ஆயாசத்தைத் தருகிறது. கலை என்பது கலாச்சாரத்தைப் பின்பற்ற வேண்டுமா? எங்கோ தவறு நடந்திருக்கிறது.

ஒரு நாவலாசிரியன் அவனது விருப்பத்துக்கு ஏற்ப ஒரு பாத்திரத்தை ஏன் தவிர்க்கக் கூடாது? அவனது படைப்புத் திறமையின் உச்சம் முடிந்துவிட்டதால் இதைச் செய்யக் கூடாது என்று கருதுவது அபத்தமானது. நாம் நமது அறிவுஜீவிகளை நமது எஜமானர்களாக ஆக்கக் கூடாது. கலையை அவர்கள் நிர்வாகிப்பதை நாம் அனுமதிக்கக் கூடாது. அவர்கள் நாவல்களை படிக்கும் போது அவர்களது அபிப்பிராயங்களையே அவை தாங்கியிருக்க வேண்டுமா என்ன? நாம் இந்த உலகில் இம்மாதிரி விளையாட்டுகளுக்காவா படைக்கப்பட்டிருக்கிறோம்?

பாத்திரங்கள் படைப்பாளிகளால் உருவாக்கப்படுவதில்லை என்று ஒரு முறை எலிசபெத் போவென் கூறினார். அவை ஏற்கனவே உள்ளவை; அவை கண்டுபிடிக்கப்பட வேண்டியவை. அவைகளை நாம் கண்டுபிடிக்கா விட்டால், அல்லது, அவைகளை நாம் எடுத்துரைக்காவிட்டால், அது நமது குற்றம். அவற்றைக் கண்டுபிடிப்பது என்பது எளிதான காரியம்

அல்ல என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். மனிதர்களின் சூழ்நிலைகளைத் திட்டவட்டமாக அறிந்திருப்பது என்பது கஷ்டமான ஒன்று. நாம் உலகின் ஆதி நிலையின் ஆரம்பத்தில் இருக்கிறோம் என்று சிலர் கூறுவதும் சரிதான். நமக்குக் கிட்டுவதில் திணறும் போதே விழிப்புணர்வு சுட்டிக் காட்டும் நோவையும் உணருகிறோம். கடந்த நாற்பது வருடங்களில் அமெரிக்காவில் பல லட்சக்கணக்கான பேர் 'உயர் கல்வி'யைப் பெற்றிருக்கிறார்கள்- அதில் பலர் கேள்விக்கிடமான புகழைப் பெற்றவர்கள். எழுச்சி மிக்க அறுபதுகளில் முதல் தடவையாகப் புதுப்பிக்கப்பட்ட கல்வி, கருத்துருவாக்கங்கள், உணர்வுத் திறன்கள், மனோரீதியான, கல்வி தந்த அரசியல் யோசனைகள் ஆகியவற்றைப் பற்றி முதல் தடவையாக அறிந்துகொண்டோம்.

ஒவ்வொரு வருடமும் எண்ணற்ற புத்தகங்களும் கட்டுரைகளும் அமெரிக்க மக்களின் மனநிலை பற்றித் தெரிவிக்கின்றன. அவை புத்திசாலித்தனம் நிரம்பிய அல்லது எளிமையான அல்லது களியாட்டமான அல்லது அதிர்ச்சி தரும் அல்லது முட்டாள்தனமான செய்திகளை அடக்கியிருக்கும். நாம் சந்திக்கும் நெருக்கடிகளை எவ்வாறு எதிர்கொள்ள வேண்டும் என்று இவை தெரிவிக்கும். அந்த நெருக்கடிகள் ஏற்படுத்தும் குழப்பம், ஒழுங்கின்மை ஆகியவை பற்றி விளக்க வரும் ஆய்வாளர்கள், இந்த நெருக்கடிகளால்




உருவாக்கப்பட்டவர்கள்! அவர்களுடைய தீவிரமான ஒழுக்கம் பற்றிய பிரக்ஞை, ஒழுங்கின் மீதான ஆர்வம், சமூகத்தின் குறைகள் மீது கொள்ளும் பொறுமையின்மை, அரவணைப்பு, விரும்புவதின் மீது காண்பிக்கும் எல்லையற்ற பிரேமை, ஏக்கங்கள், எரிச்சல்கள், உணர்ச்சிகள், பரிவு, நற்குணம், மன உளைச்சல், போதைப் பொருள்களைக் கண்மூடித்தனமாக உபயோகிப்பது, மற்றும் வெடிகுண்டுகள் ஆகியவற்றை ஒரு படைப்பாளியாக நான் உற்று நோக்குகிறேன். மாஜி பாதிரியாரான மலாச்சி மார்ட்டின், தேவாலயம் பற்றிய தனது புத்தகத்தில், இன்றைய மைக்கலாஞ்சலோவின் The Captive என்னும் சிற்பத்துடன் ஒப்பிடுகிறார். 'ஒரு குவியலில் இருந்து முழுமையடையாது எழ விரும்பும் பொருளின் போராட்டமாக' இதைக் காண்கிறார். 'அமெரிக்கக் கைதி அவனுடைய போராட்டத்தில் 'விளக்கங்கள், அறிவுரைகள், எச்சரிக்கைகள், அவனைப் பற்றிப் பேச சுயமாகத் தம்மை வரித்துக்கொண்ட தீர்க்கதரிகள், பாதிரியார்கள், நீதிபதிகள், அவனைத் துன்புறுத்தும் நபர்கள்' ஆகியோரின் பிடிகளில் சிக்கி அலைக்கழிக்கப் படுகிறான்' என்கிறார் மார்ட்டின்.

இந்த அல்லாட்டத்தைப் பற்றி இன்னும் சற்று விரிவாக நான் சொல்லுகிறேன். தனிப்பட்ட வாழ்க்கையில் அச்சமூட்டும் குழப்பம். குடும்பங்களில் - கணவர்களுக்கு, மனைவிகளுக்கு, பெற்றோருக்கு, குழந்தைகளுக்கு - குழப்பம். ஒருவருக்கொருவரான விசுவாசங்களில், பாலின வழக்கங்களில் (இந்த லிஸ்டை நான்கொடுக்கப் போவதில்லை. களைப்பை உண்டாக்கி விட்ட சமாச்சாரம்) - மேலும் குழப்பம். இந்தத் தனிமனித ஒழுங்கீனம் மக்களைக் கலவரப்படுத்துகின்றது. நாம் விஞ்ஞானக் கதைகளில் கண்டு திகைப்படையும் கற்பனைகளை 'நியூயார்க் டைம்ஸ்' போன்ற பத்திரிகைகள் 'சாவை ஏற்படுத்தும் கதிர்கள்', 'ரஷ்ய அமெரிக்க விண்கலங்கள் வான் வெளியில் நடத்தும் போர்' என்று செய்திகளாக வெளியிடுகின்றன.

நவம்பர் 'என்கௌன்டர்' இதழில் அமைதியும் பொறுப்புணர்வும் மிக்க பொருளாதார மேதையும் என் சகாவுமான மில்டன் ஃப்ரெய்ட் மன், 'பிரிட்டிஷ் அரசு பொதுமக்களுக்காக நிதியொதுக்கி செலவு செய்யும் என்றால் கூடிய விரைவில் அதுவும் சிலியைப் போன்ற ஓர் ஏழை நாடாகி விடும்' என்கிறார். அவருக்கே திகைப்பை உண்டாக்கும் முன்கணிப்பு! சுதந்திரத்தையும் ஜனநாயக உரிமைகளையும் தந்த உயரிய குடியுரிமை சாசனத்திலிருந்து நாம் சர்வாதிகாரத்தைச் சென்றடைய வேண்டுமா என்ன? பிரிட்டன் சுதந்திரத்தையும் ஜனநாயகத்தையும் இழந்துவிடும் ஆபத்தில் இருக்கிறது என்று அதன் மரபில் வளர்க்கப்பட்ட யாரும் கூறுவது சரியல்ல; ஆனால், அதுதான் உண்மை!

நாம் வாழ முயற்சிக்கையில், இத்தகைய உண்மைகள், நம்மைக் கீழே தள்ளி விடுகின்றன. நான் புரஃபஸர்

ஃப்ரெய்ட்மனிடம் நிறுவனங்கள் காண்பிக்கும் எதிர்ப்பு, பிரிட்டனுக்கும் சிலிக்கும் கலாச்சார வேறுபாடுகள், இடையே உள்ள தேசிய குணத்துக்கும் மரபுக்குமுள்ள வித்தியாசங்கள், ஆகியவற்றைப் பற்றி விவாதம் நடத்த முடியும். ஆனால், நான் வெல்ல முடியாத விவாதத்துக்குள் இறங்க விரும்பவில்லை. நான் உங்கள் கவனத்தைக் கோருவதற்காகச் சொல்ல விரும்புவதெல்லாம், ஒழுங்கீனத்தின் பின்புலம், அழிவின் கோரமான காட்சி ஆகியவற்றின் மீதான மோசமான கணிப்புகளை நாம் எதிர்கொள்ள வேண்டியிருக்கிறது என்பதைத்தான்.

ஓர் இதழுக்கு இம்மாதிரி கட்டுரை ஒன்று போதும் என்று நீங்கள் நினைக்கக் கூடும். அதே இதழின் மற்றொரு பக்கத்தில் புரஃபஸர் ஹியூக் சேடன்-வாட்சன், அமெரிக்காவின் சீரழிவையும் அதன் விளைவுகள் உலகைப் பாதிப்பதையும் பற்றி ஜார்ஜ் கென்னன் அளித்த சமீபத்திய ஆய்வை விவாதித்திருக்கிறார். கென்னன் தனது ஆய்வில் அமெரிக்காவில் தலை தூக்கியிருக்கும் தீச்செயல்கள், க்ஷீணமுற்ற நகர வாழ்வு, போதைப் பொருள்களுக்கு அடிமையாயிருப்பது, ஆபாசப் படங்கள், சிறுமைத்தனம், கல்வித் தரத்தின் சீரழிவு ஆகியவற்றைச் சுட்டிக் காட்டி, இவை அமெரிக்காவின் எல்லையற்ற வலிமையை ஒன்றுமில்லாமல் ஆக்கிவிட்டதாகத் தன் முடிவைத் தெரிவித்துள்ளார். நாம் மற்றவர்களை வழி நடத்திச் செல்பவராக இருக்க முடியாதது மட்டுமின்றி இத்தகைய மோசமான நடவடிக்கைகளால் நாம் பலஹீனமான நிலமைக்குத் தள்ளப்படுகிறோம். புரஃபஸர் சேடன்-வாட்சன் எழுதுகிறார்: ‘மேல்மட்டத்தைச் சார்ந்த முடிவெடுக்கும் திறமை பெற்ற ஒரு லட்சம் ஆண்களும் பெண்களும் அவர்களுக்கு முடிவெடுக்கும் திறமையைக் கற்றுக் கொடுத்தவர்களும் சரணாகதி அடைய முடிவெடுத்தால் எந்த சமூகத்தையும் எதுவும் காக்க முடியாது.’

முதலாளித்துவத்தின் எல்லையற்ற அதிகாரம் என்பது இதுதான். அதன் லட்சியவாத எதிர்ப்பாளர்களின் நிலை என்ன? கேம்பிரிட்ஜில் விரிவுரையாளராகப் பணியாற்றும் திரு ஜார்ஜ் வாட்சனின் சிறிய ஆய்வு வந்திருக்கும் ‘என்கௌண்டர்’ பக்கத்துக்குப் போகிறேன். அது இடதுசாரிகளின் இனவாதம் பற்றியது. சமூக ஜனநாயக கூட்டமைப்பின் நிறுவனரான ஹின்மன் தென்னாப்பிரிக்கப் போர், யூதர்களால் நடத்தப்பட்டதாகக் கூறியிருப்பதைப் பற்றிச் சொல்கிறார் வாட்சன். மேலும் வெப்ஸ். அவருக்கு முன்பிருந்த ரஸ்கின், கார்லில், டி ஹெச் ஹக்ஸ்லி ஆகியோர் இனவாதக் கருத்துக்களைக் கூறியிருக்கிறார்கள் என்றும் ஏங்கெல்ஸ் கிழக்கு ஐரோப்பாவைச் சார்ந்த ஸ்லோவாக்கிய மக்களைப் புரட்சியை எதிர்த்த சாக்கடை மனிதர்கள் என்று கூறியதாகவும் வாட்சன் கூறுகிறார். இறுதியாக வாட்சன் கட்டுரையின் முடிவில் மேற்கு ஜெர்மனியின், ‘சிவப்பு ராணுவப்படை’யைச் சேர்ந்த உல்ரிக் மெயினாஃல்ப், ஒரு நீதிமன்ற விசாரணையின் போது, ‘புரட்சியாளர்களைப் பூண்டோடு அழித்தல்’ பற்றி அறிக்கை விட்டார் என்கிறார். அவரைப் பொறுத்தவரை ஹிட்லரின் ஆட்சிக் கால யூத எதிர்ப்பு என்பது முதலாளித்துவத்துக்கான விரோதம். ‘Auschwitz என்பதன் அர்த்தம் அறுபது லட்சம் யூதர்களைக்கொன்று குவித்துக் குப்பையில் எறிந்த செயல். அவர்கள் பணக்கார யூதர்கள்’ என்றார் அவர்.

நான் இந்த இடதுசாரி இனவாதிகளைக் குறிப்பிடக் காரணம் நல்லவர்களையும் கெட்டவர்களையும் இனங்காணுவது அவ்வளவு எளிய செயலன்று. அரசியல் சார்பு நிலைகளை ஒட்டித் தீதும் நன்றும் தீர்மானிக்கப்படுகின்றன. ஆனால், நான் என் நிலையைத் தெளிவுபடுத்தி விட்டேன்: எல்லா விதமான கவலைகளையும் நான் திறந்த மனதுடன் அணுகிப் பரிசீலிப்பவன். விழுவதும் ஒடுங்குவதும் தினசரி வாழ்வாகி விட்டது. தனிப்பட்ட வாழ்க்கையில் நாம் குமுறுகிறோம்; பொது இடத்தில் கேள்விகள் கேட்கப்பட்டு நாம் வதைக்கப்படுகிறோம்.

கலையும் இலக்கியமும் - அவை என்ன? நல்லது, பெரும் இரைச்சல் எழுகிறது; ஆனால், நாம் அதனால் ஆட்கொள்ளப்படுவதில்லை. இன்னமும் நம்மால் சிந்திக்க முடிகிறது, வேறுபடுத்திப் பார்க்க முடிகிறது, உணர முடிகிறது. அபத்தத்துக்கும் வெறும் சினத்துக்கும் முன்பு நம்முடைய தூய,நுணுக்கம் நிறைந்த பரிசுத்தமான செயல்கள் மண்டியிட மறுக்கின்றன. ஆனால், போதாது. தொடர்ந்து புத்தகங்கள் எழுதப்பட்டுப் படிக்கப்படுகின்றன. அலைபாயும் நவீன வாசகர்களைச் சென்றடைவது கஷ்டமாகத்தான் இருக்கிறது. ஆனால், இரைச்சல்களைக் கடந்து அமைதியான இடத்தை அடைவது சாத்தியமே. அந்த அமைதியான இடத்தில் அவன் நமக்காகக் காத்துக் கொண்டிருப்பதை நாம் காண முடியும். சிக்கல்கள் அதிகமாகும் போது அவசியமானவைக்கான விருப்பமும் அதிகரிக்கும்.

முன்முடிவெடுப்பதில் தயக்கம், ஏமாற்றம் அளித்த சித்தாந்தங்களைப் புறமொதுக்குதல், உன்மத்தம் பிடித்து வாழ்தல், உண்மை அல்லது சுதந்தரம், அல்லது விவேகம் போன்ற உயர்ந்த விஷயங்களைக் கைக்கொண்டுவிட விரும்பும் பேரார்வம், ஆகியவற்றை முதல் உலகப் போர் உருவாக்கிய ஓர் மாறுபட்ட மனிதன் உற்று நோக்கும் நிலைக்குத் தள்ளப்படுகிறான். நான் ஏதோ மிகைப்படக் கூறுவதாக நினைக்கவில்லை. சிதறுண்ட மனிதனை நாம் பார்க்கச் சாட்சியங்கள் உள்ளன. ஆம், பெரும்பாலானவை சிதறுண்டு போகும் அதே நேரத்தில் நாம் புடமிடப்படும் செயலாக்கத்தையும் பார்க்கிறோம். இது ரொம்ப நாளாக நடந்து கொண்டிருக்கிறது. ப்ரௌஸ்ட்டின் Time Regained நூலைப் பார்க்கும் போது இதை அவர் ஏற்கனேவே தெளிவாக அறிந்திருக்கிறார் என்று தெரிகிறது. முதல் உலக யுத்தத்தில் பிரெஞ்சு சமூகம் பற்றிக் கூறும்

அவரது நாவல் அவருடைய கலைத்தன்மையின் வலிமையைத் தெரிவிக்கிறது. தனிப்பட்ட அல்லது பொதுவான பயங்கரங்களைக் கலையின் மூலமாக அல்லாது ஒடுக்க முடியும் என்றால் அது நம்மைப் பற்றியோ வேறு எவரையும் பற்றியோ நாம் தெரிந்து கொண்டிருப்பது அவ்வளவுதான் என்றாகிவிடும். யதார்த்த உலகை, அதனைச் சுற்றியுள்ள பெருமிதம், தணியாத ஆசை, புத்திசாலித்தனம், பழக்கவழக்கம் ஆகியவை சூழ்ந்திருப்பதைக் கலை ஊடுருவிப் பார்க்கிறது. மற்றொரு யதார்த்தமும் அதனுடைய நேரடியான நேர்மையுடன் இருப்பதை நாம் காணத் தவறி விடுகிறோம். அந்த மற்றொரு யதார்த்தம் எப்போதும் சில குறிப்புகளை அனுப்பிக் கொண்டிருக்கிறது. கலையின் உதவியில்லாமல் நாம் அவற்றைப் பெற முடியாது. ப்ரௌஸ்ட் இக்குறிப்புகளை, 'உண்மை நிரம்பிய பதிவுகள்' என்கிறார். 'இந்த உண்மை நிரம்பிய பதிவுகள், நம்முடைய உறுதியான உள்ளுணர்வுகள், கலை இல்லாவிட்டால் நம்மிடமிருந்து மறைக்கப்பட்டு விடுவன. முடிவில் நம்மிடம் வாழ்க்கை என்னும் அர்த்தம் இழந்த சப்தம் மட்டுமே மிஞ்சும்.'

டால்ஸ்டாயும் இதனையே உரைத்தார். அவருடைய 'இவான் இலிச்' நாவல், வாழ்வையும் சாவையும் நம்மிடமிருந்து மறைக்கும் 'யதார்த்த முடிவுகளை'ப் பற்றி பேசுகிறது. அவனுடைய இறுதித் துக்கங்களில் இவான் இலிச் தனிமனிதனாக உருவெடுக்கிறான். யதார்த்த முடிவுகளை மறைக்கும் சக்திகளை கிழித்தெறிந்து தன்னை உணர்ந்துகொள்கிறான்.

ப்ரௌஸ்ட் கலையையும் அழிவையும் ஒரு சமமட்டத்தில் வைத்து நிறுத்துப் பார்த்தார். கலை என்பது வாழ்வின் அத்தியாவசியம் என்றும் மாயம் மிகுந்த சக்தியைக் கொண்டிருப்பதென்றும் அதன் நடமாட்டம் சுதந்திரம் நிரம்பியது என்றும் கருதினார். ஆனால், கலை வாழ்வின் நீரோட்டத்துடன், சென்ற காலத்தைப் போல, தொடர்பில்லாமல் இருக்கிறது. சரித்திரவியலாரான எட்கர் விண்ட் அவருடைய Art and Anarchy நூலில் ஹெகல் வெகு காலத்துக்கு முன்பே கலை மனிதனின் ஆற்றல்களுடன் தொடர்பு கொண்டிருக்கவில்லை என்னும் கருத்தைக் கொண்டிருந்தார் என்கிறார். இந்த ஆற்றல்கள் இப்போது விஞ்ஞானத்தால் - அறிவுசார் விசாரணைகளுக்குப் பின் ஒரு தளர்வற்ற சக்தி என்று கருதப்படுகின்றன. கலை விளிம்புகளை அடைந்து ஓர் அகன்ற அற்புதமான தொடுவானமெனக் காட்சியளிக்கிறது.

விஞ்ஞான உலகில் மக்கள் இன்னும் ஓவியம் தீட்டுகிறார்கள், கவிதை வடிக்கிறார்கள்; 'நவீனக் கலை வடிவத்தில் இந்தக் கடவுள்கள் எப்படித்தான் ஒளிர்ந்தாலும், கடவுளின் வடிவங்களில் பூரணத்துவம் காணப்பட்டாலும், அவை ஒன்றுக்கும் பிரயோஜனமில்லை' என்று ஹெகல் கூறுகிறார்; நாம் மண்டியிடுவதில்லை; நெடுங்காலத்துக்கு முன்பு பக்தியினால் நாம் மண்டியிட்டோம். சாமர்த்தியம், ஆராய்ச்சி, கண்டுபிடிப்புகள்கொண்டு வந்த மறுமலர்ச்சி ஆகியவை கலையின் நேரடித் தொடர்பைத் துண்டித்துவிட்டன. தூய கலை என்பதன் முக்கியமான சாதனை என்பது ஹெகலைப் பொறுத்தவரை முன்பு நிலை நிறுத்தியிருந்த பொறுப்புகளைத் துறக்க வைத்துவிட்டன. கலை 'தீவிரமாக' இயங்கவில்லை. கலை இப்போது. 'வலியை ஏற்படுத்தும் யதார்த்தத்தின் வரம்புகளுக்கு மேலே ஓர் புதிய வடிவை ஆத்மாவின் மூலமாக' எழுப்பப் பார்க்கிறது. இதைப் பற்றி யார் கவலைப்படுகிறார்கள் என்று நான் அறிய விரும்புகிறேன். நான் விவரிக்கின்ற நெருக்கடிகளை இந்த மையம் ஓரளவு அணுக முயலுகிறது.

பத்தொன்பதாம் நூற்றாண்டு ஐரோப்பிய எழுத்தாளர்கள் இலக்கியத்துக்கும் தனி மனித முயற்சிகளுக்கும் உள்ள தொடர்பை விட்டுத் தரவில்லை. இந்த மாதிரியான ஓர் குறிப்பே டால்ஸ்டாயையும் தாஸ்தோவ்ஸ்கியையும் அதிர்ச்சி அடைய வைத்திருக்கும். ஆனால், மேற்குலகில் பெரும் கலை ஆளுமைகளுக்கும் தனி நபர்களுக்குமான விலகல் ஏற்கனவே நடந்துவிட்டது அவர்கள் சாதாரண வாசகர்களையும் பூர்ஷ்வா ஜனத்திரளையும் ஒதுக்கி வைத்தனர். அவர்களில் சிறந்தவர்கள், 'ஐரோப்பா உருவாக்கிய கலாச்சாரம் கூர்மையாக இருந்தாலும் தடுமாற்றம் உடையதாகவும் எளிதில் அழிந்து விடும் போக்கைக்கொண்டதாகவும் பேரழிவில் முடிவடைவதாகவும் இருந்தது' என்று நம்பியதாக சரித்திரவியலாரான எரிக் ஆர்பாக் நம்மிடம் கூறுகிறார். இந்த எழுத்தாளர்களில் சிலர் நூதனமான அச்சமூட்டும் படைப்புகளை உருவாக்கினர். அவர்கள் முரண்பாடுடைய தீவிர எண்ணங்களை உருவாக்கினர். அவர்களில் பலர் தாங்கள் கூற விரும்புவது என்ன என்று விளக்க முயலவில்லை - அவை பொதுமக்களின் மீது அவர்கள்கொண்ட இகழ்ச்சியா, அவர்களின் கருத்துக்கள் மீதுகொண்டிருந்த வழிபாடா அல்லது நாணயமாக இருக்கவிடாமல் தடுத்துக்கொண்டிருந்த ஏதோ பலகீனங்களா என்பது பற்றி விளக்கம் தர முன்வரவில்லை.

இருபதாம் நூற்றாண்டிலும் தீவிரவாதம், கண்டுபிடிப்புகள் ஆகியவற்றை மீறி அவர்களுடைய செல்வாக்குதான் எங்கும் காணப்படுகிறது. அதற்குக் காரணம் நம்முடைய சமகாலத்தவர்கள் பழமைவாதத்தில் ஊறியிருப்பதுதான். அவர்கள் பத்தொன்பதாம் நூற்றாண்டின் தலைவர்களைப் பின்பற்றுபவர்களாகவும் பழைய சமூக மதிப்புகளைத் தொடர்பவர்களாகவும் இருக்கிறார்கள்; சரித்திரத்தையும் சமூகத்தையும் பத்தொன்பதாம் நூற்றாண்டு அளவுகோல்களால் மதிப்பிடுகிறார்கள். இலக்கியம் மறுபடியும் எளிமையும் உண்மையும் நிரம்பிய, குவிந்த ஆற்றல்களை நோக்கிச் சென்றால் இன்றைய எழுத்தாளர்கள் என்ன செய்வார்கள்?



நாம் மறுபடியும் நமது விருப்பத்தினால் மட்டும் அங்கே திரும்பி விட இயலாது. ஆனால், நமது விருப்பம் நமக்கு முக்கியம் என்பதால் நெருக்கடிகளின் விசை நம்மை அங்கே திரும்ப இழுத்துச் சென்று வைக்கும். எப்படியிருந்தாலும் வழிமுறைகள் பயனற்றவையே. எழுத்தாளர்கள் என்ன எழுத வேண்டும் என்று யாரும் உத்திரவிட முடியாது. கற்பனை, தான் செல்லும் வழியைக் கண்டுபிடித்தாக வேண்டியிருக்கிறது. ஆனால், ஒருவர் - அதாவது நாம் - திரும்பி விட வேண்டும் என்று ஆசைப்படலாம். எழுத்தாளர்களான நாம் மனித சமூகத்தைப் போதுமான அளவில் பிரதிபலிக்கவில்லை. அமெரிக்கர்கள் அவர்களைப் பற்றி என்ன சொல்லிக்கொள்கிறார்கள்? மனநல மருத்துவர்களும் சரித்திரவியலாளர்களும் பத்திரிகையாளர்களும் எழுத்தாளர்களும் அவர்களைப் பற்றி என்ன சொல்கிறார்கள்? ஒருவித ஒப்பந்த வெளிச்சத்தில் நமக்கு மிகவும் பரிச்சயமான வகையில் அவர்கள் தங்களைப் பார்த்துக்கொள்கிறார்கள். எனக்கும் ராப் க்ரில்லெட்டுக்கும் போரடிக்கும் இந்த ஒப்பந்த வெளிச்சக் காட்சிகள் சமகால உலக நோக்கிலிருந்து கிளம்புகின்றன; நுகர்வோர், ஆட்சிப் பணியாளர், கால்பந்தாட்ட ரசிகன், காதலர், தொலைக்காட்சிப் பார்வையாளர் ஆகியோரை நாம் நமது புத்தகங்களில்கொண்டு வருகிறோம். இந்த ஒப்பந்த வெளிச்சத்தில் வெளிவரும் வாழ்வு என்பது உண்மையில் சாவைக் குறிக்கிறது. இன்னொரு விதமான வாழ்க்கை என்று எடுத்துக் காட்டப்படுவதும் பொய்மை நிறைந்த ஒன்று. அது உண்மை அல்லாதது என்பதும் நமக்குத் தெரிந்திருந்தாலும் நமது எதிர்ப்பு அதைத் நிறுத்த முடிவதில்லை. ஏனெனில் அத்தகைய எதிர்ப்பு உறுதியான உள்ளுணர்வுகளிலிருந்து எழுகிறது. மனித சமூகம்அதிகயதார்த்தத்தையோயதார்த்தமின்மையையோ அதிக வசையையோ ஏற்றுக்கொள்வதில்லை.

நாம் நம்மைப் பற்றி உயர்வாக எண்ணுவதில்லை. நாம் நம்மைப் பற்றி அவ்வளவாக நினைப்பதும் இல்லை. நமது கூட்டாக நிகழ்ந்த சாதனைகள் 'அதிக அளவைக் கடந்துவிட்டதை' எண்ணி நாம் பெருமைப்படுகிறோம். ஜெட் விமானம் அட்லான்டிக் சமுத்திரத்தை நான்கு மணிகளில் கடந்துவிடுவதை சாதாரண ஜனங்களாகிய நாம் சாதனை என்று பூரிப்படைகிறோம். மேற்குலகில் முதலாளித்துவ நாகரிகத்தின் கடைசிக் கட்டம் வந்துவிட்டது என்று கேள்விப்படுகிறோம். சில வருடங்களுக்கு முன்பு சிரில் கானொல்லி, 'நாம் ஒரு முழுமையான திடீர் மாற்றத்தை அடையவிருந்தோம். முதலாளித்துவ வீழ்ச்சி மட்டுமல்ல, கார்ல் மார்க்ஸோ அல்லது சிக்மன்ட் ஃப்ராய்டோ எதிர்பார்த்திராத ஒரு மாபெரும் மாற்றம் யதார்த்த உலகை வசப்படுத்தி விட்டது' என்றார். அதாவது நாம் இன்னும் ஆரவாரத்தைக் கைவிடவில்லை; அது கைகூட நாம் உழைக்க வேண்டும். இது ஒரு அறிவார்ந்த பகுத்தாய்வா அல்லது ஓர் அறிஞரின் பகுத்தாய்வா என்று எனக்குத் தெரியவில்லை. பேரழிவு எப்போதும் பேரழிவுதான். சில தலைவர்கள் அவற்றை வெற்றி என்றுகொண்டாட முயல்வது பரம முட்டாள்தனம். நான் கூற முற்படுவது என்னவென்றால் நம்முடைய அறிஞர்கள் சமூகத்தில், சமூகப் பிரக்ஞை, வர்க்கம், மனிதத் தன்மை, அரசியல், பாலுணர்வு, சிந்தனைகொண்ட உள்ளம், பௌதிக அண்டம், வாழ்வின் பரிணாமம் ஆகியவை பற்றிக் கணிசமான மனப்பாங்குகள் உள்ளன. மற்ற எழுத்தாளர்களைக் காட்டிலும் மிகச் சிறந்த படைப்பாளிகளில் வெகு சிலரே இந்த மனப்பாங்குகளை / பழமைவாதங்களை மறுபரிசீலனை செய்ய முன் வந்தார்கள். ஜாய்ஸ், டி.எச். லாரன்ஸ் போன்ற ஆகச் சிறந்த படைப்பாளிகளின் சக்தி வாய்ந்த குரல்கள் இந்த மறுபரிசீலனையின் மகத்துவத்தை உணர்த்தின. சென்ற விடமெங்கும் அவர்களை யாரும் தீவிரமாக எதிர்க்கவில்லை. இருபதுகளுக்குப் பின் எவ்வளவு நாவலாசிரியர்கள் டி.எச். லாரன்ஸை இரண்டாம் முறை வாசித்தார்கள்? அல்லது புணர்ச்சி வீரியம் பற்றி வித்தியாசமான பார்வையில் விவாதித்தார்கள்? அல்லது தொழிற்துறைக் கலாச்சாரம் மனித உணர்வுகளைப் பாதிப்பதை? கிட்டத்தட்ட ஒரு நூற்றாண்டுக் காலமாக, இலக்கியம், பழைய கருத்துகளையும் கட்டுக்கதைகளையும் உத்திகளையும் மட்டுமே பயன்படுத்தியுள்ளது. 'கடந்த ஐம்பது வருஷத்தின் முக்கிய கட்டுரையாளர்கள்' என்று ராப் கிரில்லெட் கூறுகிறார். ஆம். கட்டுரைக்கு மேலே கட்டுரை, புத்தகத்துக்கு மேலே புத்தகம் - பாட்லேரின், நீட்சேயின், மார்க்சின், உளவியல் வல்லுனரின் - தீவிரமான கருத்துக்களை முன் வைக்கின்றன. குணாதிசயம் பற்றி ராப் கிரில்லெட் கூறுவது, பெரும் ஜன சமூகம், மனிதத்தன்மையற்று இருப்பது ஆகிய பழைய கருத்துகளுக்கும் பொருந்தும். இது எவ்வளவு சோர்வை ஏற்படுத்தும் விஷயம்! எவ்வளவு மோசமாக நம்மைக் காண்பிக்கிறது? அவர்கள் நம்மைத் தொல்லுயிரியல் அருங்காட்சியகத்தில் உள்ள எண்ணற்ற ஜந்துக்களைப் போலக் காண்பிக்க விழைகிறார்கள். நாமோ வளைந்து கொடுப்பதிலும் பன்முக ஆற்றல்கொள்வதிலும் கருத்துகளைத் தெளிவாக்க கூறுவதிலும் சிறந்தவர்கள்.

இப்போது முக்கியமான விஷயம் என்ன? கலையோ விஞ்ஞானமோ அல்ல, மனித குலம் தன்னைச் சுற்றிக் குழப்பமும் இருண்மையும் சூழ்ந்த நிலையில், தீர்மானிக்க வேண்டியது, அது உறுதியாகத் தன் காலில் நிலைத்து நிற்குமா அல்லது சரணடையுமா என்பதைத்தான். அனைத்து ஜீவராசிகளும் செயலில் இறங்கிவிட்டன. இம்மாதிரி சமயத்தில் நாம் சுமைகளை மூலையில் தூக்கி எறிய வேண்டும், கல்வி சார்ந்த சுமைகளை, நிறுவன அமைப்பின் வெற்றுரைகளைத் தவிர்த்து நமது சொந்த முடிவுகளை நாமெடுக்க வேண்டும். நமக்கான செயல்களை நாமே புரிய வேண்டும். நம் இருத்தல் ஒருகொடையென கான்ராட் மிகச் சரியாகச் சொன்னார். சிதிலமடைந்து விட்ட பல அமைப்புகளிலிருந்து நாம் அதை மீட்க வேண்டும். அந்த அமைப்புகளின் தோல்வி நிர்ணயிக்கப்பட்ட விதிகளைத் தளர்த்தி, வரையறுக்கப்படாத தவறான உணர்ச்சிகளிலிருந்து மீண்டு வர வழி செய்யும். வெகு காலமாக நான் மதிப்பு வைத்திருந்த கருத்துக்களை - அப்படியென்று நினைத்தவற்றை - அடிக்கடி ஒதுக்கி வைக்கிறேன். என் வாழ்வைப் பற்றியும் மற்றவர்களின் வாழ்வைப் பற்றியும் தெளிவாக உய்த்துணருகிறேன். 'கலை 'தீவிரமாக' இயங்கவில்லை. இப்போது. 'வலியை ஏற்படுத்தும் யதார்த்தத்தின் வரம்புகளுக்குமேலே ஓர் புதிய வடிவை ஆத்மாவின் மூலமாக' எழுப்பப் பார்க்கிறது என்னும் ஹெகலின் கருத்தை இந்த வாழ்வின் போராட்டக் கட்டத்தில் நான் உணருகிறேன். மனிதம் பற்றிய அடிப்படைப் புரிதலுடன் மட்டுமே, கலாச்சாரப் பரிச்சயம் எதுவுமற்று, கலையைப் பற்றி அறியாது இந்தப் போராட்டத்தில் இறங்கிய மக்கள் அல்ல இவர்கள். நமக்கேற்பட்ட தீங்குகளும் பிறழ்வுகளும் நாம் அனைத்து சிந்தனையில், கலாச்சாரத்தில் மிகவும் உயர்வானவர்கள் என்பதையே சுட்டிக் காட்டுகின்றன. நாம் அறிந்திருப்பதும் உணர்ந்திருப்பதும் கேள்விக்கு அப்பாற்பட்டவை. உண்மையுடன் இயல்பாக நடமாட விரும்பிய எழுத்தாளர்களைப் பாதித்து சோர்வை ஏற்படுத்தியவற்றை மறுபரிசீலனை செய்யப்பட இந்தப் போராட்டம் வழிவகுத்தது.

படைப்பாளிகள் பெரிதும் மதிக்கப்படுகிறார்கள். மதிநுட்பம் வாய்ந்த மக்கள் அவர்களிடத்தில் மிகுந்த பொறுமையைக் காண்பிக்கிறார்கள். தொடர்ந்து வாசிக்கிறார்கள். ஒவ்வொரு ஏமாற்றத்தையும் தாங்கிக்கொண்டு. இறையியல், தத்துவம், சமூகக் கண்ணோட்டம், அறிமுறை விஞ்ஞானம் ஆகிய இவை அனைத்தும் தராத ஒன்றைக் கலை மூலம் தரிசிக்க விரும்புகிறார்கள். மனிதர்களாகிய நாம் யார், எப்படிப்பட்டவர்கள், இந்த வாழ்க்கையின் அர்த்தம் என்ன என்பது போன்ற கேள்விகளுக்கு விரிவான, ஒப்புக்கொள்ளும்படியான, முழுமையான விளக்கத்தைத் தேடி, போராட்டத்தின் நடுவிலிருந்து அளவற்ற வேட்கையுடன் கேள்வி எழுந்து வருகிறது. மனித குலம் முழு பலத்துடன் அதன் விடுதலைக்காகப் போராடுகிறது. தனி மனிதர் அவரது ஆன்மாவைத் தேடி அலைகிறார். எழுத்தாளர்கள் மறுபடியும் நடுநிலைமையுடன் சேர்ந்துகொள்ள முன்வராவிட்டால் அது நடுநிலைமையின் குற்றமல்ல. அவர்கள்தாம் விரும்பி வரத் தயாராக இருக்க வேண்டும்.

நமது உண்மை நிலையின் சாராம்சம், சிக்கல், குழப்பம், நோவு ஆகியவை அனைத்தும் கணநேரத் தோற்றமாக காண்பிக்கப்படுகிறது. இவற்றையே ப்ரௌஸ்ட்டும் டால்ஸ்டாயும், 'உண்மையான பதிவுகள்' என்று அழைத்தார்கள். இந்த சாராம்சம் தன்னை வெளிப்படுத்தித் தன்னுள் மறைந்துகொள்கிறது. அது நம்மை விட்டுச் சென்ற பின் நம்மில் சந்தேகத்தை எழுப்புகிறது. ஆனால், இந்த ஆழமான பதிவுகளுடன் நாம் எப்போதும் தொடர்பில் இருக்கிறோம். பேரண்டத்திலிருந்து நாம் பெறும் வலிமையான சக்திகள் வந்து போகின்றன. நமது மொழியின் போதாமையால் இவற்றை விவரிக்க முடியாது தயங்குகிறோம். அதிலும் வெகு சிலர் மட்டுமே இவற்றைப் பற்றிப் பேசத் துணிகிறார்கள். அவர்கள், 'இதுதான் மெய்ப்பொருள்; அது சமூகக் கட்டு' என்று உரைக்க வேண்டும். ஒவ்வொருவரும் இதை அறிந்திருந்தாலும் அவர்கள் அதைப் பற்றிப் பேசுவதில்லை.

இலக்கியத்தின் மதிப்பு இந்த இடையறாத 'உண்மையான பதிவுகளில்' இருக்கிறது. பொருள்கள், செயல்கள், தோற்றங்கள் அடங்கிய உலகில் ஒரு நாவல், முன்னும் பின்னுமாக நகர்கிறது. மற்றொரு உலகிலிருந்து வரும் 'உண்மையான பதிவுகளை' நாம் இறுகப் பற்றிக்கொள்வதன் மூலம் அவை மாயைகள் அல்ல என்று தெளிவடைய முடிகிறது.

பல வருஷங்களாக நாவல்கள் எழுதிக் கொண்டிருக்கும் ஒருவர் இதை அறியாமல் இருக்க முடியாது. நாவல் இதிகாசமோ கவிதை நாடகமோ அல்ல. ஆனால், இப்போதைக்கு இதைத்தான் நாம் திறமையாகச் செய்ய முடியும். சாய்ந்துகொள்ள இன்றைய ஓர் இருப்பிடமாக அதை ஏற்றுக்கொள்ளலாம். இங்குதான் மெய்ப்பொருள் அடைக்கலம் கொண்டிருக்கிறது. நாவல் என்பது உண்மையான பதிவுகளையும் சில பொய்யானவற்றையும் சமமாக ஏற்றுக்கொள்வதைத்தான் நாம் வாழ்க்கை என்கிறோம். அது ஒவ்வொரு மனிதருக்கும் வேறுபாடான இருப்பு இருப்பதைச் சொல்லுகிறது. மாயையால் சூழப்பட்ட தனித்த இருப்பென்று ஒன்று கிடையாது என்று குறிப்பிடுவதன் மூலம், அது வாழ்வின் அர்த்தத்தையும் ஒற்றுமையையும் நடுநிலைமையையும் நமக்குத் தெரிவிக்கிறது. அடிப்படை, நீடிப்பு, அவசியம் ஆகியவற்றை எதிரொலிக்கும் வாழ்க்கையின் செயல்களிலும் சத்தியத்தின் தரிசனங்களிலும் பேரண்டத்தைக் காணக் கலை முயலுகிறது என்று கான்ராட் சொன்னது உண்மைதான்.

*mail to:* **weenvy@gmail. com**

# மணம்

என் மனைவியின் உடலைக் கண்ணாடிப் பெட்டிக்குள் வைப்பதற்கு முன்னால் முத்தமிட்டுவிட வேண்டும் என்று நினைத்தேன். செய்ய முடியுமா என்று தெரியவில்லை.

● **வேலு இராஜகோபால்**

ஓவியம்: **மிதிலா**

குளிரூட்டப் பயன்படும் கண்ணாடிப் பெட்டியை, அப்போதுதான் ஆஸ்பத்திரியிலிருந்து வந்த வேனிலிருந்து, வெள்ளை உடையணிந்தவர்கள் வீட்டுக்குள் கொண்டுவந்து இறக்கி வைத்தார்கள். ஏற்கனவே வீடெங்கும் மனிதர்கள் தென்படத் தொடங்கியிருந்தார்கள். இனி ஒருபோதும் என் மனைவியை முத்தமிட முடியாது என்ற வேதனை என்னுள் இறங்கியது. இதுவரையும் அவளுக்கு என் முத்தத்தைப் பெற விருப்பம் இருந்ததில்லை. ஆனால், அந்த நாள் அவள் இறப்பதற்குள் வந்துவிடும் என்று கனவு காணும் வாய்ப்பு இன்றுடன் முடிந்துவிட்டது. இடாத முத்தத்தை இப்போது இடுவது அவளுடைய ஆசைக்கு எதிரானது. ஆனால், எனக்குள்ள ஆசையை இன்றே நிறைவேற்றிவிட வேண்டும். அந்த என் ஆசையை நிறைவேற்றிக் கொள்ள இருக்கிற கடைசித் தருணம் இதுதான். அதற்கான நேரம் இன்று கடந்துவிடும்.



அவளுடைய எதிர்ப்புக்கு இனி ஒரு மதிப்பு இல்லை. என் விருப்பமும் அவள் எதிர்ப்பைத் தெரிவிக்க இயலாத நிலையும். அப்படி எதிர்ப்புத் தெரிவித்திருந்ததையும் நான் பொருட்படுத்தவும் தேவையில்லை. ஏனெனில் அது அவளுக்குத் தெரியப் போவதில்லை. எனவே கடைசி முறையாக அல்லது முதல் முறையாக, அவள் உடலைக் கண்ணாடிப் பேழையுள்ளே வைப்பதற்கு முன்னால், என் மென்மையான, தடித்த, குறுகிய மீசை வளர்ந்து குத்தும் கிழட்டு உதடுகளால், என் மனைவியின் உணர்வற்ற, உதடுகளில் ஒரு முத்தமிட அருகில் சென்றேன். அதற்குள் வேறு எதையோ யாரோ கேட்டார்கள். என் கவனம் சிதறிவிட்டது. ஆஸ்பத்திரியிலிருந்து வந்த உடலைக் குளிப்பாட்ட வேண்டாம் என்று யார் யாரோ பேசி முடிவெடுத்திருந்தார்கள். நான் இங்கே இருக்கிறேன் என்பதை நானேதான் எனக்கே நிரூபித்துக் கொண்டிருக்க வேண்டியிருந்தது. இந்த மனிதர்களைப் பொறுத்தவரை நான் அவள் கணவன். இந்த சமயத்தில் அதற்குமேல் எதுவும் இல்லை. எனக்கும் அவளுக்கும் மட்டுமேயான தனியிடம் ஒன்று என்றுமே இருந்ததில்லை. இருவரும் பேசிக்கொள்ளும் முறையும் வாதங்களும் நினைவுகளும் ஆர்வங்களும் ஏன் எதுவுமே பொருந்தியிருக்கவில்லை. ஆனால், நாற்பது ஆண்டுகள் சேர்ந்தே வாழ்ந்துவிட்டோம்.

நான் என் மனைவிக்குக் கடைசி முத்தம் இட்டு விடைபெற்றுக் கொள்ள விரும்புவதை மற்றவர்கள் புரிந்துகொள்வார்கள் என்று நான் நினைக்கவில்லை. அவர்களுக்கு அது ஒரு சாதாரண விஷயமாக இருந்திருக்கலாம். ஆனால், அதை அனைவருக்கும் முன்னால் செய்வதோ அல்லது அறிவிப்பதோ என்னால் முடியாது. அப்படிக் கொடுத்திருந்தால், மேற்கத்திய பண்பாட்டின் பாதிப்பில் வந்த முத்தம் என்று பலர் நினைக்கலாம். ஆனால், அவர்களுக்குத் தெரியாத சில விஷயங்கள் என்னிடம் உண்டு. அதில் ஒன்று, நான் அதுவரை என் மனைவிக்கு முத்தம் கொடுத்ததில்லை. முத்தம் கொடுக்காமலேயே கணவனும் மனைவியுமாக, பிள்ளைகளும் பெற்றுக்கொண்டோம். அதற்கெல்லாம் முத்தம் அவசியமில்லை என்பதைப் பின்னாளில் தெரிந்துகொண்டோம்.

என்னுடைய கடைசி முத்தம் என்ற ஒன்று இல்லாமலேயே என் மனைவியின் உடல் சவப்பெட்டிக்குள் போய் முடங்கிவிட்டது. அதுதான் என் முதல் முத்தமாகவும் இருந்திருந்திருக்கக் கூடும். எனது துரதிருஷ்டம் என்று நான் நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால், அவள் பார்வையில் அது அதிருஷ்டமாகிவிட்டது. அவள் என் முத்தத்திலிருந்து தப்பியே விட்டாள்.



என் மனைவிக்கும் எனக்கும் உள்ள வேறுபாடுகளில் தலையாய வேறுபாடு திருமணம் முடிந்த அன்றே எனக்குத் தெரிந்துவிட்டது. கருத்து ஒற்றுமை, கருத்து வேறுபாடுகளைப் பார்த்தா திருமணம் நடக்கிறது? மாடுகளுக்குப் பல்லையும் வேறு பலவற்றையும் பார்ப்பது போலப் பெண்ணையும் ஆணையும் பார்க்கிறார்கள். வெளிப்படையாகத் தெரிகிற குணங்களைப் பார்க்கத்தான் கற்றிருக்கிறோம். உள்ளிருப்பதை அறியவோ அதற்கு மதிப்புத் தரவோ இதுவரை நமது பண்பாடு நமக்குச் சொல்லித் தரவில்லையே. இப்படி அதையும் இதையும் பற்றி யோசித்து நான் வாழ்க்கையை வீணாக்கிவிட்டதாக அவள் கடைசிவரை சொல்லிக் கொண்டிருந்தாள். அது உண்மைதான் போலும்.

இப்படி நான் யோசித்துக் கொண்டிருப்பதற்குள் உடலை கண்ணாடிப் பெட்டிக்குள் வைத்துவிட்டார்கள். பக்கத்து வீட்டுப் பெரியவர் பவர் பிளக்கில் சுவிட்சையும் ஆன் செய்துவிட்டார். இனி நான் அவளைத் தொடமுடியாது. பிறகு என்ன, ஏதேதோ நடந்துகொண்டே இருந்தது. நானும் இருந்தேன். நடுநடுவில் அவள் உபயோகிக்கும் ஒரு சென்டின் மணம் அடித்துக் கொண்டிருந்தது. எனக்கு சென்ட் வாசனை அவ்வளவாகப் பிடிப்பதில்லை.

*mail to:* **vrajagopal59@gmail.com**

# தற்செயல்களும் திருப்புமுனைகளும்

'இலங்கை ஒலிபரப்புக் கூட்டுறவு ஸ்தாபனம்' என்ற சொல்லைக் கேட்டதுமே என் நினைவுக்கு வரக்கூடிய முதல் பெயர் பி.எச். அப்துல் ஹமீத்.

● பாவண்ணன்

அக்காலத்தில் அவர் வானொலியில் பேசும்போதெல்லாம் இன்னும் கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருக்கமாட்டாரா என்று தோன்றாத நாளே இல்லை. அந்த அளவுக்கு அவருடைய தெளிவான உச்சரிப்பும் வெண்கலக் குரலும் என்னைக் கவர்ந்த அம்சங்கள். சமீபத்தில் 'வானலைகளில் ஒரு வழிப்போக்கன்' என்னும் தலைப்பில் அவருடைய தன் வரலாற்று நூல் அ. முத்துலிங்கத்தின் முன்னுரையோடு வெளிவந்தது. புத்தகம் கைக்குக் கிடைத்ததும் ஒரே நாளில் படித்துவிட்டேன்.

வானொலி நிலையத்துக்கும் தனக்குமான தொடர்பு எப்படி தற்செயலாக உருவானது என்று தொடக்கப் பகுதியில் ஒரு புனைகதைக்கே உரிய சுவாரசியத்தோடு எழுதியிருந்தார் ஹமீத். அப்போது அவர் பள்ளிச் சிறுவன். வானொலியில் ஒலிபரப்பப்படும் சிறுவர் மலர் நிகழ்ச்சியைக் கேட்கும் ஆர்வம் கொண்டவன். ஆனால், அவருடைய வீட்டில் வானொலிப் பெட்டி இல்லை. அதனால் அவருக்கு தொடர்ச்சியாக வானொலி நிகழ்ச்சியைக் கேட்க வாய்ப்பு அமையவில்லை. நண்பர்கள் வீட்டுக்குச் சென்று கேட்பதை வாடிக்கையாக வைத்துக்கொண்டார்.



சிறுவர் மலர் நிகழ்ச்சியைக் கேட்டுவிட்டு தொடர்ச்சியாகக் கடிதம் எழுதும் சிறுவர்களில் ஐந்து பேருக்கு, வானொலி நிலையத்துக்கு வந்து நிகழ்ச்சி தயாராகும் விதத்தை நேரில் பார்ப்பதற்கான அழைப்பை அனுப்பும் ஏற்பாடு, அந்தக் காலத்தில் இருந்தது. அத்தகு அழைப்புக் கடிதமொன்று ஒருமுறை ஹமீதின் நண்பர்களுக்குக் கிடைத்தது. ஆனால், அவருக்குக் கடிதம் எதுவும் வரவில்லை. எனினும் நண்பர்களோடு சேர்ந்து அவரும் வானொலி நிலையத்துக்குச் சென்றுவிடுகிறார். ஐந்து பேர் வரவேண்டிய இடத்தில் ஆறாவதாக வந்தவன் வெளியே செல்லவேண்டும் என்று சொல்லிவிட்டால் உடனே வெளியேறிவிட வேண்டும் என்னும் நிபந்தனையை ஏற்றுக்கொண்டதால், அச்சிறுவர்கள் ஹமீதையும் தன்னோடு அழைத்துச் செல்கின்றனர்.

வானொலி நிலையத்துக்குள்ளே பல தயாரிப்பு வேலைகள் நடக்கின்றன. அவற்றையெல்லாம் அவர்கள் வேடிக்கை பார்த்தபடி நிற்கின்றனர். அன்று ஒரு சிறுவர் நாடக ஒத்திகையும் பதிவும் ஓர் அறையில் நடைபெறுகிறது. அந்த ஒத்திகைக்கு வரவேண்டிய ஒரு சிறுவன் வரவில்லை. தயாரிப்புக் குழுவினர் பதற்றத்தில் இருக்கின்றனர். பொருத்தமான ஒரு சிறுவனை எங்கே போய் தேடுவது என்று புரியாமல் குழப்பத்தில் ஆழ்ந்திருக்கின்றனர். அப்போது அறைக்கு வெளியே நின்றிருந்த ஆறு சிறுவர்களைப் பார்த்த ஒரு கலைஞர் ஒவ்வொருவராக தனியே அழைத்துச் சென்று உரையாடல் பகுதியைக் கொடுத்து படித்துக் காட்டச் சொல்கிறார். ஒருவருடைய உச்சரிப்பும் அவர் எதிர்பார்த்த விதத்தில் இல்லை. ஆனால், ஆறாவதாக அழைத்துச் செல்லப்பட்ட ஹமீத் படித்த விதமும் ஏற்ற இறக்கமுடன் அமைந்த உச்சரிப்பும் அக்கலைஞரைப் பெரிதும் கவர்ந்துவிடுகின்றன. உடனே ஹமீதை மட்டும் பதிவு அறைக்குள் அழைத்துச் சென்று நாடகத்தில் பாத்திரம் ஒதுக்கிக் கொடுத்து நடிக்க வைத்துவிடுகிறார்.

தொடர் நாடகம் என்பதால் ஒவ்வொரு வாரமும் ஹமீத் வானொலி நிலையத்துக்குச் செல்ல வேண்டியிருந்தது. அவர் குரலுக்குக் கிடைத்த வரவேற்பால் அந்த நாடகத்துக்குப் பிறகும் அவரைத் தேடி வாய்ப்புகள் வந்தபடியே இருந்தன. எதிர்பாராத விதமாக, படிப்பைத் தொடர்ந்து, அவரே ஓர் அறிவிப்பாளராக அந்த வானொலி நிலையத்துக்கு வந்துவிடுகிறார். அவர் விரும்பிய அறிவிப்பாளர் பணியை தன் பணிக்காலம் முழுதும் ஈடுபாட்டோடு செய்து ஓய்வுபெற்றார் ஹமீத்.

இப்படி தற்செயலாக நிகழும் திருப்பங்கள் மீது எனக்கு எப்போதும் ஓர் ஈடுபாடு உண்டு. அப்படி

என் வாழ்விலும் நண்பர்கள் வாழ்விலும் நிகழ்ந்த திருப்பங்கள் ஏராளமானவை. அவற்றைப் பிறரிடம் பகிர்ந்துகொள்ள நான் ஒருபோதும் தயங்கியதே இல்லை. ஒருநாள் விட்டல்ராவைச் சந்திக்கச் சென்றபோது அறிவிப்பாளர் ஹமீத் அவர்களுடைய வாழ்வில் ஏற்பட்ட திருப்பத்தைப் பற்றி விரிவாகச் சொன்னேன். அவரும் அதை ஆர்வமுடன் கேட்டுக்கொண்டார். பிறகு, "நீங்க சொல்றது நூத்துக்கு நூறு உண்மை பாவண்ணன். நாம பல சமயங்கள்ல ரொம்ப தீவிரமா திட்டம் போட்டு பல விஷயங்களைச் செய்வோம். எதுவும் நடக்காது. ஆனா என்னைக்கோ எதிர்பாராத ஒரு நாள்ல யாரோ ஒருத்தரால தற்செயலா ரொம்ப நல்லா நடந்துடும். நம்மால புரிஞ்சிக்க முடியாத ஒரு விசித்திரம் அதுல இருக்குது." என்றார்.

சில கணங்கள் தனக்குள்ளாகவே யோசனையில் மூழ்கியிருந்த விட்டல்ராவ், "என் வாழ்க்கையிலயும் பல விஷயங்கள் தற்செயலா நடந்திருக்குது பாவண்ணன். பல பேர் அப்படி நடந்த தற்செயல்களைப் பத்தி சொல்லவும் கேட்டிருக்கேன்." என்றார்.

"எந்த மாதிரியான தற்செயல் சார்?" என்று ஆர்வத்தோடு கேட்டேன். அவர் அதற்கு நேரிடையாகப் பதில் சொல்லாமல், "உங்களுக்கு வீணை எஸ். பாலச்சந்தரைத் தெரியுமா?" என்று கேட்டார்.

"நல்லாவே தெரியும் சார். அந்த நாள் ஒரு படம் போதுமே சார். அவருடைய பெயர் தமிழ்த் திரைப்பட உலகத்துல என்னென்னைக்கும் நிக்கும். 'பொம்மை', 'நடு இரவில்', 'மரகதம்'னு நல்ல நல்ல படங்களைக் கொடுத்தவர். அது மட்டுமில்லாம, பெரிய இசைக்கலைஞர். தமிழ்நாட்டுக்கே தெரிஞ்ச ஆளுமை."

"ஆமாம். உண்மையிலேயே பெரிய மேதைதான் அவர். கடைசி காலத்துல பாபநாசம் சிவனை அவருதான் ஆதரவா இருந்து பராமரிச்சாரு. நல்ல கருணையுள்ள மனிதர். நீங்க தற்செயல் பத்தி சொன்னதும், எனக்கு தற்செயலா அவருடைய ஞாபகமும் அவர் சொன்ன ஒரு சம்பவத்துடைய ஞாபகமும் வந்திடுச்சி."

"சொல்லுங்க சார்." என்று நான் அவர் சொல்லவிருக்கும் கதையைக் கேட்பதற்கு ஆர்வம் கொண்டேன்.

"இருங்க இருங்க. அதுக்கு முன்னால இன்னொரு விஷயத்தையும் சொல்லணும். அப்பதான் நான் எப்படி பாலச்சந்தர் சாரைத் தெரிஞ்சிகிட்டேன்ங்கறது உங்களுக்குப் புரியும்." என்றார்.

நான் அமைதியாக அவர் உரையாடலைத் தொடங்குவதற்காகக் காத்திருந்தேன்.

"அந்தக் காலத்துல நான் மவுண்ட் ரோட் எக்சேஞ்ச்ல வேலை செஞ்சிட்டிருந்தேன். எக்சேஞ்சுக்கு வந்து போகறதுல அதிக அலைச்சல் இருக்கக்கூடாதுங்கறதுக்காக



பி.எச். அப்துல் ஹமீது

பக்கத்துலயே தங்கறதுக்கு எடம் பார்த்தேன். அப்ப எங்க எக்சேஞ்சுக்கு எதிர்த்தாப்புல வெள்ளைக்காரன் காலத்துல கட்டுன ஹாரிஸ் பிரிட்ஜ் இருந்தது. மவுண்ட் ரோட்டையும் புதுப்பேட்டையையும் இணைக்கக்கூடிய பிரிட்ஜ். அதை ஒட்டி ட்ராம் போகற பாதை உண்டு. அதுக்குப் பின்னால ஒரு பெரிய வீடு இருந்தது. லட்சுமின்னு ஒரு பிராமின் லேடிக்குச் சொந்தமான வீடு. கீழ்ப்பகுதி முழுக்க அவுங்க இருந்தாங்க. மேல் பகுதியை தனித்தனி ரூமா பிரிச்சி எங்கள மாதிரியான ஆளுங்களுக்கு வாடகைக்குக் குடுத்திருந்தாங்க. நான் போய் கேட்ட நேரம் அங்க பத்தாம் நெம்பர் அறை எனக்குக் கிடைச்சிது. என் கூட அப்புன்னு ஒருத்தர் தங்கியிருந்தாரு. அந்தக் காலத்துல பி அண்ட் டி டைரக்டர்கிட்ட பெர்சனல் அசிஸ்டண்ட்டா இருந்தாரு அவரு. எனக்கு நல்ல ஃப்பிரண்டு. இப்ப அவருக்கு தொன்னத்திரெண்டு இருக்கும். இப்பவும் நாங்க ரெண்டுபேரும் அப்பப்ப போன்ல பேசிக்குவோம்."

"கும்பகோணத்துல இருக்காருன்னு சொல்வீங்களே, அவருதான?"

"ஆமாமாம். அவரேதான்."



*வீணை எஸ். பாலசந்தர்*

"அந்த லட்சுமி அம்மாவுடைய புருஷன் நடுவயசுலயே இறந்து போயிட்டாரு. அதுக்கப்புறம் அவுங்க ஒரு முஸ்லிம் ஆள திருமணம் செஞ்சிகிட்டு வாழ்ந்தாங்க. அவரும் ரொம்ப காலம் உயிரோடு இருக்கலை. அவரும் தவறிட்டாரு. அவுங்களுக்கு ஒரே ஒரு பையன். முதல் கணவர் வழியா பொறந்தவன். அவனுக்கு நல்ல இடமா பார்த்து பொண்ணெடுத்து கல்யாணம் செஞ்சி வச்சிட்டாங்க. மகனும் மருமகளும் அவுங்க கூடவே அந்த வீட்டுல இருந்தாங்க."

"சரி."

"அந்த மருமகளோட அம்மா பேரு ஜெயலட்சுமி. வீணை எஸ். பாலச்சந்தருடைய சொந்த அக்கா. நல்லா உயரமா அழகா இருப்பாங்க. அந்தக் காலத்துல தியாகராஜ பாகவதர் கூட சிவகவிங்கற படத்துல கதாநாயகியா நடிச்சவங்க. ஏதோ டிப்ரெஷன் பிரச்சினை அவுங்களுக்கு இருந்தது. ஆனா பார்க்கறதுக்கு அப்படித் தெரியாது. எப்பவும் சிரிச்ச முகத்தோடு இருப்பாங்க. எதுத்தாப்புல யாரு வந்தாலும் அவுங்ககிட்ட ரொம்ப உரிமையா பேசுவாங்க. எந்த வீடா இருந்தாலும் கவலைப்பட மாட்டாங்க. ரொம்ப இயல்பா உள்ள போய் உக்காந்து பேசுவாங்க. ரொம்ப நல்ல மனுஷி."

"இந்தக் காலத்துல அப்படி இருக்கறது ரொம்ப அபூர்வம் சார்."

"உண்மைதான். மாசத்துக்கு ஒரு தரமோ ரெண்டு தரமோ ஜெயலட்சுமி அம்மா தன்னுடைய மகளைப் பார்த்துட்டு போறதுக்காக அந்த வீட்டுக்கு வருவாங்க. அந்த அம்மா வர்ரதா செய்தி கிடைச்சதுமே, நம்ம லட்சுமி அம்மா படியேறி மேல வந்து எல்லா ரூம் கதவையும் தட்டி இன்னைக்கு எங்க சம்பந்தி அம்மா நம்ம வீட்டுக்கு வராங்க. திடீர்னு மாடி அறைங்களுக்கு வந்தாலும் வந்து கதவைத் தட்டுவாங்க. உங்கள கேக்காமயே கூட அறைக்குள்ள வந்தாலும் வருவாங்க. அப்படி ஒரு வேளை வந்தா யாரும் தப்பா நெனைச்சிக்காதீங்கன்னு ஒரு எச்சரிக்கைக் குரல் குடுத்துட்டு போவாங்க."

"ஏன்?"

"புதுசா இருக்கறவங்க ஜெயலட்சுமி அம்மாவுடைய போக்கைப் பார்த்து திகைச்சி நின்னுடக்கூடாதுங்கற நல்ல எண்ணம்தான். வேற எந்த காரணமும் இல்லை."

“சரி.”

“ஜெயலட்சுமி அம்மா ரொம்ப சாது. ஏதேதோ சம்பந்தா சம்பந்தம் இல்லாம பழைய கதைங்களை பேசிட்டு எறங்கிப் போயிடுவாங்க. அவ்ளோதான். அவுங்களோடு பேசிப்பேசி அவுங்க என்னென்ன விஷயங்கள பேசுவாங்க, என்ன கேப்பாங்கன்னு எல்லாமே எங்களுக்கு தெரிஞ்சிடுச்சி. வெறும் சாக்பீஸ்தான் அடிக்கடி கேப்பாங்க. ஸ்கூல்ல பிளாக்போர்ட்ல எழுதுவமே, அந்த சாக்பீஸ்ங்கதான். அவுங்களுக்காகவே நான் பல கலர்ங்கள்ல சாக்பீஸ் வாங்கி வச்சிருப்பேன். அந்த அம்மா கேட்டதுமே இந்தாம்மான்னு எடுத்துக் குடுத்துடுவேன்.”

அந்தத் தகவலைக் கேட்டதும் எனக்குத் திகைப்பாக இருந்தது. “சாக்பீஸ வச்சிகிட்டு அவுங்க என்ன செய்வாங்க?” என்று கேட்டேன்.

“சொல்றேன். அவசரப்படாதீங்க. அந்த அம்மா எல்லா சாக்பீஸ்ங்களயும் எடுத்துட்டு போய் மெத்தையில நிழல் இருக்கிற இடத்துல உக்காந்துகிட்டு அழகா பெரிசா ஒரு கோலம் போடுவாங்க. உண்மையிலயே பிரமாதமா இருக்கும். அந்த நிறம் தானாவே மக்கி மறைஞ்சாதான் உண்டு. எங்களுக்கு அதை அழிக்கவே மனசு வராது.”

“ரொம்ப ரசனை உள்ளவங்கன்னு நெனைக்கறேன்.”

“ஆமா. அதுல சந்தேகம் இல்லை. ஒருநாள் அவுங்க பொண்ணுக்கு சீமந்தம் நடந்தது. பொண்ண தாய் வீட்டுக்கு அழைச்சிட்டு போயிட்டாங்க. அதுக்கப்புறம் ஜெயலட்சுமி அம்மா அந்த வீட்டுப் பக்கம் வரலை. ரொம்ப நாள் நான் பார்க்கவே இல்லை. ஒரு குழந்தை பிறந்து நாலைஞ்சி மாசத்துக்குப் பிறகு மகளையும் பேரப்பிள்ளையையும் கொண்டுவந்து விடற சமயத்துலதான் ஜெயலட்சுமி அம்மா அந்த வீட்டுக்கு வந்தாங்க.”

“மாடிக்கு வந்தாங்களா?”

“ஆமாம். பழையபடி மாடிக்கு வந்து எங்ககிட்ட கலகலப்பா பேசினாங்க. சாக்பீஸ் வாங்கி வாசல்ல கோலம் போட்டாங்க. அந்தப் படம் பார்த்தியா இந்தப் படம் பார்த்தியான்னு சினிமா கதை பேசினாங்க.”

“சரி.”

“சில மாசங்கள் கழிச்சி, அந்தக் குழந்தைக்கு முதல் வருஷ பிறந்தநாள் கொண்டாட்டத்துக்கான ஏற்பாடு நடந்தது. கீழ லட்சுமி அம்மா வீட்டுகுள்ளயே ரொம்ப தடபுடலா ஏற்பாடு நடந்தது. விருந்து உண்டு, நீங்க எல்லாரும் அவசியம் வந்து கலந்துக்கணும்னு ரெண்டு மூனு நாள் முன்னாலயே லட்சுமி அம்மாவும் ஜெயலட்சுமி அம்மாவும் மாறிமாறி எங்களை அழச்சிட்டு போனாங்க.”

“சரி.”

“ஒரு குழந்தையுடைய பிறந்தநாள் கொண்டாட்டத்துக்குப் போற சமயத்துல வெறும் கையோடு போக எங்களுக்கெல்லாம் ரொம்ப கூச்சமா இருந்தது. சாப்பாட்டுக்கு வந்து நிக்கற மாதிரி யாரும் நினைச்சிடக்கூடாதுன்னு ஒரு சங்கடம். அதனால ரூம்ல தங்கியிருந்த நாங்க எல்லாரும் ஆளுக்கு கொஞ்சம் பணம் போட்டு ஒரு வெள்ளி கொலுசு வாங்கிட்டுப் போய் எங்க சார்புல அன்பளிப்பா கொடுத்தோம். ஜெயலட்சுமி அம்மாவுக்கும் லட்சுமி அம்மாவுக்கும் ரொம்ப சந்தோஷம்.”

“சரி.”

“நாங்க கூடத்துல உக்காந்து பேசிட்டிருந்த சமயத்துல உயரமா, நல்லா வாட்டசாட்டமான ஒரு புது மனிதர் திடீர்னு உள்ள வந்தாரு. பெரிய வி.ஐ.பி. ஒரு நிமிஷம் கனவா உண்மையான்னு எங்களுக்குப் புரியலை. ஆச்சரியத்தோடு அவரையே நாங்க பார்த்துட்டிருந்தோம்.”

“யாரு சார் அந்த வி.ஐ.பி.?”

“வீணை எஸ்.பாலச்சந்தர். உண்மையிலயே அவருக்குப் பின்னால ஒருத்தரு வீணையை வச்சிட்டு நின்னுட்டிருந்தாரு. அவ்வளவு பெரிய ஆள் அங்க ஏன் வந்தாருனு புரியாம ரொம்ப குழப்பிகிட்டிருந்தோம். ஒருவேளை அவரும் எங்களை மாதிரி பிறந்தநாள் விருந்துக்கு வந்தவரா இருக்குமோன்னு ஒரு யோசனை ஓடிச்சி. ஜெயலட்சுமி அம்மாவுடைய தம்பிதான் அவர்ங்கற விஷயம் அதுக்கப்புறம்தான் தெரிஞ்சிது.”

“சரி.”

“அந்த வீட்டு மருமகளுக்கு அவர்தான் தாய்மாமன். பெரிய சீர் வரிசையெல்லாம் அமர்க்களமா நடந்தது. விழா விவகாரம்லாம் முடிஞ்சதும் தரையிலயே பந்திப்பாய் விரிச்சி சாப்பாடு போட்டாங்க. நாங்க சாப்ட்டுட்டு மாடிக்கு வந்துட்டோம். கொஞ்ச நேரம் கழிச்சி பாலச்சந்தர் எங்களத் தேடி மாடிக்கு வந்துட்டாரு. அவரை உக்கார வைக்க எங்க ரூம்ல ஒரு நாற்காலி கூட அப்போ கிடையாது. டிரங்க் பெட்டி மேல படுக்கையை சுருட்டி வச்சி மெத்துமெத்துனு ஆக்கி அதும் மேல உக்காருங்க சார்னு சொன்னோம். கொஞ்ச நேரம் உக்காந்து எந்த வித்தியாசமும் பார்க்காம எங்ககிட்ட கலகலப்பா இயற்கையா பேசிட்டிருந்தாரு.”

“என்ன சொன்னார்?”

“இங்கயே கூடத்துல சாயங்காலம் நாலு மணிக்கு ஒரு கச்சேரி பண்ணப் போறேன். நீங்க எல்லாரும் அவசியம் வந்து கேளுங்க. அதைச் சொல்லறதுக்குதான் வந்தேன்னு சொன்னாரு. லீவ் நாளாச்சேனு எங்கயும் கௌம்பறதுக்கு திட்டம் போட்டுடாதீங்கன்னு சொல்லிட்டு போயிட்டாரு. மெட்ராஸ்ல நம்ம சபையில வந்து அவர் வீணை வாசிக்கமாட்டாரானு பல சபைகள் காத்திட்டிருந்த சமயம் அது. அப்படிப்பட்ட மகா வித்வானுடைய கச்சேரியை கேட்டு

ஆனந்தப்படறதுக்கான வாய்ப்பு ஒரு வீட்டுக்குள்ள ரொம்ப தற்செயலா எங்களுக்கு கிடைச்சது. அது எங்க வாழ்க்கையில கிடைச்ச பெரிய அதிர்ஷ்டம். அதை மறக்கவே முடியாது. வரோம் சார்னு சொல்லி பாலச்சந்தர் சாரை அனுப்பிட்டோம். சரியா நாலு மணிக்கு கீழ இறங்கி கூடத்துல இடம் பிடிச்சி உக்காந்துகிட்டோம். ஒரு மணி நேரம் ரொம்ப லயிச்சி ஆனந்தமா எங்களுக்காக அவர் வீணை வாசிச்சார். கண்ணை மூடி கண்ணைத் தெறக்கறதுக்குள்ள ஒரு மணி நேரம் ஓடிடுச்சி. இன்னும் கொஞ்சம் எங்களுக்காக வாசிக்கமாட்டாரானு நெனைச்சிட்டிருக்கும் போதே முடிச்சிட்டாரு. நிறுத்தறதுக்கே மனசில்லாம நாங்க எல்லாரும் ரொம்ப நேரம் கை தட்டிகிட்டே இருந்தோம். சிரிச்ச முகத்தோடு அவர் தலையைக் குனிஞ்சி கைகூப்பி வணக்கம் சொன்ன தோற்றம் இன்னும் என் கண்ணுமுன்னாலயே இருக்குது.''

விட்டல்ராவின் குரலில் நெகிழ்ச்சியை உணர முடிந்தது. இளமைப் பருவத்தில் அந்த வீணையின் இசை அவரை எந்த அளவுக்குக் கரைத்திருக்கக்கூடும் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடிந்தது. அவருடைய மௌனத்தைக் கலைக்கும் விதமாக, ''அவரை சந்திச்சது அந்த ஒரு சந்தர்ப்பத்துல மட்டும்தானா அல்லது மறுபடியும் பார்க்கறதுக்கு வாய்ப்பு கிடைச்சதா?'' என்றொரு கேள்வியைக் கேட்டு உரையாடலைத் தூண்டினேன்.

''அதுக்கப்புறம் ரொம்ப காலம் கழிச்சித்தான் அவரை நான் பார்த்தேன். அப்ப எனக்கு கல்யாணம் ஆயிடுச்சி. அந்த அறையைக் காலி செஞ்சிட்டு வேற இடம் பார்த்துட்டு போயிட்டோம். என் மனைவிக்கும் இசை மேல ஒரு பித்து உண்டு. அதனால கிருஷ்ணகான சபாவுல நாங்க ரெண்டு பேருமே உறுப்பினரா சேர்ந்து கச்சேரிங்களுக்கு போகறதை வழக்கமா வச்சிருந்தோம்.''

''சரி.''

''ஒருமுறை பாலச்சந்தர் ரஷ்யாவுக்குப் போய் திரும்பி வந்திருந்தார். அதனால அவருக்கு கிருஷ்ணகான சபாவுல ஒரு பாராட்டு விழாவுக்கு ஏற்பாடு செஞ்சிருந்தாங்க. பாராட்டு விழாவைத் தொடர்ந்து அவருடைய கச்சேரியும் உண்டுன்னு அழைப்பிதழ் அனுப்பியிருந்தாங்க. பாலச்சந்தர் கச்சேரியை கேக்கணும்னு என் மனைவிக்கு ரொம்ப நாளா ஒரு ஆசை இருந்தது. அந்த ஆசை நிறைவேறப்போவுதுன்னு அவள் ரொம்ப சந்தோஷமா இருந்தா. அப்ப பேச்சுவாக்குல முதன்முதலா நான் அவருடைய கச்சேரியை ரொம்ப தற்செயலா எப்படி கேட்டேங்கற கதையை என் மனைவிகிட்ட சொன்னேன். அதைக் கேட்டு இப்படியும் நடக்குமான்னு அவளுக்கு ரொம்ப ஆச்சரியம். நிகழ்ச்சி அன்னைக்கு ரெண்டு பேரும் சேர்ந்து கிருஷ்ண கானசபாவுக்கு முன்கூட்டியே நேரத்தோட போயிட்டோம். நல்ல வேளையா எங்களுக்கு, முன்னால, அஞ்சாறு வரிசைக்குள்ளயே இடம் கிடைச்சிட்டுது.''

''சரி.''

''சரியான நேரத்துல பாலச்சந்தர் மேடைக்கு வந்து எல்லாரையும் பார்த்து கை குவிச்சி வணக்கம் சொன்னாரு. அரங்கத்துல அஞ்சாறு நிமிஷம் ஒரே கை தட்டல் சத்தம். அதுக்கப்புறம் மாலை மரியாதையெல்லாம் செஞ்சாங்க. அப்ப ஆளு உசரத்துக்கு ஒரு பெரிய ரோஜா மாலையை பக்கத்துக்கு ரெண்டு பேரு புடிச்சி தூக்கிட்டு வந்தாங்க. அவரு அந்த மாலையைப் பார்த்ததுமே சட்டுனு பின்வாங்கி நில்லுங்க நில்லுங்கன்னு அவுங்களை கையைக் காட்டி நிறுத்தினாரு. அவுங்களும் நின்னுட்டாங்க. இவ்ளோ பெரிய மாலை யாருக்குன்னு கேட்டாரு. அவுங்க நாலு பேரும் உங்களுக்குத்தாங்க ஐயான்னு சொன்னாங்க. அதெல்லாம் வேணாம் வேணாம்னு எனக்குப் போடாதீங்கன்னு ரொம்ப பணிவா சொல்லி தடுத்துட்டாரு.''

''அப்புறம்?''

''அந்த மேடையில ஓரமா சரஸ்வதி படம் வச்சிருந்தாங்க. அதுக்கு சின்னதா ஒரு மாலையும் போட்டிருந்தாங்க. அதைப் பார்த்த பாலச்சந்தர் மாலையை வச்சிருந்தவங்க கிட்ட, ''அங்க பாருங்க, உங்க மாலையை அந்த சரஸ்வதி படத்துக்குப் போடுங்க. நான் சொன்னா கேளுங்க. அவுங்கதான் அந்த மாலைக்கு பொருத்தமானவங்க''ன்னு சொன்னாரு. அந்த ஆளுங்களும் வேற வழியில்லாம கொண்டுவந்த மாலையை அதை சரஸ்வதி படத்துக்கு போட்டுட்டு போயிட்டாங்க. அதுக்கப்புறம்தான் அவருடைய முகம் கொஞ்சம் நிதானத்துக்கு வந்தது. அதுவரைக்கும் பதட்டமாவே இருந்தாரு.''

''சரி.''

''நிதானமா மைக் முன்னால வந்து உக்காந்து தொண்டையை சரி பண்ணிகிட்டாரு. அப்புறம் கச்சேரிக்கு முன்னால ஒரு பத்து பதினஞ்சி நிமிஷம் உங்ககிட்ட பேசலாம்னு ஆசைப்படறேன், பேசட்டுமான்னு அரங்கத்துல உக்காந்திருந்தவங்களை பார்த்து கேட்டாரு. எல்லாரும் ஒரே குரல்ல பேசுங்க பேசுங்கன்னு சொன்னாங்க. உடனே அவரு மறுபடியும் கை குவிச்சி ரொம்ப நன்றின்னு சொல்லிட்டு பேசத் தொடங்கிட்டாரு.''

''என்ன பேசினாரு?''

''நான் பத்து பதினஞ்சி படங்களுக்கு இசை அமைச்சிருக்கேன். சின்னதும் பெரிசுமா இருபது இருபத்தஞ்சி படங்கள்ல நடிச்சிருக்கேன். ஒரு நல்ல வாய்ப்பு கூடி வந்ததால, இதோ ரஷ்யாவுக்கும் போய் வந்திருக்கேன். எல்லாமே எனக்கு தற்செயலா கிடைச்ச வாய்ப்புகள். இதுக்காக என்னைப் பாராட்டறீங்க. ரொம்ப சந்தோஷம். ஆனா எல்லாம் அளவோடு இருக்கணும். ஒருநாளும் நாம அளவு மீறி போயிடக் கூடாது. என் ஒரு ஆளயே ஏன் பாராட்டிட்டிருக்கீங்க? இருக்கிற இடம் தெரியாம, ஒரு வாய்ப்புக்காக

அல்லாடிட்டிருக்கிற கலைஞர்கள் இந்த ஊருல ஏராளமான பேருங்க இருக்காங்க. ஒருமுறை பாராட்டிய ஆளையே மறுபடியும் மறுபடியும் பாராட்டிட்டிருக்கிறதைவிட, புதுசா உருவாகிட்டிருக்கிற கலைஞர்களைக் கண்டுபுடிச்சி பாராட்டுங்க. அவுங்கள வெளிச்சத்துக்குக் கொண்டு வாங்க. அதுதான் நீங்க செய்யவேண்டிய வேலைன்னு சொல்லி நிறுத்தினாரு. சபை அப்படியே அமைதியில மூழ்கியிருந்தது.''

''அப்புறம்?''

''மனசுல இருக்கிறத சொல்லி முடிச்சதும் அவரு முகத்துல்ல ஒரு புன்னகை வந்துடிச்சி. ரொம்ப நார்மலாயிட்டாரு. உடனே மைக்ல ரொம்ப கேஷ்யுவலா பேச ஆரம்பிச்சிட்டாரு. சமீபத்துல நான் நெல்லூருக்குப் போயிருந்தேன். அப்ப ஒரு சம்பவம் நடந்தது. அதைச் சொல்லறதுக்கு இந்த மேடைதான் பொருத்தமான இடம்னு தோணுது. நெல்லூருல இருந்த சமயத்துல ஒரு காப்பி சாப்பிடறதுக்காக ஒரு ஓட்டலுக்குப் போயிருந்தேன். ஓட்டலுக்குள்ள சுவரோரமா ஒரு பெரிய மேசை இருந்தது. ஒரே ஒருத்தர்தான் உக்காந்திட்டிருந்தாரு. சரி, அவருக்கு எதுத்தாப்புல உக்காரலாம்னு போனேன். அங்க உக்காந்திட்டிருந்தவர் ரொம்ப உயரமா கன்னங்கரேலுனு இருந்தாரு. அழுக்கான ஒரு ஜிப்பா போட்டிருந்தாரு. தோள்ல ஒரு துண்டு மட்டும் தொங்கிட்டிருந்தது. கண்ண மூடி ஏதோ பாடிட்டிருந்தாரு. ஒரு சின்ன துணுக்குதான் என் காதுல உழுந்தது. ரொம்ப அற்புதமான சங்கதி. இன்னும் கொஞ்ச நேரம் கேக்கலாம்னு நான் சத்தம் காட்டாம அவருக்கு பக்கத்துல இருந்த நாற்காலியில உக்கார்ந்தேன்.''

''சரி.''

''அதுவரைக்கும் எங்கயோ இருந்த முதலாளி திடீர்னு நமஸ்காரமண்டி நமஸ்காரமண்டினு சொல்லிட்டே என் பக்கத்துல வந்து நின்னு பவ்யமா குனிஞ்சி உடம்பை வளைச்சி வணக்கம் சொன்னாரு. அது சாப்படறீங்களா, இது சாப்படறீங்களான்னு கேட்டு உபசரிக்க ஆரம்பிச்சிட்டாரு. எங்க எங்கயோ வேடிக்கை பார்த்துட்டு நின்னுட்டிருந்த சர்வர்ங்கள கூப்ட்டு என்னன்னு கேளுடான்னு அதட்டினாரு. அவரு எழுப்பின சத்தத்துல ஏதோ ஒரு பாட்டை மனசுக்குள்ள முணுமுணுத்தபடி ரசனையில கண்ணை மூடி லயிச்சிட்டிருந்த ஜிப்பாக்காரர் மெதுவா கண்ணத் தெறந்து பார்த்தாரு. அதுவரைக்கும் அங்க நடந்த எதுவுமே அவருக்குத் தெரியலை. தனக்குப் பக்கத்துல நின்னுட்டிருந்த கடைக்காரரைப் பார்த்து, ''ஐயா இட்லி வேணும்னு ஆர்டர் கொடுத்தேன். இன்னும் வரலையே''ன்னு கேட்டாரு. அந்த சர்வர் அந்த ஜிப்பாக்காரர் சொன்னதையே காதுல வாங்கிக்கலை. என்னைப் பார்த்து, ''என்ன வேணும்''னு கேட்டாரு. நான் வெறும் காப்பி போதும்னு சொன்னேன். அவரே உள்ள ஓடிப் போய் எனக்காக காப்பியைக் கொண்டாந்து குடுத்தாரு. எனக்கு காப்பி குடிக்கவே மனசில்லை. மொதல்ல அவருக்கு இட்லியை கொண்டுவந்து குடுங்கன்னு சொன்னேன். கொண்டுவந்து வச்சாங்க. அவரு நிதானமா ரசிச்சி ருசிச்சி சாப்ட்டாரு.''

''ஒரு கதை மாதிரி சொல்லியிருக்காரே.''

''ஆமாம். இன்னும் இருக்குது. கேளுங்க. பாலசந்தர் சொன்னார்: ''சாப்ட்டு முடிச்சதும் கையை கழுவிக்க போனாரு. அந்த நேரத்துலதான் எனக்கு காப்பி ஞாபகமே வந்துச்சி. காப்பியை தொட்டு பார்த்தா, சுத்தமா ஆறியிருந்திச்சி. வேற வழியில்லாம அதையே குடிச்சி முடிச்சேன். அந்த ஜிப்பாக்காரர் திரும்பி வந்து உக்காந்தாரு. எனக்கு அவருகிட்ட பேசணும்னு தோணிச்சி. நான் அங்க உக்காரும்போது தன்னை மறந்து அவர் பாடிட்டிருந்த பாட்டுதான் என் மனசுக்குள்ள இருந்தது. அதனால் அவரைப் பார்த்து இப்ப உங்களுக்குள்ளயே பாடிட்டீங்களே, அது தோடி ராகம்தானன்னு கேட்டேன். அவருக்கு நான் கேட்டது புரியலை. ''நாக்கு அரவம் தெளிலேது ஸ்வாமி''ன்னு தெலுங்குல சொன்னாரு. அதுக்கப்புறம் நான் அவருகிட்ட தெலுங்கிலயே பேச ஆரம்பிச்சேன். நான் கேட்டதை புரிஞ்சிகிட்டதும் அவருடைய முகம் மலந்துபோச்சி. ஆமாம், தோடிதான்னு சந்தோஷமா சொன்னாரு. அதுக்கப்புறம்தான் அவர் என்னை உத்துப் பார்த்து நான் யாருங்கற விஷயத்தைத் தெரிஞ்சிகிட்டாரு. உடனே ஸ்வாமி, நீங்களான்னு கேட்டுகிட்டே சட்டுனு எழுந்து நின்னுட்டாரு. அவரு முகத்துல ஒரே சமயத்துல சந்தோஷம், பதட்டம். சங்கடம், எல்லாம் தெரிஞ்சிது. நான் அவருடைய கையை புடிச்சி அமைதிப்படுத்தி உட்கார வச்சேன்.''

''உண்மையிலயே மகத்தான தருணம் சார் அது. கேக்கும்போதே மெய்சிலிர்த்துப் போகுது.''

''ஆமாம். அன்னைக்கு அவர் பேசப்பேச எனக்கும் அப்படித்தான் இருந்தது. இன்னும் இருக்குது, கேளுங்க. 'எனக்காக அந்தப் பாட்டை இன்னொரு தரம் பாடறீங்களான்னு கேட்டேன். அவருக்கு ஒரே சந்தோஷம். உடனே அந்தப் பாட்டை பாடினாரு. பிறகு மெதுவா அவருகிட்ட பேச்சு கொடுத்தேன். நீங்க யாரு, பாட்டு மேல எப்படி விருப்பம் வந்தது, பாடறதுக்கு எங்க கத்துகிட்டீங்கன்னு தெலுங்குலயே கேட்டேன். தன்னைப் பத்தி சொல்லிக்கறதுல அவரு ரொம்ப சந்தோஷப்பட்டாரு. ஒவ்வொன்னைப் பத்தியும் ரொம்ப ஆனந்தமா சொன்னாரு. ஆனா, சொல்லி முடிக்கிற சமயத்துல அவரு முகம் சப்பையா போயிடுச்சி. காரணம் என்னன்னு கேட்டேன். எப்படிப்பட்ட திறமைசாலியா இருந்தாலும், என்ன பிரயோஜனம் சாமி, ஒருத்தரும் மதிக்கமாட்டறாங்க, ஒருத்தரும் இங்க வந்து பாடுங்கன்னு ஒரு வாய்ப்பு கொடுக்கமாட்டுறாங்க. எங்க போய் கேட்டாலும் அப்புறம் பார்க்கலாம், அப்புறம் பார்க்கலாம், அவரை புக் பண்ணியிருக்கோம், இவரைப் புக் பண்ணியிருக்கோம்னு தள்ளி விடறதிலயே குறியா

இருக்காங்க. எங்கனா ஒரு சபையில, அல்லது ரேடியோ ஸ்டேஷன்ல பாடறதுக்கு ஒரு வாய்ப்பு கிடைச்சா நல்லா இருக்கும்னு சொன்னாரு. அவரு அப்படி பேசினதே என் மனசுக்கு ரொம்ப வேதனையா இருந்தது. உங்க அட்ரஸ எழுதிக் குடுங்கன்னு அவருகிட்ட கேட்டேன். அவரும் உடனே ஒரு தாள்ல அட்ரஸ எழுதிக் குடுத்தாரு. பில்ல கொடுத்துட்டு ஓட்டல்லேர்ந்து ரெண்டு பேருமா பேசிகிட்டே வெளியே வந்தோம். நீங்க எங்க போகணும்னு சொல்லுங்க, நான் உங்கள விட்டுட்டு போறேன்னு சொன்னேன். அவரு கேக்கலை. வேணாம் வேணாம். என் மகள் வீடு இங்கதான் பக்கத்துல இருக்குது. நான் நடந்தே போயிடுவேன்னு சொல்லிட்டு போயிட்டாரு. நான் வீட்டுக்குப் போனதுமே விஜயவாடா ரேடியோ ஸ்டேஷன் ஆட்களுக்கு போன் போட்டு அவரைப் பத்திய தகவலைக் கொடுத்துட்டு அவரு ஒரு அருமையான கலைஞர், அவரை நீங்க சரியான முறையில பயன்படுத்திக்கணும்னு ஒரு வார்த்தை சொல்லிட்டு வச்சிட்டேன்."

"சரி."

"அதுக்கப்புறம் என்ன நடந்ததுன்னு எனக்குத் தெரியாது. ஒரு வருஷத்துக்குப் பிறகு எனக்கு ஒரு லெட்டர் வந்திச்சி. நம்ம பாடகர்தான் அந்தக் கடிதத்தை எழுதியிருந்தாரு. நான் அவரைப் பார்த்துட்டு வந்த பத்தே நாள்ல விஜயவாடா ரேடியோ ஸ்டேஷன்ல பாடறதுக்கு அவருக்கு ஒரு வாய்ப்பு கொடுத்தாங்களாம். அதுக்கு நல்ல வரவேற்பு கிடைக்கவே அடுத்தடுத்து நிறைய வாய்ப்புகள் கெடைச்சிதாம். இப்ப நிலைய வித்வானாகவே வச்சிகிட்டாங்கன்னு எழுதியிருந்தாரு. அடுத்து சில மாசங்களுக்குப் பிறகு அவருக்கு ஹைதராபாத் ரேடியோ ஸ்டேஷன்ல பாடறதுக்கும் வாய்ப்பு கிடைச்சது. ஒரு வருஷ காலத்துல அவர் ரொம்ப பெரிய உயரத்துக்குப் போயிட்டாரு. கோவில் விழாக்கள்ல, சபா கச்சேரியில எல்லாம் பாட ஆரம்பிச்சிட்டாரு. எல்லாத்தயும் அவர் அந்தக் கடிதத்துல சுருக்கமா எழுதிட்டு, நான் உங்களை நேருல சந்திச்சிப் பேசணும், எப்ப வந்தா சௌகரியமா இருக்கும்னு எழுதுங்கன்னு கேட்டிருந்தாரு. அதைப் படிச்சதும் எனக்கு ரொம்ப சந்தோஷமா இருந்தது. எப்ப வேணும்னாலும் நீங்க வரலாம்னு நான் அவருக்கு எழுதிப் போட்டேன். சொன்ன மாதிரியே ஒருநாள் வீட்டுக்கு வந்து ரொம்ப நேரம் பேசிட்டிருந்தாரு. ஒரு சபாவுல அவருக்கு ஒரு கச்சேரி ஏற்பாடு செஞ்சேன். அவுங்க அவருக்கு நல்ல முறையில கௌரவிச்சி அனுப்பி வச்சாங்க."

"சரி."

"இந்தக் கதையை ஏன் இங்க சொல்றேன்னு உங்களுக்குத் தோணலாம். இப்படியெல்லாம் செஞ்சேன் பாருங்கன்னு பெருமை அடிச்சிக்கிறதுக்காக நான் இந்தக் கதையை இங்க சொல்லலை. தற்செயலா ஒரு திறமைசாலியைக் கண்டுபுடிச்சி நாம உருவாக்கிக் கொடுக்கிற ஒரு வாய்ப்பு அவுங்க வாழ்க்கைக்கே ஒரு புது வெளிச்சத்தை கொடுப்பதா மாறும். அதுல எனக்கு நம்பிக்கை இருக்குது. வெளிச்சத்துக்கு வரமுடியாத அவரை மாதிரியான ஆட்களை நாமதான் தேடித்தேடி கண்டுபுடிச்சி வெளியே கொண்டு வரணும். என்னை மாதிரியான ஆளுங்களுக்கு நீங்க கொடுத்திருக்கிற கௌரவமே போதும்னு சொல்லி எல்லாரையும் பார்த்து ஒரு பெரிய வணக்கம் போட்டாரு."



விட்டல்ராவ் உடன் பாவண்ணன்

"சரி."

"அடுத்த நிமிஷமே அவரு முகம் நிறைய புன்சிரிப்போடு நின்னாரு. அவரா இவ்வளவு நேரம் எல்லாரையும் பிரமிக்க வைக்கிற மாதிரி லெக்ச்சர் கொடுத்தாருன்னு தோணிடுச்சி. சரி பேசினதெல்லாம் போதும், இனிமே வெறும் இசை மட்டும்தான்னு சொல்லிட்டு போய் தன்னுடைய இடத்துல உக்காந்து வாசிக்க ஆரம்பிச்சாரு. கிட்டத்தட்ட மூனரை மணி நேரம். ஒரே இசை மழைதான். ராட்சசன் மாதிரி வாசிச்சாரு. கேட்டுட்டிருந்த எல்லாரையும் வேற ஏதோ ஒரு உலகத்துக்கு அழைச்சிட்டுப் போயிட்டாரு. அந்தக் கச்சேரியைக் கேட்டு ஒரு அம்பது வருஷமாவது இருக்கும். ஆனா அந்த இசை இன்னும் என் காதுல ஒலிக்கிற மாதிரியே இருக்குது."

இசையில் லயித்திருக்கும்போது தென்படும் பரவசத்தை நெகிழ்ந்திருந்த அவருடைய முகத்திலும் விழிகளிலும் பார்க்க முடிந்தது. அக்கணத்தில் எதுவும் பேசத் தோன்றாமல் அவருடைய முகத்தையே அமைதியாகப் பார்த்தபடி அமர்ந்திருந்தேன்.

சில கணங்களுக்குப் பிறகு, மெல்ல அவராகவே சொற்களைக் கூட்டி, "எல்லாருடைய வாழ்க்கையிலயும் ஒரு திருப்புமுனை இருக்கும் பாவண்ணன். அதை யாராலும் திட்டமிட்டு உருவாக்க முடியாது. அது எப்பவும் தற்செயலாதான் நிகழும். நீங்க என்னவா ஆகணும்ங்கறத அந்தத் தற்செயல் தீர்மானிச்சிட்டு போயிட்டே இருக்கும். ஒருவேளை விதின்னு நாம சொல்றது அதைத்தானோ என்னமோ" என்றார் விட்டல்ராவ்.

*mail to:* **writerpaavannan2015@gmail.com**

# சினிமாதான் யதார்த்த உலகத்தை அறிமுகப்படுத்தியது!

ஸ்பானிய இயக்குநரான விக்டர் எரைஸ் தனது ஐம்பது ஆண்டு காலத் திரையுலகப் பயணத்தில் மொத்தமாக நான்கு முழு நீளத் திரைப்படங்களை மட்டுமே உருவாக்கியிருக்கிறார். 1973இல் அவரது முதல் திரைப்படமான Spirit of the Beehive வெளியானது. 2023இல் Close Your Eyes வெளியாகியிருக்கிறது.

● விக்டர் எரைஸ் & அன்னா டோரண்ட்    தமிழில்: ராம் முரளி

இந்த இடைப்பட்ட காலத்தில் திரைப்படங்கள் சார்ந்த கட்டுரைகள் எழுதுவது, வகுப்பு எடுப்பது என ஏதேனுமொரு வகையில் திரைப்படங்கள் உடனான தமது உறவை அவர் தொடர்ந்தபடியே இருந்திருந்தாலும், பல்வேறு காரணங்களால் அவரால் தனது விருப்பத்தின்படி திரைப்படங்களை உருவாக்க இயலவில்லை. 1983இல் வெளியான அவரது The South திரைப்படம்கூட முழுமை பெறாத படைப்பாகவே இருக்கிறது. நிதிப் பற்றாக்குறையால் அத்திரைப்படத்தின் திரைக்கதையில் பாதி மட்டுமே படமாக்கப்பட்டது. ஆனாலும் அவரது இந்தச் சொற்ப எண்ணிக்கையிலான படைப்புகளின் மூலமாகவே பார்வையாளர்களின் மனதில் ஆழமான உணர்வுகளைக் கிளர்த்தியிருப்பதால் அவரை ஒரு தனித்துவம் மிகுந்த 'மாஸ்டர்' படைப்பாளியாக திரைப்பட காதலர்கள் கருதுகிறார்கள். குறிப்பாக, தனது நாட்டில் நிலவும் அரசியல் நெருக்கடிகளின் காரணமாக, வாழ்க்கையையும் யதார்த்தத்தையும் காலத்தின் அசைவுகளையும் அணுகுவதற்கு வெவ்வேறு கருவிகளை அவர் பயன்படுத்தியிருக்கிறார். அவரது அனைத்துத் திரைப்படங்களும் பல்வேறு அர்த்தப்படுத்தல்களுக்கு வழிகோலும் விதத்தில் இடைவெளிகளுடனேயே உருவாக்கம் பெறுகின்றன.



ஒரு பாத்திரத்தில் தேக்கி வைக்கும் தண்ணீரைப் போல காலத்தைத் திரைப்படங்கள் பதிவுசெய்வதாகக் குறிப்பிடும் விக்டர் எரைஸ் திரைப்படங்களின் மீதான தமது காதலைத்தான் Close Your Eyes-இல் வெளிப்படுத்தி இருக்கிறார். இந்தத் திரைப்படத்திற்குள் மற்றுமொரு திரைப்படமும் வருகிறது. அதுவொரு நிறைவுசெய்யப்படாத படம். அதில் பிரதான பாத்திரத்தில் நடித்திருந்த நடிகர் படப்பிடிப்பின்போது காணாமல் போவதால் அத்திரைப்படம் கைவிடப்படுகிறது. பல ஆண்டுகளாகியும் அந்த நடிகர் எங்கிருக்கிறார், அவருக்கு என்ன ஆயிற்று என்பதை யாராலும் கண்டுப்பிடிக்க முடியவில்லை. ஒரு தொலைக்காட்சி நிறுவனத்தின் முன்னெடுப்பால் மீண்டும் அவர் சார்ந்த தேடல் தொடங்குகிறது. முடிவுபெறாத அத்திரைப்படத்தின் இயக்குநர் தனது நண்பரும் தொலைந்து போன நடிகருமான ஹூலியோ அரேனஸைத் தேடத் தொடங்குகிறார். பல ஆண்டுகளாக எவ்விதத் திரைப்படச் செயல்பாட்டிலும் ஈடுபட்டிருக்காத அந்த இயக்குநர் இந்தத் தேடலின் விளைவாக மீண்டும் தனது நண்பரை மட்டும் கண்டுபிடிப்பதில்லை; மாறாக, திரைப்படங்களின் மீது முன்னொரு காலத்தில் தனக்கிருந்த வேட்கை, நிகழ்காலத்தில் அவரிடம் இல்லாதிருக்கும் புத்துணர்வு, ஒரு திரைப்படம் ஒரு மனிதரை என்னவெல்லாம் செய்ய முடியும் என்கிற புதிர் ஆகியவற்றையும் சேர்த்தே கண்டடைகிறார். படத்தின் இறுதியில், அந்த முழுமை பெறாத திரைப்படம் முதல்முறையாகத் திரையிடல் காண்கிறது. அதன் உருவாக்கத்துடன் தொடர்புடையவர்கள் மட்டுமே அங்குக் குழுமியிருக்கிறார்கள். விளக்கில் அடைப்பட்டு கிடக்கும் பூதத்தைப்போல யதார்த்தத்தில் ஒருபோதும் நிகழ்ந்திருக்காத தருணங்களின் தொகுப்பு பெட்டியில் இருந்து வெளிப்பட்டு திரையில் படருகிறது. அது உண்மையைப் போலவே இருக்கிறது. நிஜ உலகில் காணாமலாகியிருக்கும் ஒரு மனிதனின் ஆன்மா அதில் இருந்து கிளர்த்தப்பட்டு திரையரங்கில் அமர்ந்திருக்கும் அந்த மனிதனை நேருக்கு நேராகப் பார்க்கிறது. இந்தத் தருணத்துடன் Close Your Eyes பூடகமாகவே நிறைவுபெறுகிறது.



விக்டர் எரீஸ்

விக்டர் எரைஸின் மூன்றாவது திரைப்படத்திற்கும் இதற்கும் இடையில் 31 ஆண்டுகள் கழிந்திருக்கின்றன. Close Your Eyes திரைப்படத்தின் மூலம் விக்டர் எரைஸ் திரைப்படங்கள் உடனான தனது உறவையேதான் ஆராய்ந்திருக்கிறார்; இதுவொரு அகரீதியிலான பயணம் என்றே திரைப்பட விமர்சகர்கள் கருத்துரைக்கிறார்கள். தொலைந்த காலங்களுக்குள் ஞாபகச் சங்கிலியைப் பிடித்துக்கொண்டு பயணப்படும் ஒரு இயக்குநரும் ஒரு திரைப்படத்தில் நடிக்கச் சென்று அதிலுள்ள பல்வேறு கூறுகளால் மனச்சிதைவுற்று தனது யதார்த்த உலக அடையாளத்தை மறந்துபோகும் ஒரு நடிகரும் இதில் கலை மற்றும் வாழ்க்கை குறித்து நம்முடன் உரையாடுகிறார்கள்.

இதில் எனக்கு நெகிழ்வூட்டிய மற்றொரு அம்சம், Spirit of the Beehive திரைப்படத்தில் சிறுமியாக நடித்திருந்த அன்னாவும் இத்திரைப்படத்தில் நடித்திருக்கிறார். முந்தைய படத்தில் இருள் படர்ந்த திரையரங்கிற்குள் அமர்ந்து பெரும் மிரட்சியுடன் எப்படிப் படம் பார்க்கிறாரோ, அதேப்போல Close Your Eyes திரைப்படத்திலும் திரையரங்கில் அமர்ந்து தனது தந்தை நடித்த படத்தை அவர் பாக்கிறார். இப்போது அவரது முகத்தில் அதே மிரட்சி இருப்பதில்லை. மாறாக, தன் தந்தையின் ‘தொலைந்து போகுதலுக்கு’ காரணமான அத்திரைப்படத்தை ஒருவித விநோதத் தன்மையுடன் பார்க்கிறார். அன்னா டோரண்ட் இத்திரைப்படத்தில் தான் நடித்ததன் மூலம் ஒரு வட்டம் முழுமை பெற்றிருப்பதாகத் தெரிவித்திருக்கிறார்.

Close Your Eyes திரைப்படம் குறித்து விக்டர் எரைஸ், அன்னா டோரண்டிடம் மேற்கொள்ளப்பட்ட நேர்காணல்களின் தமிழாக்கம் இனி...

## சினிமாதான் எனக்கு யதார்த்த உலகத்தை அறிமுகப்படுத்தியது

**● விக்டர் எரைஸ்**

**Close Your Eyes திரைப்படத்திற்கான கதை உருவாக்கம் ஏதேனும் ஒரு படம், பொருள் அல்லது வேறேதேனும் ஒன்றில் இருந்து தொடங்கியதா?**

Close Your Eyes திரைப்படத்திற்கான முதல் யோசனை எனது முந்தைய திரைப்படமான The South குறித்த ஞாபகங்களில் இருந்தும் அது நிறைவுபெறாமல்

இருந்தது தொடர்பான எனது மன அயர்ச்சியில் இருந்துமே தொடங்கியது [பட்ஜெட் கட்டுப்பாடுகளால் தயாரிப்பு நிறுவனத்திடம் அவர் சமர்ப்பித்திருந்த திரைக்கதையில் பாதியை மட்டுமே படமாக்க முடிந்தது]. நிறைவுபெறாத திரைப்படம் குறித்தும் ஒட்டுமொத்தமாக, 'நிறைவுபெறாத தன்மை' பற்றிய கருத்துருவாக்கத்தையும் அது கலை மற்றும் வாழ்க்கையில் என்ன அர்த்தத்தைப் பெறுகிறது என்பதையுமே இத்திரைப்படம் பேசுகிறது. நீண்ட காலமாகவே இந்த யோசனை என் மனதில் குமைந்தபடியே இருந்திருந்தாலும், இத்திரைப்படத்தில் வருகின்ற இயக்குநரின் கதாபாத்திரத்தை உருவாக்கிய பிறகுதான், Close Your Eyes ஒரு வடிவத்தை எட்டியது. ஆகையால், இதன் தொடக்கம் என்பது ஒரு படமோ பொருளோ அல்ல. மாறாக, எனக்கு மிகவும் தனிப்பட்டதாக இருந்த ஓர் அனுபவமே ஆகும்.

**ஒரு கலைஞன் தான் உருவாக்கிய படைப்பை மீண்டும் திரும்பிப் பார்ப்பது எனும் கருபொருளை Close Your Eyes கையாள்கிறது. நீங்கள் உருவாக்கிய திரைப்படங்கள் உடனான உங்கள் உறவு குறித்து சிறிது பகிர்ந்துகொள்ள முடியுமா?**

சினிமாவுக்கும் எனக்குமான உறவை 'இருத்தலியல்' சார்ந்தது என்றே வரையறுப்பேன். அதாவது, சினிமா என்பதுதான் எனக்கு எல்லாமுமாக இருக்கிறது. அது எனக்கு தொழில் மட்டுமே அல்ல. இருத்தலியல் என இப்படி நான் குறிப்பிடுவது சினிமா கலையின் அனைத்து அம்சங்களையும் உள்ளடக்கியதாகும்: ஒரு திரைப்படத்தின் எழுத்தாளர், இயக்குநர் எனும் எனது பணி; பார்வையாளனாக நான் பெறும் அலாதியான அனுபவம், நான் பார்க்கும் படங்கள் குறித்த எனது பகுப்பாய்வு, பயிலரங்குகளில் ஆசிரியராகப் பங்கேற்பது எனது அனைத்துமே இதில் அடங்கும். அது முழுமையானது. இப்படிச் சொல்வது சற்றே அதீதமானது என நீங்கள் கருதக்கூடும்; ஆனால், போர்ஹேஸிடம் ஒருமுறை, 'இலக்கியம் என்றால் என்ன?' என்று கேட்கப்பட்டபோது, 'இலக்கின் ஒரு வடிவம்' என்றவர் பதிலளித்தார். அந்த நிலைப்பாட்டை அப்படியே நானும் பகிர்ந்துகொள்ளலாமா என்று தெரியவில்லை; ஆனால், எனது உணர்தலும் அப்படித்தான் இருக்கிறது: 'சினிமா என்பது எனது வாழ்விலக்கின் ஒரு வடிவமாகும்'.



close your eyes

**அனைத்தையும் உள்ளடக்கிய ஒன்றே சினிமா எனும் இந்த யோசனை எப்போது உங்களுக்கு உதித்தது?**

இதற்குப் பதிலளிக்க நாம் தொடக்கத்திற்குச் செல்ல வேண்டும். முதல்முறையாக நான் ஒரு திரைப்படத்தைப் பார்த்தபோது எனக்கு ஐந்தரை வயது ஆகியிருந்தது. அது பெரும் மிரட்சி தரும் அனுபவமாக இருந்தது. Spirit of the Beehive திரைப்படத்தில் அன்னா என்ன உணர்வைப் பெறுகிறாளோ அதே உணர்வைதான் நானும் அப்போது பெற்றேன். அது பயங்கரமான அனுபவம். முழு பயங்கரம். நான் பார்த்தது ஜேம்ஸ் வேலின் Frankestein அல்ல. அது ராய் வில்லியம் நீல் இயக்கிய The Scarlet Claw. அதுவொரு ஷெர்லாக் ஹோம்ஸ் கதாபாத்திரம் பங்குபெறும் திரைப்படம். ஆனால், எனது அனுபவமும் அன்னாவின் அனுபவமும் ஒரே விதத்திலானதுதான். La Morte Rouge எனும் குறும்படத்தில் இது எல்லாவற்றையும் நான் ஆவணப்படுத்தியிருக்கிறேன். ஆக நாம் இப்போது 1946ஆம் ஆண்டைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கிறோம். அது போருக்குப் பிந்தைய ஐரோப்பியா. அக்காலகட்டத்தில் முழு நிலமும் பெரும் பெரும் சிதைவுகளால் நிரம்பியிருந்தது. இந்த மாபெரும் பயங்கரத்தின் நேரடி விளைவுகளை எனது நாட்டிலும் எனது நகரத்தின் வீதிகளிலும் என்னால் பார்க்க முடிந்தது. நானிங்கு குறிப்பிடுவது ஸ்பானிய யுத்தத்தின் விளைவுகளை மட்டுமல்ல, இரண்டு உலக யுத்தங்களின் விளைவுகளைக் குறித்தும்தான். The Scarlet Claw எனும் புனைவுப் படைப்பு என்னை யதார்த்த உலகத்திற்கு அழைத்துச் சென்றது. அத்திரைப்படத்திற்கும் வீதிகளில் நிரம்பியிருந்த துயர் மற்றும் வெறுமைக்கு இடையிலான தொடர்ச்சியை என்னால் கண்டுணர முடிந்தது. என் நகரத்தில் இருந்த மக்கள் எப்படி உடை உடுத்தியிருப்பார்களோ அதுபோலவே அப்படத்தில் இருந்தவர்களும் உடை உடுத்தியிருந்தார்கள். ஒருவேளை அத்திரைப்படம் ரோம சாம்ராஜ்ஜியத்தின் பின்னணியில் உருவாக்கப்பட்டிருந்தால், அதில் பங்கேற்றிருந்த நடிகர்கள் வரலாற்றுக் கால உடைகளை அணிந்திருந்திருப்பார்கள்; என்னால் ஆழமான தொடர்ச்சியை அதில் உணர முடியாமல் போயிருக்கலாம். ஆனால், அதில் இருந்தவர்களின் தோற்றம் முழு யதார்த்தத்துடன் இருந்ததால், என்னால் இப்படியொரு தொடர்ச்சியை உணர முடிந்தது. இன்னொன்றையும் குறிப்பிட வேண்டும்,

அத்திரைப்படத்தில் ஒரு தபால்காரர்தான் கொலையாளியாக இருப்பார். எங்கள் நகரத்தில் இருந்த தபால்காரரும் அச்சு அசலாக அதேவிதமான உடையைத்தான் அணிந்திருப்பார். அதனால், இத்திரைப்படத்தைப் பார்த்ததற்குப் பிறகு, எப்போதெல்லாம் எங்கள் ஊருக்குத் தபால்காரர் வருகிறாரோ அப்போதெல்லாம் பெரும் அச்சத்துடன் ஏதேனுமொரு இடத்தில் நான் ஒளிந்துகொள்வேன். என்னைப் பொருத்தவரையில், சினிமாதான் எனக்கு யதார்த்த உலகத்தை அறிமுகப்படுத்தியது. என்னுடைய அனைத்துத் திரைப்படங்களும் யதார்த்தத்தில் நிகழ்ந்த ஏதோவொன்றின் வரலாற்றைக் கொண்டிருக்கும்.

**Spirit of the Beehive, La Morte Rouge ஆகியவற்றில் இளம் வயதினருக்கு ஏற்படுகின்ற இந்த மிரட்சியான அனுபவம் உங்கள் Close Your Eyes திரைப்படத்தில் அப்படியே தலைக்கீழாக்கப்பட்டிருக்கிறது. இதில் படத்தின் இறுதியில் வயதில் மூத்தவர்களுக்கு இந்த அனுபவம் ஏற்படுகிறது.**

Close Your Eyes திரைப்படத்தின் இறுதியில் நான் எழுப்பும் கேள்வியென்பது ரத்த உறவுகளும் நண்பர்களும் ஒரு மனிதரின் தொலைந்துபோன ஞாபகங்களை மீட்டெடுக்க முடியாதபோது, அதை ஒரு திரைப்படத்தால் மீட்டெடுக்க முடியுமா என்பதே. அது சவாலானது. இந்தக் கேள்விக்கு ஏராளமான பதில்கள் கிடைக்கும். எத்தனை நபர்கள் இந்தக் கேள்வியை எதிர்கொள்கிறார்களோ அத்தனை பதில்கள் இக்கேள்விக்குக் கிடைக்கும். இதில் முக்கிய அம்சம் என்னவென்றால், படத்தில் பங்குபெறும் நடிகர்கள் நேரடியாகக் கேமராவைப் பார்க்கும் சில கணங்கள் உள்ளன. அதாவது நடிகர்கள் நேரடியாகத் தமது பார்வையாளர்களைப் பார்க்க வேண்டும் என்பதே எனது நோக்கமாக இருந்தது. பார்வையாளர்களிடம் நான் ஓர் உரையாடலைத் தொடங்க வேண்டும் என்று விரும்பினேன். அதன்பிறகு, ஒரு மகளால் தனது தந்தையின் ஞாபகங்கள் மீட்டெடுப்பதற்கு உதவ முடியவில்லையா? அவனுடைய ஆகச் சிறந்த நண்பனும் இந்த முயற்சியில் தோற்றுவிட்டானா? ஒரு நடிகருக்கு, ஞாபகங்களின் வெற்றிடங்களை மீள்நிரப்புவதற்கு ஒரே ஒரு திரைப்படம் மட்டுமே மிக முக்கியமானதாக ஆகிவிட முடியுமா? என்பதுதான் இங்கு விவாதமாக இருக்கிறது. நடிகர்கள் தங்கள் வாழ்க்கையை எப்படி வாழ்கிறார்கள் என்று நமக்குத் தெரியும்.

La Morte Rouge படத்திற்குத் திரும்புவோம், அதில் கொலையாளியாக இருக்கிற தபால்காரர் என்பது தபால்காரர் வேடமணிந்திருக்கும் ஒரு நடிகர்தான். அதனால், 'ஒரு நடிகர் என்னவாகவெல்லாம் இருக்க முடியும்?' என்கின்ற கேள்வியைக் குறித்ததே இத்திரைப்படம். என்னளவில், இது மிகவும் அடிப்படையானது.

**படத்தில் இயக்குநர் கதாபாத்திரமான மிகுவெல், முன்பொரு காலத்தில் தான் எழுதியிருந்த 'சிதைவுகள்' எனும் புத்தகத்தை ஒரு புத்தகக் கடையில் மீண்டும் கண்டுப்பிடிக்கிறான். கடந்த காலத்தை ஆராய்வதில் தனிப்பட்ட விதத்தில் உங்களுக்கு ஆர்வம் இருக்கிறதா?**

உண்மை என்னவென்றால், திரில்லர் படங்களில் கையாளப்படும் அணுகுமுறையை இத்திரைப்படத்தில் நான் பயன்படுத்த வேண்டியிருந்தது. ஏதோவொன்று நிகழ்ந்திருக்கிறது, அது என்னவென்று யாரும் அறிந்திருக்கவில்லை, அதைக் கண்டறிய வேண்டும் என்கிற தீவிரம், அந்தத் தீவிரத்தால் ஆட்கொள்ளப்பட்டு மேற்கொள்ளப்படும் பயணம் என்பதே இதன் கதையோட்டமாக இருக்கிறது. என் படத்திற்கு நிதி உதவியைப் பெறுவதற்காகத் தெரிந்தேதான் இந்த அணுகுமுறையைப் பயன்படுத்தினேன். எனது முந்தைய படமான The Quince Tree Sun (ஆவணப்படம்) மிகவும் தீவிரமானது. அதில் நடிகர்கள் இல்லை, திரைக்கதை இல்லை; அதனால் அதைத் தயாரிப்பது மிகவும் எளிய பணியாக இருந்தது. ஆனால், இந்தப் படத்தைப் பொருத்தவரையில் எனக்கு ஏராளமான நிதி உதவி தேவை, அதன் பொருட்டு நான் வெவ்வேறு தொலைக்காட்சி நிலையங்களுக்குச் செல்ல வேண்டியிருந்தது. கலாச்சார அமைச்சகத்துக்கும் செல்ல வேண்டியிருந்தது; அவர்களுடைய விளையாட்டில் நானும் பங்கேற்க வேண்டியிருந்தது. அதனால், முன்னதாக எனது திரைக்கதையை அவர்களுக்குக் காட்ட வேண்டும். வழக்கமாக, பெத்ரோ கோஸ்தா போன்ற ஒருவர் எதிர்கொள்ள நேரிடும் அதே அனுபவம்தான் எனக்கும் கிடைக்கும் - நாங்கள்



*The South*

இருவருமே 'அமைப்பு முறைக்கு' (சிஸ்டம்) வெளியே செயல்படக்கூடியவர்கள். ஆனால், இந்தத் திரைப்படத்தைப் பொருத்தவரை நான் அவர்களின் அமைப்பிற்குள் இருந்தேதான் இயங்கினேன். இந்தச் சலுகையை நான் ஏற்றால் மட்டுமே என்னால் மீண்டும் ஒருமுறை மக்களிடம் திரைப்படத்தின் வாயிலாக உரையாட முடியும் எனும் சூழல் நிலவியது. அதனால் இந்தத் திரைப்படத்தில் எனக்கு சவாலாக இருந்தது என்னவென்றால் எப்படித் தெளிவின்மையில் (ஏதோவொன்று விடுபட்டிருக்கிறது எனும் உணர்வு) இருந்து புதிர்மைக்கு (பதில் அளிக்கப்படாதது, சாதுர்யமானது) செல்வது என்பதுதான். இது நிதி பெறுவதற்கான ஓர் உத்தியாகும். இப்படிச் செய்வதன் மூலம் நான் 'எதிரியின் ராஜ்ஜியத்திற்குள்' நுழைவதாக என் நண்பர் ஒருவர் வேடிக்கையாகக் குறிப்பிட்டார்.

**இருப்பினும், இது ஒரு விக்டர் எரைஸ் திரைப்படமாகவே இருக்கிறது. உங்கள் வழக்கமான பாணியில் இருந்து இதில் மாறுபடுகின்ற அம்சம் என்னவென்றால் டிஜிட்டல் வாயிலாகத் தோற்றுவிக்கப்பட்டிருக்கும் அழகியலே ஆகும்.**

நான் முன்பே டிஜிட்டலில் பணியாற்றி இருக்கிறேன். உண்மையில், இந்தத் திரைப்படத்திற்குள் வருகின்ற மற்றொரு திரைப்படமான The Farewell Gaze-ஐ உருவாக்கும்போது நான் ஃபிலிமைப் பயன்படுத்தினேன். டிஜிட்டல் குறித்த எனது எண்ணமென்பது, அது முன்னுதாரணம் இல்லாத வகையில், பிம்பங்களைக் கட்டுப்படுத்துவதற்கான வாய்ப்பை நமக்கு வழங்கியிருக்கிறது. இது மிக அற்புதமானது. ஆனால், இது திரைப்படத்தின் மொழி மற்றும் இலக்கணத்தில் ஏற்பட்டிருக்கும் மிக அடிப்படையான ஒரு மாற்றமாகும். தொடக்கத்தில், லூமியர் சகோதரர்கள் நினைத்தபடி, நாம் இப்போது பிம்பங்களைப் பதிவுசெய்வதில்லை; மாறாக, பிம்பங்களை உற்பத்தி செய்து வருகிறோம். என்றாவது ஒருநாளில் செயற்கை நுண்ணறிவே திரைப்படங்களை உருவாக்கக்கூடும் என்ற கருத்து நிலவும் புகைமூட்டமான ஒரு காலகட்டத்தில் நாம் இருக்கிறோம். என்னைப் பொருத்தவரையில், டிஜிட்டல் சினிமாவுக்கும் ஃபிலிம் மூலம் பதிவுசெய்யப்படும் சினிமாவுக்கும் வேறுபாடுகள் உள்ளன. இது ஒலி, ஒளியைப் பதிவுசெய்வது தொடர்பானது மட்டுமே அல்ல. அதாவது, திரைப்பட இயக்குநர்களான நாம், இப்போது கேமராவுக்கு முன்னால் இருக்கும் உலகத்தை மாற்ற முயல்வதில்லை; மாறாக, கேமராவுக்குப் பின்னால் இருந்து நாம் பதிவுசெய்யும் உலகத்தின் பிம்பங்களைத்தான் மாற்றிக் கொண்டிருக்கிறோம். இது எங்கெங்கிலும் உள்ள அனைத்துக் கலைஞர்களுக்கும் பேரிழப்பு என்றே கருதுகிறேன்.

**எந்தளவிற்கு டிஜிட்டல் வழி மறுவுருவாக்கத்தை அல்லது மேம்படுத்தலை இந்தப் படத்தில் கையாண்டீர்கள்?**



spirit of the beehive

எதுவுமில்லை. மிகச் சிறிதளவில் ஒளித் திருத்தங்களை மட்டுமே செய்தேன். போஸ்ட் புரொடக்‌ஷன் பணி என்று எதுவும் செய்யவில்லை. டிஜிட்டல் பிம்பங்கள் கணக்கீட்டு முறையை அடிப்படையாகக் கொண்டவை. ஒரு காலத்தில் செய்ததைப் போல, இப்போது ஒளிப்பதிவு இயக்குநர் நடைமுறை சார்ந்த கணக்கீட்டு முறையையோ அளவிடுதலையோ செய்வதில்லை. இன்றைய ஒளிப்பதிவு இயக்குநர்களுக்குத் தேவையாய் இருப்பதெல்லாம் ஒரு திறன் மிகுந்த கலரிஸ்ட் (பிம்பங்களில் நிறத்தைத் திருத்துபவர்) மட்டுமே. லூமியர் சகோதரர்கள் காலத்தில் - இதை நான் மிகை உணர்ச்சியுடன் சொல்லவில்லை அல்லது அந்தக் காலத்தின் மீதான பெரும் ஏக்கம் எதுவும் எனக்கு இல்லை - இருந்து எஞ்சிருப்பது என்னவென்றால் சினிமா என்கிற கலை மட்டுமே. ஆனால், திரைப்படங்களைப் பார்ப்பதற்குப் பார்வையாளர்கள் எங்கெல்லாம் சென்றார்களோ செல்வார்களோ, அந்த இடங்கள் எல்லாம் இப்போது கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து வருகின்றன. திரைப்படங்களைப் பார்ப்பதற்கேற்ற / பார்க்க வேண்டிய இடம் திரையரங்கம்தான். ஆனால், பெரு நிறுவனங்கள் அவற்றை அழித்து வருகின்றன. திரையரங்குகள் தக்கவைக்கப்பட வேண்டும் என்றே நினைக்கிறேன். பொது இடங்களிலும் மன்றங்களிலும் கவிதைகள் வாசிக்கப்பட்ட மத்திய காலத்திற்கு இவ்வெண்ணம் என்னைக் கொண்டுசெல்கிறது. திரைப்படங்களும் அத்தகையவைதான் என்றே கருதுகிறேன். நான் சிறுவனமாக இருந்தபோது, திரைப்படம் என்பது வீட்டிற்கு வெளியே எனது குடும்பத்தினருடனும் நண்பர்களுடனும் திரையரங்கில் குழுமியிருக்கும் எண்ணற்ற பிற மனிதர்களுடனும் உணர்வுரீதியில் ஒன்றிக் கலக்கும் ஒரு சமூகவியல் செயல்பாடாகவே

இருந்தது. இப்போது திரைப்படங்கள் வீட்டிற்குள்ளேயே புகுந்துகொள்ளும் சாத்தியம் நிலவுகிறது; உண்மையில் அதுதான் நடந்து வருகிறது. இதுவொரு மானுடவியல் மாற்றமாகும்.

**Close Your Eyes-தான் உங்களின் கடைசி திரைப்படமா?**

சில விமர்சகர்கள் இதுதான் எனது 'விடைபெறுதல் கீதம்' என்று தெரிவித்திருக்கிறார்கள். ஆனால், நான் அதை மறுக்கிறேன்; அதாவது எனது இலக்குகள் கல்லறையில் புதைக்கப்பட்டுவிட்டன என்று அவர்கள் தெரிவிக்கிறார்கள். ஆனால், எனக்கு இது மட்டுமே போதுமானது அல்ல, எனது பயணம் தொடர்ந்தபடியேதான் இருக்கும்.

***

# எனது வாழ்க்கை அர்த்தப்பூர்வமாக மாறியிருக்கிறது

● அன்னா டோரண்ட்

**Spirit of the Beehive திரைப்படத்தில் நடிக்க நீங்கள் தேர்வுசெய்யப்பட்டதும் அதில் பணியாற்றிய அனுபவமும் உங்களுக்கு நினைவில் இருக்கிறதா?**

முதல்முறையாக விக்டர் எரைஸைப் பார்த்தது எனக்கு நினைவிருக்கிறது. எங்கள் பள்ளி இடைவேளையின்போது என்னையும் பிற சிறுமிகளையும் சுற்றி நின்று எங்களையெல்லாம் அவர் புகைப்படம் எடுத்துக் கொண்டிருந்தார். தனது படத்தில் நடிக்க வைப்பதற்கு ஒரு சிறுமியைத் தேடி அவர் பல பள்ளிகளுக்குப் பயணம் செய்திருந்தார். அந்த வயதில் எனக்கு விநோதமாக இருந்த இந்தச் சம்பவம் குறித்து எனது பெற்றோரிடம் நான் பகிர்ந்துகொண்டது எனக்கு நினைவிருக்கிறது. அதன்பிறகு, நான் வகுப்பறையில் இருந்த ஒருநாளில் என்னை அவர்கள் அழைத்து அத்திரைப்படம் குறித்துத் தெரிவித்தனர். படப்பிடிப்பின் சூழலில் இருந்தும் சிலவற்றை என்னால் நினைவுக்கூர முடியும்: சூழல், சப்தங்கள், ஒளியமைப்புகள். அது நடிப்பது என்பதாகவே இல்லை, அதனால் அதில் பங்கேற்பதில் எனக்கு எவ்விதமான சிரமமும் உண்டாகவில்லை. அப்போது என்னை ஒரு நடிகையாகவும் நான் கருதவில்லை. உண்மையில், ஒரு சிறுமியாக அச்சூழலில் நான் விளையாடிக் கொண்டிருந்தேன் என்றே சொல்ல வேண்டும். அவ்வப்போது அவர்கள் எனக்கு சில வழிமுறைகளைச் சொல்லியபடி இருந்தார்கள். அந்தத் திரைப்படத்தில் நான் ஏற்றிருந்த கதாபாத்திரத்திற்கு முதலில் வேறொரு பெயர்தான் வைக்கப்பட்டிருந்தது. அதனால், ஏன் எல்லோரும் என்னை வேறொரு பெயரில் அழைக்கிறார்கள் என்ற புரிதல் இல்லாததால் குழப்பமுற்றிருந்தேன். இதை உணர்ந்துதான் விக்டர் என்னுடைய பெயரையே அந்தக் கதாபாத்திரத்திற்கு வைத்துவிட்டார் (Close Your Eyes திரைப்படத்திலும் இவர் ஏற்றிருக்கும் கதாபாத்திரத்தின் பெயர் அன்னா-தான்). நடிப்பு குறித்த புரிதலோ உணர்வோ எனக்கு இல்லை. நான் என்ன செய்துகொண்டிருந்தேன் என்பதில் தெளிவில்லை. புதிர்மிகுந்த ஒரு பெரும் மர்ம விளையாட்டாகவே அந்த அனுபவம் எனக்கு இருந்தது.

**உங்கள் வாழ்க்கையின் எந்தப் புள்ளியில் நீங்கள் ஒரு நடிகையாக ஆகியிருப்பதை உணர்ந்தீர்கள்?**

மிகவும் தாமதமாகத்தான். Spirit of the Beehive திரைப்படத்தில் எனது பங்களிப்பு மிகவும் தற்செயலானது. ஒருபோதும் நானாகவே நடிப்புத் துறையைத் தேர்வுசெய்திருக்க மாட்டேன். எனது குடும்பத்திற்கும் திரை உலகத்துடன் எந்தத் தொடர்பும் இருந்ததில்லை. நான் கூச்ச சுபாவம் உள்ளவளாகவும் அதிகம் யாருடனும் உரையாடல்களில் பங்கேற்காத நபருமாகவே இருந்திருக்கிறேன். அரங்கத்தில் நடிக்க



அன்னா டோரண்ட்





விரும்பும் சிறுமிகளைப் போன்றவள் அல்ல நான். எனக்கு 17, 18 வயது ஆனபோதுதான் நடிப்பு குறித்த புரிதலும் அதில் பங்கேற்கும்போது மகிழ்ச்சியும் எனக்கு ஏற்பட்டது. மறுபடியும் நான் விக்டருக்குத்தான் நன்றி தெரிவிக்க வேண்டும். Spirit of the Beehive திரைப்படத்திற்குப் பிறகு நாங்கள் தொடர்பில் இருந்தோம். அதனால் எனக்கு 16 வயதாகியபோது விக்டர் என்னிடம் எந்தத் துறையின் மீது எனக்கு ஆர்வம் இருக்கிறது, நான் எதைத் தேர்வுசெய்ய விரும்புகிறேன் என்று கேட்டார். எனக்கு உறுதியாகத் தெரியாததால், அவர்தான் நடிப்புத் துறையைத் தேர்வு செய்யுமாறு பரிந்துரைத்து, சில நடிப்பு சார்ந்த வகுப்புகளிலும் பங்கேற்கச் செய்தார். அப்போதுதான் இதுதான் எனது வாழ்வாக மாறப் போகிறது என்பதை உணர்ந்துகொண்டேன்.

**இப்போது பல தசாப்தங்கள் கடந்துவிட்டன. மீண்டும் நீங்கள் விக்டர் எரைஸுடன் Close Your Eyes திரைப்படத்தில் இணைந்து பணியாற்றி இருக்கிறீர்கள். எது உங்களுக்கு இந்தப் படத்தின் மீது ஆர்வத்தை ஏற்படுத்தியது?**

நான் மேடை நாடகங்களில் நடித்துக்கொண்டிருந்தேன். ஒரு வருடத்திற்கு முன்னால் விக்டர் என்னைப் பார்க்க வந்தார். நாங்கள் ஒன்றாக உணவருந்த சென்றோம். அப்போது விக்டர் இத்திரைப்படம் குறித்து என்னிடம் தெரிவித்தார். அந்தத் திரைக்கதை என்னை உணர்ச்சிரீதியாக வெகுவாகக் கவர்ந்துவிட்டது. விக்டர் எரைஸுடன் மீண்டும் இணைந்து செயல்படுவது தொடர்பாக எனக்கு ஒருபோதும் சந்தேகமோ கேள்விகளோ இருந்ததில்லை. இந்தத் திரைப்படத்தில் பங்கேற்பதை முதலில் நானொரு வேலையாகவே கருதவில்லை. இந்தத் திரைப்படத்தில் பங்கேற்பது ஒரு முழு வட்டத்தை நிறைவுசெய்வதாகவே எனக்கு இருந்தது. 50 வருடங்களுக்குப் பிறகு மீண்டும் எனது வாழ்க்கை அர்த்தப்பூர்வமாக மாறியிருக்கிறது எனும் உணர்வே எனக்கு உண்டானது. நான் ஏற்கெனவே குறிப்பிட்டதைப் போல, விக்டர் மட்டும் என்னைப் பல ஆண்டுகளுக்கு முன்னால் சந்தித்திருக்கவில்லை என்றால் நான் ஒருபோதும் இத்துறைக்குள் வந்திருக்கவோ நடிகையாக ஆகியிருக்கவோ மாட்டேன்.

**1976இல் கார்லோஸ் சாராவின் 'Cria Cuervos' திரைப்படத்திற்காகக் கேன்ஸ் விழாவுக்கு வந்திருந்தீர்கள். இப்போது பல ஆண்டுகளுக்குப் பிறகு மீண்டும் இந்தப்**

**படத்திற்காகக் கேன்ஸ் வந்திருப்பதை எப்படி உணர்கிறீர்கள்?**

*மிகவும் புத்துணர்ச்சியாக உணர்ந்தேன். எனது எட்டாவது வயதில் சாராவுடன் கேன்ஸ் வந்த புகைப்படம் என்னிடம் இருக்கிறது; ஆனால், எனக்கு அது சார்ந்த ஞாபகங்கள் எதுவும் இல்லை. அந்த வயதில் திரைப்பட விழாவின் முக்கியத்துவம் குறித்தோ அங்குப் பங்கேற்பதில் உள்ள அர்த்தம் குறித்தோ நான் எதையும் அறிந்திருக்கவில்லை. எனக்கு அது அழகானதாக இருந்தது. சாராவுடன் முன்பு கேன்ஸ் சென்றதும் இப்போது விக்டர் உடன் மீண்டும் அங்குச் செல்வது பெரும் மகிழ்ச்சியை என்னில் கிளர்த்துகின்றன. அது ரொம்பவும் அற்புதமான ஓர் உணர்வாக இருக்கிறது.*

**கார்லோஸ் சாரா சென்ற ஆண்டு தவறிவிட்டார். ஒரு சிறுமியாக அவருடைய படத்தில் பங்கேற்ற நினைவுகள் உங்களுக்கு உள்ளனவா? அவர் விட்டுச் சென்றிருக்கும் தடம் என்ன?**

*ஸ்பானிஷ் திரைப்படத் துறையில் அவர் மிகவும் முக்கியமான ஓர் ஆளுமை. ஸ்பானிய சினிமா என்று வரும்போது அதன் அடிப்படைகளை வடிவமைத்தவர்களில் அவரும் ஒருவர். அவருக்கும் எனக்குமான உறவு நல்லவிதமாகவே இருந்தது. அவர் ரொம்பவும் தன்மையாக நடந்துகொள்ளக்கூடியவர். எனக்கு அவரைப் பிடித்திருந்தது. அவருக்கும் என்னைப் பிடித்திருந்தது. அவருடன் வேலை செய்தது தொடர்பாக மிக அற்புதமான நினைவுகள் எனக்கு உள்ளன. எனது திரையுலகப் பயணத்தின் மிகத் தொடக்கக் காலங்களிலேயே கார்லோஸ், விக்டருடைய படைப்புகளில் பங்கேற்றிருப்பதற்கு நான் மிகவும் அதிர்ஷ்டசாலியாக இருக்க வேண்டும். அவர்கள் இருவருமே மரியாதையாகப் பிறரை நடத்தக்கூடியவர்கள் என்பதோடு சிறுவர்களின் மீது மிகவும் நேர்மையான ஆர்வத்தில் இருந்தவர்கள். அவர்கள் என்னிடம் மிகுந்த இணக்கத்துடன் இருந்ததோடு, நானாக இருப்பதே தங்களுக்குப் போதுமானது எனும் உணர்வையும் எனக்கு அளித்திருந்தார்கள்.*

**நீங்கள் பல ஆண்டுகளாக இத்துறையில் செயல்பட்டு வருகிறீர்கள். இதில் ஏற்பட்டுள்ள மிகப் பெரிய மாற்றம் என்று எதைக் கருதுகிறீர்கள்?**

*இன்றைய சினிமா முற்றிலும் வேறுபட்ட ஓர் உலகமாக இருக்கிறது. இந்தத் துறை செயல்படும் விதத்தில் அனைத்துமே இப்போது மாறியிருக்கின்றன. எது உருவாக்கப்பட வேண்டும், எது கூடாது என்பதைத் தீர்மானிப்பவர்கள் யார்? யாருக்குத் தேர்வு செய்வதற்கான அதிகாரம் இருக்கிறது? தயாரிப்பாளரின் வரம்பு என்ன? இயக்குநரின் வரம்பு என்ன? இவை அனைத்துமே மாறிவிட்டன. இப்போது இயங்குவது முற்றிலும் வேறான ஓர் உலகம்.*



**நீங்கள் தொடங்கியபோது இருந்ததில் இருந்து இப்போது ஸ்பானிஷ் திரைத்துறை ஒரு நல்ல நிலையை அடைந்திருப்பதாகக் கருதுகிறீர்களா?**

*அது எப்போதும் அலையலையாக மாறிக்கொண்டே இருக்கும். தற்போது, இத்துறை மிகவும் ஆரோக்கியமாக இருக்கிறது, நாங்கள் நல்ல நிலையிலேயே இருக்கிறோம். ஏராளமான திறன்மிகுந்த கலைஞர்களை என்னால் பார்க்க முடிகிறது, குறிப்பாக, பெண்களை அதிகளவில் பார்க்க முடிகிறது. இது முற்றிலும் உண்மை என்பதால்தான் மக்கள் இதுகுறித்து அதிகளவில் பேசுகிறார்கள். வெவ்வேறு கோணங்களில் இருந்து கதைகளைச் சொல்லும் பல முக்கியமான ஸ்பானிஷ் பெண் கலைஞர்கள் இப்போது உருவாகிவிட்டார்கள்.*

**அடுத்து என்ன செய்யவுள்ளீர்கள்?**

*குழந்தைகளுக்கான ஆங்கிலக் கார்ட்டூனில் ஒரு கதாபாத்திரத்திற்குக் குரல் கொடுத்து வருகிறேன். கடந்த ஓராண்டாகப் பணியாற்றி வரும் அந்தத் தொடரில் எனது பணிகளை அடுத்த மாதத்தில் நிறைவுசெய்கிறேன். அது ரொம்பவும் சுவாரஸ்யமான ஓர் அனுபவமாக இருந்தது. இந்த ஆண்டு வேறு சில படங்களில் பங்கேற்கிறேன். ஆனால், திரைப்படங்களைப் பொருத்தவரையில், கார்லா சினோம், பெத்ரோ ஆல்மதோவர் போன்ற பல இயக்குநர்களுடன் இணைந்து பணியாற்ற விரும்புகிறேன். இது என் விருப்பம் மட்டுமே, நிகழுமா என்று தெரியவில்லை. எனினும், எனக்கு வாய்ப்பு கிடைக்கும் அனைத்திலும் என்னுடைய அதிகபட்சத் திறனை வெளிப்படுத்தி வருகிறேன்.*

*mail to:* **raammurali@gmail.com**

# சீனப் பெண்

ஒரு காலத்தில் நான் சந்தித்த அந்த சீனப் பெண்ணுக்கு என்ன நடந்திருக்கும்?

● நோயல் நடேசன்
ஓவியம்: Shijun Munns

சிட்னியின் தென் மேற்குப் புறநகரில் உள்ள விவசாய ஆய்வு நிலையத்தை காரில் கடந்தபோது வசந்தன் நினைத்தான். சிட்னியில் நடக்கும் நண்பன் மகனது திருமண நிகழ்விற்குப் போகிறான். பல காலத்தின் பின்பு சிட்னி போகிறான். ஏற்கனவே பல தடவை சிட்னி போயிருந்தாலும் அவை எல்லாம் விமானப் பயணங்கள். போனோமா விடயத்தை முடித்தமா என வந்து விடுவான். சிட்னியில் இருந்த ஆரம்ப காலத்தை அதிகம் நினைப்பதில்லை. அதற்கு முக்கிய காரணம், அக்காலத்தில் அவன் வேலையற்று திரிந்த நாட்கள்.

அவள் சிட்னியில் எங்கு இருப்பாள்?

என்னிலும் பத்து வயதாவது அதிகமாக அவளுக்கு இருந்திருக்கும் என்பதால் நிச்சமாக அவளும் ஓய்வு பெற்றிருப்பாள் அல்லவா? இப்பொழுது அவளுக்கு எண்பது வயதாக இருந்தால் சில வேளையில் இறந்தும் இருக்கலாம். இல்லை இல்லை, பெண்கள் அதிக நாட்கள் வாழும் நாடு இது. ஏதாவது முதுமை இல்லத்தில் இருப்பாளோ?



இப்படிப் பல நினைவுகள்!

நெடுஞ்சாலையில் எதிர் திசையில் நூறு கிலோ மீட்டரில் அவனைக் கடந்து போகும் வாகனங்கள் பறந்து கொண்டிருந்தன. நண்பன் காரை செலுத்த, பயணிகள் இருக்கையில் இருந்தபடி, தொலைபேசியில் இருந்து வரும் எஸ். பி. பாலசுப்ரமணியத்தின் பாடல்கள் தாலாட்ட, அவனது கடந்தகாலம் அரும்பாகி, மொட்டாகி, முகையாகி நெஞ்சில் மலர்ந்தது.

வசந்தன், வேலையை விட்டு இளைப்பாறிய பின் பழைய நினைவுகளை அசை போடுவது வழக்கம். வேலை செய்யும்போது நினைவுகள் விலை மதிப்புள்ள, ஆனால், உடைந்த பீங்கான் துண்டுகளாக வந்து போனாலும், அவற்றை ஒன்றாக இணைத்து அசைபோட நேரம் இருக்கவில்லை. ஆனால், ஓய்வின்பின் பழைய நினைவுகளே தோள் கொடுக்கும் தோழனாக உள்ளது. பலருக்கும் இப்படியே!

நாற்பது வருடங்கள் முன்பு, இலங்கையிலிருந்து தனது மிருக வைத்திய வேலையை உதறிவிட்டு, அவுஸ்திரேலிய கனவுகளை தோள்களில் சுமந்தபடி குடிபெயர்ந்த காலத்தில், அவனுக்கு ஏற்பட்ட விசித்திரமான ஒரு கனவு அவனது வாழ்க்கைப் பாதையை மாற்றிவிட்டது.

எப்படித் தெரியுமா?

பல கிலோமீட்டரில் உள்ள புதிய இடத்திற்கு நீங்கள் காரில் செல்லும்போது யாராவது ஒருவர் தடுத்து, இந்த வழியாக போகாதே, பாதை சரியில்லை என சொல்லி உங்கள் காரின் பாதையை மாற்றிவிட்டால், ஆரம்பத்தில் ஏற்படும் மனபிராந்தி போன்றது அந்த கனவு. ஆனாலும் கனவு என அதை உதாசீனம் செய்யாது பாதையை மாற்றினான். அந்த பாதையில் அவன் வெற்றிகரமாக பயணித்தான் என்றே சொல்ல வேண்டும்.

அந்த கனவும் அது தொடர்பான சம்பவமும் இப்பொழுது நினைத்தாலும் அமைதியான ஒரு குளத்தில் எறிந்த கல்லாக பல அலைகளை ஏற்படுத்துவதுடன் முகத்தில் துளிகளைத் தெளித்துதான் ஓய்கிறது.

இரண்டு குழந்தைகள், வேலையற்ற மனைவி என அவளது அண்ணன் வீட்டில் ஒரு அறையில் ஒண்டுக் குடித்தனம் நடத்திய காலமது. அவனது மிருக வைத்திய அனுபவத்தில் அவுஸ்திரேலியாவில் எந்த வேலையும் கிடையாது என்பது அவனுக்குத் தெரியும். ஆனாலும் அந்த அனுபவத்தை வைத்துக்கொண்டு, வைத்தியர் நேர்சு வேலையைத் தேடுவதுபோல், அல்லது சிவில் எஞ்ஜீனியர் மேசன் வேலை தேடுவதுபோல், படிப்போடு தொடர்புடைய பல வேலையிடங்கள் ஏறி இறங்கினான். அக்காலத்தில் வசந்தனுடன் யாழ்ப்பாணத்தில் படித்த நண்பன் இங்கு மருத்துவ பரீட்சைக்காக படிக்கிறான்.

அவனை தற்செயலாக சந்தித்தபோது, “சிட்னியின் புறநகரில் ஒரு விவசாய ஆய்வு நிலையம் உள்ளது. அங்கு உள்ள பரிசோதனை சாலையில் உள்ள எலிகள், கினி பன்றிகள், முயல்களை பராமரிக்க ஒருவர் தேவை என பத்திரிகையில் விளம்பரம் பார்த்தேன். அங்கு நீ வேலைக்கு விண்ணப்பம் செய்தால் என்ன?” என்று ஆலோசனை சொன்னான்.

அவனது வார்த்தையில் நகைசுவையின் ஈரம் இருந்த போதிலும் அதைக் கண்டுகொள்ளவில்லை. ஊரில் ஆடு, மாடுகள் வைத்தியம் பார்த்த அனுபவம் இருக்கு, அத்தோடு படிக்கும்போது முயல்களை பற்றி கொஞ்சம் அறிவும் உள்ளது. எலி தானே. அவை தானாக சீவிப்பவை என்பதால், அதை பராமரிப்பது கடினமா?

அலட்சியத்துடன் வசந்தன் விண்ணப்பித்தான். சில நாட்களில் அவனை நேர்முகத்திற்கு வரும்படி ஒரு தொலைபேசி அழைப்பு வந்தது. கார் வைத்திராத காலம், இரண்டு ரயில்கள் எடுத்து காலை பத்து மணிக்கு அந்த இடத்திற்கு சென்றான். ரயிலில் இருந்து இறங்கியபோது ஏதோ கிராமப்புறம் போலத் தெரிந்தது. சிட்னி நகரம் முடிந்துவிட்டது போல் புற்தரைகள் கொண்ட பிரதேசம். அங்காங்கு நகரும் புள்ளிகளாக செம்மறிகளும் தெரிந்தன. அந்தப் பகுதியில் பிரதானமாக தெரிந்த கட்டிடத்தின் முன்பு விவசாய ஆய்வு நிலையம் என்ற பெயர்ப் பலகை தெரிந்தது.

அங்கே இருந்த கட்டிடத்தின் உள்ளே சென்று வரவேற்பில் இருந்த இளம் பெண்ணிடம் கேட்டபோது அவள் பக்கவாட்டிலிருந்த வேறு கட்டிடத்தைக் காட்டி, அங்கு போக சொன்னாள். அந்த கட்டிடம் தனியாக இருந்தாலும், பிரதான கட்டிடத்தைவிட பெரியது. கட்டிடத்தின் முன்பகுதியில் விவசாய பூச்சிகள் புழுக்கள் ஆய்வு (Agriculture Entomology) என்ற பெயரில் ஒரு அறிவிப்பு இருந்தது.

கட்டிடத்தின் உள்ளே சென்றதும், முன் அறையின் கதவில் டாக்டர் சூசன் சென் (Doctor Susan Chen) என்ற பெயர்ப்பலகை இருந்தது. அந்தக் கட்டிடத்தின் பின்பகுதி “ட” வடிவில் செல்கிறது. சில சிறிய அறைகள் அதன்பின் நீளமான பகுதியில் பரிசோதனைச் சாலை. அதன் முடிவில் மிருக வளர்ப்பு நடக்கவேண்டும் என்ற ஊகம் வசந்தனுக்கு வந்ததன் காரணம், அங்கிருந்து வந்த மொச்சை மணம் நாசியில் அவசரமாக ஏறியது. அதில் முயல்களின் மணத்திற்கு அவன் பரீச்சையமாயிருந்தான்.

முன்பகுதியில் உள்ள அறைக்கு முன்பு இருந்த வசதியான ஆசனங்களில் ஒன்றில் அமர்ந்தான். அதிக நேரம் இருக்கவில்லை. ஒரு சீனப் பெண் கதவை திறந்து சிரித்தபடி வந்தாள்: அவளுக்கு நாற்பது வயது இருக்கும். உதட்டுசாயம், கண் மை போட்டு தலைமயிர் விரித்தபடி இருந்தாள். அவள் வெள்ளை பிளாஸ்டிக் பாண்டை தலையில் போட்டிருந்தது அவளை பாடசாலை சிறுமியாக காட்டியது. ஆனாலும் அப்பொழுது பரிசோதனைக் கூடத்தில் போடும் வெள்ளை மேல் சட்டை போட்டிருந்தாள். அதுவே ஒரு விஞ்ஞானியாக நினைக்க வைத்தது. தலையில் வெள்ளைப் பாண்ட் அவளுக்குப் பொருத்தமில்லையென நினைவுகள் நெஞ்சில் முளைத்தபோதிலும், வெள்ளைப் பாண்ட் அவளது கூந்தலை ஒதுக்கமாக வைக்கிறதே என்ற நினைப்பில் ஆரம்பத்தில் ஏற்பட்ட நினைவுகளை மென்று விழுங்கிய படி, அவளைப் பார்த்து சிரித்தான் வசந்தன்.

“வசந்தனா?” என்றபடி கையை தந்துவிட்டு திரும்பி பெரிய கொரிடோரில், கருமையான ஹை ஹீல்கள் சத்தமிட நடந்தாள். தன்னைப் பின் தொடரும்படி சொல்லிவிட்டு அவசரமாக செல்லும் போது, அவளது பொருந்தாத வெள்ளைத் தலை பாண்டையும் கறுப்பு லெதராலான ஹை ஹீல்களும் அவனது மனத்தை உறுத்த, அவளின் பின்பகுதியின் அசைவுகளில் கண்களை செலுத்தியபடி அவளைத் தொடர்ந்தான்.

உண்மையில் அழகானவள், பத்து பதினைந்து வருடங்கள் முன்பு இன்னும் நன்றாக இருந்திருப்பாள் என்ற ஆணுக்குரிய சிந்தனை அவனது மனதில் அலைக்கழித்தது. பரிசோதனை சாலையுள் அழைத்து சென்று அங்குள்ள ஒரு இருக்கையில் அமர்ந்து வசந்தனையும் அமர சொல்லிவிட்டு, “உனது சகல விடயங்களையும் ஏற்கனவே படித்தேன். மிருக வைத்தியம் படித்து சில வருடங்கள் வேலையும் பார்த்த உன்னை, பரிசோதனைச் சாலையில் முயல், எலி பராமரிக்கும் வேலையில் அமர்த்துவது வீணான செயல் என நினைக்கிறேன். எனது ஆய்வில் உதவியாளராக இருக்க உனக்கு சம்மதமா” என்றாள்.

பசியில் ஏதாவது உணவு கொஞ்சமாவது கிடைக்குமா என உள்ளே எட்டிப் பார்த்த அவனுக்கு, அழைத்து வடை பாயசத்துடன் விருந்தா என மனதில் சந்தோசப்பட்டு ஒப்புக்கொண்டு தலையாட்டினான்.

அவள் மீண்டும், “ஆரம்ப நாட்களில் உனக்கு சம்பளம் தர முடியாது. எனது புராஜெக்ட் இப்பொழுது மேலிடத்தில் அங்கீகாரத்துக்காக உள்ளது. மேலும் ஒரு கிழமை அல்லது இரு கிழமைகளில் அங்கீகரிக்கப்படும். அதுவரையும் வேலையை பார்க்க வேண்டும். ப்ராஜெக்ட் எல்லாம் சரியானால் இந்த விடயத்தில் உன்னால் கலாநிதி பட்டம் செய்யலாம்” என்றாள்.

ஏற்கனவே அரசின் “சோஷல் அலவன்ஸ்” எனப்படும் வேலை இல்லாதவர்களுக்கு கொடுக்கும் உதவி பணத்தில்தான் குடும்ப வண்டி இழுத்தபடி ஓடுகிறது. இன்னும் இரண்டு வாரங்கள் சமாளிப்பது பெரிய விடயம் அல்லவே. அதைவிட மேல் படிப்பு, டாக்டர் பட்டம் எனப் பல தகமைகள் தேடி வருகிறது.



படிப்பதற்கு தரப்படும் உதவிப் பணம் எப்படியும் குடும்பத்தை பராமரிக்க போதுமானதாக இருக்கும் என்ற எண்ணத்தில், வசந்தனது மனத்தில் இப்பொழுது, அவன் வெள்ளை கோட்டை அணிந்தபடி விஞ்ஞானியாக வலம்வரும் கனவுகள் அவனை சுற்றி தலையிலும் தோளிலும் பட்டாம்பூச்சிகளாக சிறகடித்தன.

அதற்கு "சரி" என்றதும் இருவரும் பரிசோதனை சாலையை சுற்றி வந்தனர். அங்கு பலர் கம்ப்யூட்டரிலும் பரிசோதனை மேசையிலும் வேலை செய்தபடி

அவர்களை நோக்கி கைகளை அசைத்தபோது, "நானும்அவர்கள் மத்தியில் அமர்ந்து வேலை செய்வேனா? இதுவரை ஓடியாடி மிருக வைத்தியம் செய்த எனக்கு பொறுமையாக ஒன்றை திருப்பி திருப்பி திருப்பி ஒன்றையே ஆய்வு செய்வது பொருந்துமா" என்ற அங்கலாய்ப்பு நினைவுகள் மனதிலே குமிழியிடாது இருக்கவில்லை. அதையும் மீறி நமது தலையில் எது எழுதியுள்ளதோ அதுவே நடக்கும் என்ற நினைவு மனத்தில் அணைபோட அவன் அமைதி அடைந்தான்.

பரிசோதனைச் சாலையை சுற்றி வந்தபின் ஒரு இடத்தில் கதிரை, மேசை. அதன்மேல் ஒரு ஆப்பிள் கம்பியூட்டர் என வந்ததும், "இதுவே இப்போதைக்கு உனது வேலை செய்யும் இடம். எனது ஆய்வில் செம்மறிகளை தாக்கும் ஒரு வகை பூச்சிகள், அவை இலையான் போல் மழைக்காலத்தில் நனைந்த செம்மறிகளின் ரோமங்களில் முட்டை போடும். அவை முக்கியமாக வாலுக்கு அருகிலோ அல்லது குதப்பக்கத்தில் இந்த முட்டைகள் பொரித்து புழுவாகும்போது அந்தப் புழுக்கள் செம்மறியின் உடலைத் தாக்கி உணவு எடுக்க, செம்மறிகளது தோல் காயமடைகிறது. அப்போது அந்தப் பகுதி ரோமங்கள் சிதைந்துவிடும். இதனால் அந்த கம்பளிகள் தரமற்றதாகும். செம்மறியின் உடல் மெலிந்து விடும். இவற்றால் விவசாயிக்கு இறைச்சி, ரோமம் என பெரிய பொருளாதார நட்டம் ஏற்படும்" என்றாள்.

"இதையேதான் ஃப்ளோ ஃபிளையின் தாக்கம் எனப் படித்துள்ளேன்."

"அதுவேதான், அதற்காக நாங்கள் அந்த புழுக்களுக்கு எதிராக தடை மருந்து ஒன்றைத் தயாரிக்க விரும்புகிறேன். அதுவும் இந்த தோலைத் தாக்கும் புழுக்கள் உருவாக்கும் ஒரு நொதியத்தின் மூலத்தை தயாரிக்கும் நிற முகூர்த்தத்தை எடுத்து அதிலிருந்து தடை மருந்து தயாரிக்க விரும்புகிறேன். அதற்கான டிஎன்ஏயை (DNA) அந்த புழுக்களின் தலையில் அதிகம் இருக்கிறது எண்ணுவதால் அதை எடுத்துப் பரிசோதனைக்காக பாக்டீரியாவின் உள்ளே வளர்த்து அதை தடை மருந்தாக செம்மறிகளுக்கு ஏற்றவேண்டும்."

"எனக்கு இப்பொழுது புரிந்தது" என்றான்.

"நல்லது, இப்பொது புழுக்கள் எங்களிடம் திரவ நைட்ரஜனில் உள்ளது" என்று சொன்னாள்.

சொல்லியதோடு நிறுத்தாது பெரிய பால் தகரம் போலிருந்த ஒன்றைத் திறந்தவுடன் அங்கிருந்து புகைந்து, அதற்குள் இருந்து அகப்பை போன்ற ஒன்றினால் சிறிய தேமாஸ்பிளாஸ்கை எடுத்து காட்டி, "இதற்குள் புழுக்கள் உள்ளன. இவற்றின் புழுக்களை எடுத்து அவற்றின் தலையை மட்டும் வெட்டி எடுக்க வேண்டும். கையுறை போட்டு இதை எடுக்க வேண்டும்."

அந்த பிளாஸ்கை தந்து ஒரு சிறிய கத்தியுடன், "தலையை வெட்டி சேமித்து மீண்டும் ஒரு சிறிய தெமாஸ்பிளாஸ் உள்ளே போடவேண்டும். இப்பொழுது செய்து பார்" என்று சொல்லி ஒரு வெள்ளை அங்கியும் தந்தாள்.

அது நைட்ரஜன் திரவம் என்பது வசந்தனுக்கு ஏற்கனவே தெரியும். இலங்கையில் மாடுகளின் விந்துக்களை அதில் சேமித்தே பல இடங்களுக்கு செயற்கை கருக்கட்டலுக்கு அனுப்புவார்கள் என்பதால் பழக்கமானவை.

கிட்டத்தட்டஒரு மணி நேரம் அந்த புழுக்களை தலைகளை சிரச்சேதம் செய்து, முண்டங்களை கிண்ணத்தில் போட்டான். ஆரம்பத்தில் கடினமாக இருந்தாலும் கிட்டத்தட்ட ஐநூறு புழுக்களின் தலைகளை வெட்டிவிட்டான். மதியம் ஆகிவிட்டது மீண்டும் வசந்தனிடம் வந்து, "வேலை எப்படி?" என்றாள்.

"பிரச்சனை இல்லை. வெட்டிய புழுக்களின் முண்டங்களை என்ன செய்வது?" என்றான்.

அந்த முண்டங்களைக் கொண்ட கண்ணாடி ஜாரை கையில் எடுத்து பரிசோதனை சாலையின் பின் கதவை திறந்து அங்குள்ள புல் தரையில் வீசி எறிந்தாள். "புல்லுக்கு உரமாகட்டும்" என சிரித்துவிட்டு, "உணவு கொண்டு வந்திருக்கமாட்டாய். நாளை வா" என்றாள்.

வசந்தனுக்குத் தெரியும், அப்படி எறிவது தவறு, இப்படியானவைகள் எரிக்கப்பட வேண்டும்.

வீடு வந்ததும் மனைவியுடன் அன்று நடந்தவைகளை பகிர்ந்துகொண்டான் வசந்தன்.

**வ**சந்தகாலத்து இளவெயிலில் கையில் ஊசியுடனும் தோள் பையில் தடை மருந்துடனும் செம்மறிகளுக்கு வக்சினேட் பண்ண ஒரு பண்ணையில் நிற்பது போன்று உணர்ந்தான். சிறிது தூரம் புல்வெளியில் நடந்தபோது பல நூற்றுக்கணக்கான செம்மறிகள் கூட்டமாக மேய்த்து கொண்டிருந்தன. அவன் அவைகளை நெருங்கியபோது அவைகள் மீது இலையானகளாக ஃப்ளோ ஃபிளை மொய்த்தபடி இருந்தன. அவை குளவிகள் போல் இரைந்தபடி வசந்தனைக் நோக்கி வந்தபோது அந்த பகுதியில் கருமுகில்போல் படர்ந்து அந்த இடமே இருண்டது. எதிரில் அவைகளைத் தவிர எதுவும் தெரியவில்லை. அவை சிறிய விமானத்தின் ஓசையுடன் இரைந்தபடி அவனை நோக்கி வர அவன் ஓடினான். அவை விடவில்லை இறுதில் தடக்கி புற்கள்மேல் விழுந்தான். அவைகள் அவனை மொய்த்து ஒரு பாம்பின் சீறும் ஓசையுடன் வானத்தில் அவனை இழுத்தபடி பறந்தன. பயத்தின் கண்களை மூடிவிட்டான்.

எவ்வளவு நேரம் எனத் தெரியவில்லை. அவன் கண்ணைத் திறந்து பார்த்தபோது, மரத்தில் மோதி சிறகொடிந்த பறவையாக நிலத்தில் விழுந்து கிடந்தான்.

கண்களை அகலமாக விரித்து சுற்றிப் பார்த்தபோது ஒரு வீட்டின் பின்பகுதி, நாலா பக்கமும் பலகை வேலியிருந்தது. அவன் நின்ற இடம் உயரமான இடம். சிறிது பதிவான இடத்தில் வேலியோரத்தில் ஒரு கூடாரம். பச்சைக் கண்ணடிக் கூரை, இரும்பு கம்பியுடன் மற்றும் பிளாஸ்ரிக் கதவு என நமது ஊர்களில் கோழிக் கூடுபோல், ஆனால், உள்ளே பச்சை லைட் எரிந்தது. அந்தக் கூட்டைக் கடந்து வீட்டின் முன்பக்கம் சென்றான்.

யாரோ ஒருவர் வீட்டின் பின் பக்கத்தில் அந்தப் பூச்சிகள் அவனை இறக்கி விட்டு சென்றுவிட்டன என்பது மெதுவாக புரிந்தது. வீட்டின் முன்கதவைத் தட்டினான். அப்பொழுது கதவை திறந்தபடி சூசன் வந்தாள்.

''எப்படி இருக்கிறாய்? நான் நினைத்தேன், நீ வருவாய் என்று?''

அவன் பதில் சொல்லாது அவளே பதில் சொன்னாள்.

''எனது புழுக்கூடு பார்த்தாயா? வா அங்கு கூட்டி செல்கிறேன்'' என பதிலை எதிர்பார்க்காது வீட்டின் பின்புறம் சென்றாள். அவளது பின் அசைவுகளைப் பார்த்தபடி அவளைப்பின் தொடர்ந்தான். ஏற்கனவே அவன் பார்த்த கூட்டின் கதவைத் திறந்து ''உள்ளே வா'' என்றாள்.



அவனும் அவளைத் தொடர்ந்தான். பச்சை வலைகள் போட்டு பாதுகாப்பான கூட்டின் உள்ளே, கண்ணாடிப் பெட்டிகள். அதன் உள்ளே பச்சை லைட் எரிந்தது. அங்கு பல புழுக்கள் உயிருடன் வெள்ளையாக மிதந்தன. சில அந்த கண்ணாடி உள்பக்கத்தில் ஊர்ந்தன. பெட்டிகளின் கதவைத் திறக்காது, கையால் சுட்டியபடி, ''இந்த புழுக்கள் மிதக்கும் திரவகம், செம்மறிகளின் இரத்தத்திற்கு சமமான, போஷாக்குடன் நான் உருவாக்கியது. இதில் உருவாக்கும் புழுக்களில் அதிகமாக நொதியம் இருக்கும் என நம்புகிறேன். சாதாரணமாக பண்ணையில் செம்மறிகளில் வளரும் புழுக்களோடு ஒப்பிடவேண்டும்'' என்றாள்.

வசந்தன், அவள் வித்தியாசமாக இருக்கிறாள் என நினைத்தபடி வெளியே வந்தபோது மீண்டும் வீட்டுக்குள் சென்றாள்.

''இந்த கூண்டுள் சென்றால் நான் உடனே குளிப்பது வழக்கம்'' என சொல்லிவிட்டு குளியல் அறையை நோக்கிச் சென்றாள்.

''நான் குளிக்க தேவையில்லையா?'' என்றான் வசந்தன்.

அவள் கழுத்தை வெட்டி தன்னைச் சுதாரித்தபடி, ''நான் குளித்த பின் பாத்ரூம் காலி. நீ குளி'' என்றாள்.

அவள் சென்றதும் வசந்தன் அவளது முன்னறையை ஆராய்ந்தான். புத்தக அலமாரியில் உள்ள புத்தகங்களை எடுத்துப் பார்த்தபோது விவசாயம், விலங்கு மருத்துவ புழுக்கள் பற்றிய புத்தகங்கள் இருந்தன. வேறு வகையான எதுவும் இல்லை. அந்த அலுமாரியில் அவளது பட்டம் பெற்ற படம் உள்ளது. அவை சீனா-சாங்காய் பல்கலைக்கழகத்தில், பின்பு சிட்னி பல்கலைகழகத்தில் பெற்றவையாக தெரிந்தது. விவசாயப் பட்டத்தை சீனாவிலும் பின்பு மேற்படிப்பை சிட்னி பல்கலைக்கழகத்திலும் படித்திருக்கிறாள். கலாநிதி பட்டம் பெற்றவள். அத்துடன் ஒரு மகளோடு சில படங்களும் உண்டு. அவளுக்கு மகள் உண்டு. ஆனால், கணவருடன் எதுவும் இல்லை. விவாகரத்து பெற்றோ கணவனைப் பிரிந்தோ இருப்பவளாக இருக்கலாம் என்ற முடிவுக்கு வந்தான்.

அவனது ஆய்வை முடித்துவிட்டு, சிறிது நேரம் அங்கு கதிரையில் இருந்தபோது வந்தாள். ஈரமான கேசங்கள் தலையிலும் அவளது வெள்ளை பிஜாமாவில் ஒட்டியபடியும் இருந்தன. முழங்கால் வரையும் பிஜாமா மறைத்த அவளது மஞ்சள் கால்களின் அழகு, கவர்ச்சியாக இருந்தன. அவளை ரசித்தபடி இருந்த வசந்தனிடம் தலைமயிரை டவலால் துடைத்தபடி முகத்தை திருப்பாது, ''இலங்கையில் முக்கியமாக எந்த விலங்குகளில் மருத்துவம்செய்தாய்?''

''ஆடு, மாடு சில தடவை யானை மட்டுமே. எங்களூரில் செம்மறி கிடையாது'' என்றான்.

''யானையோ?'' என்று ஆமண்ட் கண்களை அகல விரித்தபடி திரும்பினாள்.

''ஓம் யானை காட்டில் நடக்கும்போது காலில் குத்தும் முள்ளுகள், இக்காலத்தில் போத்தில் உடைந்த கண்ணாடிகள் போன்றவையால் ஏற்படும் காயங்களுக்கு மருந்து போடுவோம். அவை இலகுவாகவாக குணமடையாது.''

''எப்படி மருந்து கொடுப்பது?''

''பெரும்பாலும் அன்ரிபயோட்டிக் கலந்த களிம்புகள் தடவுவோம். அதிக காலம் செல்லும். காயம் குணமடைய.''

''அப்ப நானும் யானைபோல'' என்றாள்.

திடுக்கிட்டான். ஆனாலும் வெளிக்காட்டாது, ''ஏன்'' என்றான்.

''எனக்கும் இந்தப் புழுக்கள் கடித்து வந்த காயம் குணமடைகிறதில்லை. தினமும் மருந்து போடுறேன். இப்பொழுது போடவேண்டும்'' என்றாள்.

''நான் அந்த காயத்தைப் பார்க்கலாமா?'' என்றான்

''நான் ஆடா மாடா? மனிதப் பிறவி!'' என சிரித்தாள்.

''மன்னிக்கவும்.'' அவனது தவறை உணர்ந்ததும் உதடுகளை கடித்துக்கொண்டான்.



''பரவாயில்லை, மேலே வா. எனது படுக்கை அறையில் மருந்து உள்ளது'' என்று வேகமாக மாடிப்படிகளில் சென்றாள். அவளைத் தொடர்ந்தான்.

பெரிதாக இருந்த அறையில் சென்று, அங்கிருந்த குளியல் அறை உள்ளே போய் ஒரு பச்சை ருயூப்பை கொண்டு வந்து படுக்கையில் அமர்ந்தாள்.

''அருகில் வந்திரு'' என படுக்கையை காட்டிய போது வாசலருகே நின்ற வசந்தன் கட்டிலின் ஓரத்தில் இருந்தான்.

சூசன் கையிலிருந்த பச்சை ருயூபை தந்து விட்டு வசதியாக தலையணையில் சாய்ந்தபடி திரும்பி முதுகை காட்டினாள். அவளது கழுத்துக்கும் இடுப்பிற்கும் சரியா இடைப்பட்ட தூரத்தில் இடது புறத்தில் சிறிய இரு காயங்கள் ஒன்றின்மேல் ஒன்றாகத் தெரிந்தது. இரண்டு சிவப்பு ரோஜாக்களின் முகைகளை அதிகாலையில் காண்பதுபோல் சிறிது அவிழ்ந்து இருந்தது. அந்த ரோஜா முகைகள் நடுவே காலையில் வெட்டிய அதே புழுக்கள் நெளிந்தன.

''என்ன மருந்து போடுகிறாயா?'' என்ற குரல் ஆழத்திலிருந்து கேட்டது. வசந்தனுக்கு தலை சுற்றி உடல் வியர்த்து. கண்ணை விரிக்க முடியாது மயக்கம் வருவது போல் இருந்தது. அப்படியே கட்டிலில் விழுந்தான்.

அவன் கண் விழித்தபோது, இப்பொழுது படுக்கையில்லை. ஆகாயத்தில் பறந்து கொண்டிருந்தான். கீழே வீடுகள், தெருக்கள், கட்டிடங்கள், வாகனங்கள் எனத் தெரிந்தன. இறுதியில் கிரிக்கெட் மைதானம் போலிருந்த புல்வெளி ஒன்றின் மேலே பறந்தபோது வேகம் குறைந்து பூமியை நோக்கி வேகமாக வந்து இறுதியில் தடால் என ஓசையுடன் விழுந்தான்.

விழுந்தவன் அதிர்சியடைந்து சுற்றி பார்த்தபோது அவனுக்கும் மனைவிக்கும் இடையில் இரண்டு பிள்ளைகளும் படுத்திருந்தார்கள்.

**வ**சந்தன் கனவு என நம்ப நினைத்தாலும் இப்படி கனவா என்ற சந்தேகத்துடன் மெதுவாக எழுந்து சென்று ஃபிரிஜில் இருந்து தண்ணீரை குடித்துவிட்டு வந்து காலுக்குள் தலையணையை வைத்துக்கொண்டு மனைவியை பார்த்தபோது அவள் மெதுவான குறட்டை விட்டபடி தூக்கத்தில் சிரித்தாள். அவளும் என்போல் கனவு கண்டிருப்பாளோ?

அவளை எழுப்பி கனவை சொல்ல நினைத்தாலும் பிள்ளைகள் தூக்கம் கலைந்தால் அவர்கள் நாளை காலையில் பாடசாலை செல்லவேண்டும் என்ற நினைப்பில் அடுத்த பக்கம் திரும்பி படுத்தான். ●

*mail to:* **uthayam12@gmail.com**



44

## முயங்கொலி குறிப்புகள்

# ஒளி

● கயல்
ஓவியம்: **ஞானப்பிரகாசம் ஸ்தபதி**

வெண்ணிற மலைமுகடுகள் நெடுக
எதையோ திசை திசையாய்த் தேடித்
தடுமாறுகிற மூடுபனியாய்
மாதுளைத் தேறலில்
திளைத்தெழுந்து
பிறந்ததில் இருந்தே உடலெங்கும் பூசியிருக்கிற
பசலையோடு
களுக்கெனச் சிரித்துக்கொண்டே
மல்லிப் பூ வாசம் சூடிச் சுடர்ந்து
பூரணப் பொலிவோடு தங்கியிருக்க
இடந் தேடியலைகிறது காமம்.

சில ஜன்னல்களில் எட்டிப் பார்க்கக்
கிடைக்கிறது
முன்னிரவின் தொலைக்காட்சி
பற்பல வீடுகளின்
படுக்கையறை இரவு விளக்கில்
தெரிகிறது
பணி முடித்து அயர்ந்துறங்கும்
சிறிது வீங்கிய பாதங்கள்
கேளிக்கை விடுதிகளில்
சீழ்க்கையடித்தபடி நுழைந்த
வேகத்தில் வெளியேறுகிறது
பாசாங்கான முனகல்களின் நாராசத்தில்



வேட்டையாடியின் பொறுமையுடன்
இழக்க ஏதுமற்றவரின் சினம்போலக்
காத்திருக்கிறது
மூன்று புறங்களில் இச்சையும்
மிஞ்சிய ஓர் புறம் காதலும்கொண்டு
துள்ளும் உடலிரண்டு
களித்துப் புனலாடி
குதூகலித்துக் கரையேறிக்
கொஞ்சி அலையாடும்
காட்சிக்காய்
மேகத் திரள் கண்ட
மழைத் தட்டானாய்ப் படபடக்கிறது
காமத்தின் சிறகுகள்

இறுதியில்
தோற்றுப் போய்க்
காலத்திடம் மண்டியிடுகிறது.
திரை விலகுகிறது.

தன் முகத்தை
அதுகாறும் அணிந்து
கள்ளத்தனமாய்ச் சுற்றிக் கொண்டிருந்தது
காதல் எனும்
பேருண்மை நேரிடக் கண்ட
காமம் வாயடைத்துப் போனது
அன்றிலிருந்துதான்.

தொடரும்

*mail to:* **dr.kayalvizhi2020@gmail.com**

# பண்ணைப்புரம் முதல் லண்டன் வரை!

● பிரபு திலக்




எந்த சூழ்நிலையிலும் எந்த வயதிலும் நம்பிக்கையை இழக்க வேண்டாம் என்னும் பாடத்தை, இளைஞர்களுக்கு மட்டுமல்ல, அனைவருக்கும் தந்திருக்கிறார் இளையராஜா. லண்டன் 'ஈவெண்டிம் அப்பல்லோ' அரங்கத்தில் மார்ச் 8 அன்று தனது 'வலியன்ட்' சிம்ஃபொனி இசையை அரங்கேற்றியுள்ளார். இளையராஜா இசைக் குறிப்புகளுக்கு ராயல் பில்ஹார்மோனிக் ஆர்கெஸ்ட்ரா (Royal Philharmonic Orchestra) குழுவினர் இசை வடிவம் கொடுத்தனர். இளையராஜாவின் நீண்ட நாள் கனவு நிறைவேறியிருக்கிறது. சிம்ஃபொனி இசையமைத்த முதல் தமிழராக வரலாற்றில் கால் பதித்துள்ளார். தமிழ்நாட்டில் தேனி மாவட்டம் பண்ணைப்புரம் என்ற சிறிய கிராமத்திலிருந்து செருப்பில்லாத வெறும் காலுடன் புறப்பட்டு வந்த சிறுவன், தனது 82ஆவது வயதில் லண்டன் அப்பல்லோ அரங்கில் தனது கனவுக்கு உயிர் கொடுத்துவிட்டார்.

இளையராஜா சிம்ஃபொனி இசையமைப்பது இது முதல் முறையல்லல. கடந்த 1993ஆம் ஆண்டு இதே குழுவினருடன் சேர்ந்து சிம்ஃபொனி ஒன்றை இளையராஜா பதிவு செய்தார். அந்த சிம்ஃபொனியை இளையராஜா இசைத்த போது, பிரிட்டிஷ் கம்போஷர் ஜான் ஸ்காட்தான் நடத்துநராக (கண்டக்டர்) இருந்தார். இவர், ரிச்சர்ட் டொனர், நார்மன் ஜே.வார்னர் , மைக் ஹாட்ஜஸ், ஹட்சன் போன்ற புகழ்பெற்ற திரைப்பட இயக்குநர்கள், தயாரிப்பாளர்களுடன் பணியாற்றியவர். சிம்ஃபொனி என்பது மேற்கத்திய பாரம்பரிய இசை வடிவம். ஆனால், அந்த சிம்ஃபொனியில் பரிட்சார்த்தமாக சில இந்திய இசைக் கருவிகளையும் இளையராஜா சேர்த்திருந்தார். இதனால், மேற்கத்திய நாடுகளை சேர்ந்த இசை விமர்சகர்கள் அதை சிம்ஃபொனி என ஏற்றுக்கொள்ளவில்லை . மேற்கத்திய இசை வல்லுநர்களின் இந்த விமர்சனம் காரணமாக தான் இயற்றிய சிம்ஃபொனியை வெளியிட மறுத்துவிட்டார், இளையராஜா.



இது குறித்து ஜான் ஸ்காட்டிடம் கேள்வி எழுப்பிய போது, "நான் அந்த சிம்ஃபொனியை வெளியிட வற்புறுத்தினேன். ஆனால், இளையராஜா மறுத்துவிட்டார். இசை விமர்சகர்கள் என்ற பெயரில் இசையமைப்பாளர்களை அழிக்க நினைப்பவர்கள் பற்றி நிக்கோலஸ் ஸ்லோனிம்ஸ்கி எழுதியுள்ள 'LEXICON OF MUSICAL INVECTIVE' என்ற அற்புதமான நூலில் பல விஷயங்களை கூறியுள்ளார். இது பீத்தோவன் காலத்திலிருந்தே இருந்துள்ளது . விதிவிலக்கே இல்லாமல் இசை விமர்சகர்கள் பலரும் சிறந்த இசையமைப்பாளனை காணாமல் போக செய்துள்ளனர்" என்கிறார் ஜான் ஸ்காட்.

ஜான் ஸ்காட் கூறுவது போல் 'இதுதான் சிம்ஃபொனி...' என்று வரையறுத்து எளிதாகச் சொல்லிவிட முடியாது. மரபை உடைத்து புத்தாக்கம் செய்வதில்தானே கலைஞனின் அழகு இருக்கிறது. ஜோசப் ஹெய்டன், மொஸார்ட், பீத்தோவன் என இசை சாதனையாளர்கள் அடுத்தடுத்து சிம்ஃபொனி வடிவத்தைமேம்படுத்தி இசைக்கோர்வைகளை ஆழமாகவும் அடர்த்தியாகவும் பெரும் உணர்ச்சிமிக்கதாகவும் புதுமைமிக்கதாகவும் மாற்றிக்கொண்டே, மேம்படுத்திக்கொண்டே இருக்கின்றனர். மொஸார்ட், பீத்தோவன், சாய்கோவ்ஸ்கி வரிசையில் இப்போது தமிழரான இளையராஜாவும் அதை செய்துள்ளார்.

1993 சிம்ஃபொனிக்கு விமர்சனங்கள் எழுந்ததால், வேலியன்ட் சிம்ஃபொனிக்கு குறிப்புகள் எழுதும் போது, இளையராஜா கவனமாக இருந்தார். "என்னை ஒரு இந்தியனாகவோ தமிழராகவோ உணர்ந்துகொள்ளாமல் இருந்து இசை குறிப்புகளை எழுதினேன்" என இளையராஜா கூறியிருந்தது குறிப்பிடத்தக்கது.

விமர்சனங்களால் சோர்ந்துவிடாமல், தன்னை மேலும் மெருகேற்றி, 30 வருடங்களுக்கு பின்னர், 82 வயதில் தன் கனவுகளுக்கு உயிர் கொடுத்துவிட்டார்.

நமக்கு ஒரு பேரனுபவம்.

published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116.

Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.

Editor : PRABHU THILAAK

Posted at patrika channel egmore (Posted between 28-31st of Every month)
Date of Publications : 25th of every month Reg.No.TN/TBM/150/2024-2026. ISSN Number 2456-3447 Dated: 04/10/2016.
R.DisNo. 2010/2002 RNI. TNTAM/2006/17955 Licenced to Post without Prepayment No: TN/PMG(CCR)/WPP 722/2024-2026.